

# கலைமணி
# பாஸ்கரத் தொண்டைமான்
# கலைக் களஞ்சியம்

வெளியீடு
பாஸ்கரத் தொண்டைமான் நினைவு அறக்கட்டளை
பாஸ்கர நிலையம், சாஸ்திரி நகர்,
சென்னை – 600 020.

கலைமணி பாஸ்கரத் தொண்டைமான்
கலைக் களஞ்சியம்

வெளியீடு :

திருமதி இராஜேஸ்வரி நடராஜன்
திருமதி சரோஜினி சுப்பிரமணியம்
பாஸ்கர நிலையம், 10, 7வது குறுக்குத் தெரு,
சாஸ்திரி நகர், சென்னை - 20.
✆ : 24911615

✲

அச்சும் அமைப்பும் :

ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ்
2, சிவஞானம் சாலை, தி. நகர்,
சென்னை - 600 017. தொ.பே : 24361518

சித்திர அமைப்பு :

ஓவியக் கவிஞர் அமுதோன்

✲

அச்சிட்டோர் :

எஸ்.கே.பி. பிரிண்டர்ஸ், சென்னை -15.

விற்பனை உரிமை :

நிவேதிதா பதிப்பகம்
1, புதூர் 13 வது தெரு, அசோக்நகர்,
சென்னை - 83. தொ.பே. : 5568 8527

PRICE : **Rs. 200.00**

First Edition : September 2005

● **KALAIMANI BHASKARA THONDAIMAN KALAI KALANJIYAM**
a collection of Thondaiman's Life Incidents in Tamil ● Published by His Daughters Smt. Rajeswari Natarajan and Smt. Sarojini Subramanian, 10, 7th Cross Street, Sasthiri Nagar, Chennai - 20. ✆ : 2491 1615 ● DTP Executed at : Amma Systems, No. 2, Sivagnanam Road, T. Nagar, Chennai - 600 017 ✆ : 24361518 ● Printed at : S.K.B. Printers, Chennai - 15 ● Sales Right : Nivethitha Patippagam, Chennai - 83.

# சமர்ப்பணம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின்
தலை மாணாக்கராக இருந்த
**அருணாசலம் தொண்டமான்** முதல், அவர் தம்பி மகனான
**வி.பி. சிதம்பரத் தொண்டைமான்,** அவர் தம் திருக்குமாரர்
**பிரம்ம முக்தன் எனும் தொண்டைமான் முத்தையா,**
தொண்டைமான் முத்தையாவின் தலைமகன்
**கலைமணி பாஸ்கரத் தொண்டைமான்,** இளையமகன்
**சிதம்பர ரகுநாதன்** வரை,
வாழையடி வாழையாக தழைத்து
இலக்கிய உலகில் தடம் பதித்துச் சென்றிருக்கும்
நல்லதொரு கலைஞான, இலக்கிய பரம்பரைக்கு
இந்த நூல் அர்ப்பணம்.

ராஜேஸ்வரி நடராஜன்
சரோஜினி சுப்பிரமணியன்

பாஸ்கர நிலையம், சாஸ்திரி நகர், சென்னை - 20

ஐந்து கரத்தனை யானை முகத்தனை

இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை

நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்

புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

– திருமூலர்





குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில்
குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில்
பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும்
காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்
மாநிலத்தே!



ஞான சரஸ்வதி : கங்கை கொண்ட சோழபுரம்
வெள்ளைக் கமல வல்லி

# காந்திமதி
# தாயே வருக!

வாராதிருந்தால் இனி நான் உன்
வடிவேல் விழிக்கு மைஎழுதேன்
மதிவாள் நுதற்குத் திலகமிடேன்
மணியால் இழைத்த பணிபுனையேன்

பேராதரத்தி னொடு பழக்கம்
பேசேன் சிறிதும் முகம்பாரேன்
பிறங்கு முலைப்பால் இனிதூட்டேன்
பிரியமுடன் ஒக்கலையில் வைத்துத்

தேரார் வீதி வளங்காட்டேன்
செய்ய கனிவாய் முத்தம்இடேன்
திகழும் மணித் தொட்டிலில் ஏற்றித்
திருக்கண் வளரச் சீராட்டேன்

தாரார் இமவான் தடமார்பில்
தவழும் குழந்தாய் வருகவே!
சாலிப் பதிவாழ் காந்திமதித்
தாயே வருக வருகவே!

காந்திமதியம்மை பிள்ளைத் தமிழில் உள்ள வாரானைப் பருவத்திலிருந்து ஒரு பாடல்.

## ஆசியும் வாழ்த்தும்

*காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு*
***சங்கராச்சாரிய சுவாமிகள் அருளிய ஆசி.***

**கலாமணி தொண்டைமான்**
**ஸ்ரீ பாஸ்கர சில்ப கல்பக**
**ஷஷ்டி பூர்த்யுத்ஸவே**
**சர்வ மங்களா கருணாஸ்பதம்**

கலைமணியும் சிற்பக் கலையில் ஈடுபட்டவருமான
ஸ்ரீபாஸ்கரத்தொண்டைமானுடைய
ஷஷ்டி சப்த பூர்த்தி உத்சவத்தில்
சர்வ மங்களங்களையும் அளிக்கவல்ல பரதேவதை
கருணை புரிவாளாக!

# பாராட்டுரை

## *சி. ராஜகோபாலாச்சாரி*

"பாஸ்கரனது உள்ளம் ஆனந்தப்படுகிற உள்ளம். கும்மாளி போடுகிற உள்ளம், குழந்தை உள்ளமே" என்று டிகேசி ஒரு கடிதத்தில் எழுதினார். எந்த விஷயத்திலும் மெய்யைக் கண்டு எடுத்துக்காட்டி வந்த டிகேசி இந்த உண்மையைக் கண்டார். குழந்தை உள்ளம் படைத்தவர்கள் வெகுசிலரே. அதில் ஒருவர் பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள். அவருக்கு என் ஆசிகள்.

*60, பஸுல்லா ரோடு,*
*தி. நகர், மெட்ராஸ் - 17.*

# காந்திமதியம்மைப் பிள்ளைத்தமிழ்

*பேராசிரியர் – சொல்லின் செல்வர்*

***ரா. பி. சேதுப்பிள்ளை***

நெல்லையம்பதியின் எல்லையில் அமைந்திருப்பது தச்சனல்லூர் என்னும் சிற்றூர். அவ்வூரிலே நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன்னே தோன்றி, அழியாப் புகழ் பெற்ற கவிஞர் அழகிய சொக்கநாதர். அவர் வாக்கிலே ஒளியுண்டு, கவிதையிலே அழகுண்டு.

**"பந்தடிக்கும் மேடையிலே**
**வந்து விளையாடையிலே**
**பார்த்து நின்ற சாடையிலே**
**பறி கொடுத்தேன் என் மனசை"**

என்ற அழகிய சொக்கநாதர் பாட்டின் சுவையறியாதார் அறியாதாரே!

"திக்கெலாம் புகழும் திருநெல்வேலி" என்று திருஞான சம்பந்தப்பெருமான் புகழ்ந்து ஏத்திய திருநகரில் கோயில் கொண்டுள்ள காந்திமதியம்மையைப் பிள்ளைத்தமிழ் மாலை அணிந்து போற்றினார், அழகிய சொக்கநாதக் கவிஞர். கருணை வடிவாய் காந்திமதித் தாயார்,

**"மலையத் தமிழ்கேட்டு உளமகிழும்**
**வாழ்வே வருக வருகவே"**

என்று இக்கவிஞர் ஆர்வமுடன் அழைக்கும்பொழுது நம் செவிகளில் இன்பத்தேன் வந்து பாய்கிறது அப்பிள்ளைத் தமிழில் அமைந்த

**"வாராதிருந்தால் இனிநான் உன்**
**வடிவேல் விழிக்கு மை எழுதேன்"**

என்ற திருப்பாட்டு, கற்றார்க்கும், கல்லார்க்கும் களிப்பருளும் களிப்பாகும்.

இத்தகைய இனிய தமிழ்ப் பாட்டிசைத்த கவிஞரை ஆதரித்த செல்வர், முத்துச்சாமி வள்ளல், அவர் நெல்லை மாவட்டத்தில் உள்ள இராசவல்லிபுரம் என்னும் நல்லூரில் தோன்றியவர். "தருநிகர் கொடையன் தெருளும், நன்னடையன்" என்று தக்கோரால் பாராட்டப் பெற்றவர். தமிழ் நலம் கொழிக்கும், காந்திமதியம்மைப் பிள்ளைத் தமிழை நல்ல வண்ணம் வெளியிட்டருளிய தச்சனல்லூர் கலை மன்றத்தார்க்கும், அந்நூலுக்கு அரும்பொருள் விளக்கம் அருளிய, பேராசிரியர் புன்னைவனநாத முதலியார் அவர்களுக்கும், தமிழகத்தாரது மனமார்ந்த நன்றி என்றும் உரியதாகும்.

சென்னை. ரா.பி. சேதுப்பிள்ளை
22.6.57




துறவியும் மங்கையும்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# தொண்டை அரசு

*ரசிகமணி டி.கே.சி*

தொண்டைநாடு என்பது சோழநாட்டுக்கு வடக்கே உள்ளது. பல சந்தர்ப்பங்களில் சோழ நாட்டோடு ஒன்றாய் இருந்ததுண்டு. வேறுபட்டு தனித்திருந்ததும் உண்டு. சோழனது உறவினர்களே, தொண்டை நாட்டை ஆண்டு வந்தார்கள். காஞ்சிபுரம் அவர்களுடைய தலைநகராய் இருந்து வந்தது.

தொண்டை நாட்டு அரசரில் ஒருவன் கடுமான் திரையன். அவனைப் பற்றி ஒரு கதை. புராணக் கதை.

சோழ மன்னன் ஒருவன் கிழக்கேயுள்ள ஏதோ ஒரு தீவின் மேல் படை எடுத்தான். அங்கே சில காலம் தங்க நேர்ந்தது. அங்குள்ள ஒரு பெண்ணை மணந்தான். அவள் கர்ப்பவதியாய் இருக்கும்போது, மன்னன் தன் நாட்டுக்குத் திரும்ப வேண்டிய அவசியம் நேர்ந்தது. அவனும் புறப்பட்டுவிட்டான்.

புறப்படும்போது, தீவகத்து மனையாளிடம், "குழந்தை பிறந்ததும், ஆண் குழந்தையாக இருந்தால் குழந்தையைப் படகில் வைத்து என்னிடம் அனுப்பிவிடு. நம்முடைய குழந்தை என்று இனம் கண்டு கொள்வதற்காக தொண்டைமாலையைக் கழுத்தில் அணிவித்து அனுப்ப வேண்டும்" என்று சொல்லிவிட்டுப் படகில் ஏறிப்போய்விட்டான்.

குழந்தை பிறந்தது. அதுவும் ஆண் குழந்தையாக இருந்தது. அரசன் சொன்னபடி, தொண்டைமாலையைக் குழந்தையின் கழுத்தில் அணிவித்து, ஒரு பொன் மயமான படகில் வைத்துக் கடலில் அனுப்பிவிட்டாள் தாய்.

படகு சோழநாட்டின் கடற்கரைப் பக்கமாக மிதந்து வந்து ஒரு மரத்தின் நிழலில் நின்றது.



இப்படி வந்து நின்ற விவரம் சோழனுக்குத் தெரிய வந்தது. விஷயம் தெரிந்துவிட்டது. கடற்கரைக்கு வந்து தொண்டைமாலை அணிந்திருந்த குழந்தையைப் படகிலிருந்து மெள்ளக் கையால் அணைத்தெடுத்து அரண்மனைக்குக் கொண்டு போனான். செல்லமாக வளர்த்து வந்தான் குழந்தையை.

குழந்தைக் காளைப் பருவம் அடைந்ததும், அரசன் தன்னுடைய ராஜ்யத்தின் வடபகுதியைத் தொண்டைநாடு என்று பெயரிட்டு அதற்கு அந்த மகனை அரசனாக்குகிறான். அவனுக்குத் தொண்டைமான் என்னும் பட்டமும் அளித்தான்.

தமிழ்நாடு இந்து தேசத்தின் தெற்குக் கோடியில் இருந்ததால் கொஞ்சம் சௌகரியமாகவே காலம் தள்ளிற்று. திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், காவிரிப்பூம்பட்டினம் இவற்றை முக்கிய நகரங்களாகக் கொண்டு, காவிரி ஆற்றின் வளத்தினால் சௌகரியமாய் வாழ்ந்து வந்தது சோழநாடு. கொற்கை ஆகிய நகரங்களைக் கொண்டு, வைகை, தாமிரபரணி நதிகளின் வளத்தினால் பாண்டி நாடும் வளமாகவே இருந்தது.

அப்படியே கொச்சி, பாலக்காடு முதலிய நகரங்களோடும் பெருமிதமான வளத்தோடும் சேர நாடும் சௌகர்யமாய் இருந்து வந்தது.

ஆனால் தொண்டைநாட்டின் காரியம் வேறு. காஞ்சிபுரம், மயிலாப்பூர், மாமல்லபுரம், தொண்டை நாட்டுக்குரிய நகரங்கள். நீர் வளம், நிலவளத்துக்கும் குறைவில்லைதான். அனாலும் வடநாட்டிலிருந்து படையெடுப்பும் கொள்ளையும், அடிக்கடி தொந்தரவு கொடுத்து வந்தன.

இது காரணமாகத் தொண்டை நாட்டரசர்கள் சேனைகளைச் சரியான முறையில் தயாராக வைக்க வேண்டியிருந்தது. அது நல்ல யுத்தப் பயிற்சியைக் கொடுத்தது தொண்டை நாட்டாருக்கு.

யுத்த வீரர்களும், தளவாடங்களும் தொண்டை நாட்டில் இருந்தது போல, வேறெங்கும் இருக்கவில்லை.

சோழர், பாண்டியர், சேரர் ஆகிய மூவேந்தர்களும், தொண்டை நாட்டு அரசனுக்கு எல்லாவிதத்திலும் துணைபுரிந்து வந்தார்கள். அவனுடைய தயவை சதா எதிர்பார்த்தவர்களாய் இருந்தார்கள். இனி -

அரசர்களுக்குக் கொடிகள் உண்டு. அவரவர்களுடைய கொடிகளுக்கான சின்னங்களும் வேறு வேறாக உண்டு.

சோழனுக்குத் திருவாத்தி மரம் (தாதகி) கொடியில் எழுத வேண்டிய சின்னம். பாண்டியனுக்கு வேப்பமரம், சேரனுக்குப் பனைமரம், தொண்டை நாட்டரசனுக்கு, வேலியில் படருகிற தொண்டைக் கொடிதான். ஆதொண்டை என்றும் சொல்வார்கள் அதை.

ஆனாலும் ஒன்று, படரும் கொடியானாலும் சரி, பெரிய வேப்பமரம் ஆனாலும் சரி. விஷயம் கொடி அல்ல, மரம் அல்ல, கொடிப் படலத்தின் விஸ்தாரந்தான் விஷயம். தொண்டைமானது கொடியின் படல விஸ்தாரமே, அவனுடைய ஆதிக்கத்தைக் காட்டுவது. சேர, சோழ, பாண்டியர்களது கொடிகளின் ஒடுக்கமே, அடங்கியுள்ளார்கள் அவர்கள் என்பதைக் காட்டும்.

தொண்டைமானது கொடி வெகு விசாலமாகப் பரவி நிழலிடுகிறது. மற்றக் கொடிகள் அதன் நிழலின் கீழ் ஆடுகின்றன.

இந்தக் காட்சியைக் கம்பர் பார்த்தார். பாடுகிறார்.

திருவாத்தியில் ஏற்பட்ட மஞ்சள் பூவோடு சிவந்த பூக்களும் தெரிகின்றன, சோழனது வெற்றிப் பிரதாபங்களைக் குறிப்பதற்கு.

**வெற்றிபுனை தாதகிக்கும்**
**பெண்ணைக்கும் வேம்புக்கும்**
**சுற்றும் பெருநிழலாய்த்**
**தோன்றுமே, கற்றோர்**
**திறந்தாங்கும், மன்னு**
**செகந்தாங்கும் எண்ணில்**
**அறந்தாங்கும் தொண்டை**
**அரசு.**

மரங்களை வைத்து அழகாய் ஜோடித்திருக்கிறது, தொண்டை மானது புகழ். அற்புதமான நடன ஜதி ஒன்றை ஆடிவிட்டுப் போகிறது கவி.

# தொண்டைமான் பரம்பரை

*ராஜேஸ்வரி நடராஜன்*

**வண்டமர்ப் பன்மலர் தண்டலைப் பாங்குஎலாம்**
**வளமிகும் நெல்லையூரில் வடக்கன வரததானத்**
**தெருசெய்த வழிபாட்டில் வந்த மேலோன்**
**தண்டாயுதன் முருகதாசன் திருப்புகழ்ச் சாமிக்குநல்**
**சீடா! சண்முகநாத குமரேசன் திருத்தாள்கள்**
**சந்ததம் போற்றுமெய்யா**
**கண்டாரும் செந்தமிழ் வண்ணமொடு பாவினம்**
**கழறலே கமழும்வாயோன் கருணையே வடிவான**
**அருணாசலத் தொண்டைமானெனும் கன்னல்மொழியாய்**
**தண்டாமரைப் பதத்தானைச் சூடினேன்**
**சாற்றுமென் புன்கவிக்குத் தவறுபதம் சாராது**
**தளைகள் தடுமாறாது தந்தருள் சிற்றப்பனே.**

என்று ஒரு பாடல். இந்தப் பாடலைப் பாடியவர், என் தந்தையார் தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் அவர்களின் பாட்டனார் அமரர் வி.பி. சிதம்பரத் தொண்டைமான் அவர்கள்தான். இந்தப் பாட்டிலிருந்து நாம் அறிந்து கொள்வது அந்தச் சிதம்பரத் தொண்டைமான் ஒரு கவிஞர், அவர்களது சிற்றப்பா ஒரு கவிஞர். அவர் அருள்மிகு தண்டபாணி சுவாமிகளது சிஷ்யர் என்பதே. இதிலிருந்து தெரியும் என் தந்தையார் ஒரு பெரிய புலவர் பரம்பரையைச் சேர்ந்தவர் என்று. அந்தப் பரம்பரையைப் பற்றியே ஒரு சில வார்த்தைகள்.

திருநெல்வேலியில் இருக்கும் தொண்டைமான் குலமக்களாகிய நாங்கள் திருநெல்வேலியைச் சேர்ந்தவர்கள் அல்ல. அந்தப் பெரும்பாணாற்றுப்படை பாட்டுடைத் தலைவனாம் தொண்டைமான் இளந்திரையன் வழிவந்தவர்களே. ஆதியில் தொண்டை மண்டலத்தில் கலை வளர்த்த காவலர்களாக இருந்த பல்லவப் பேரரசர்களில்

பலர் தொண்டைமான் என்ற பட்டப் பெயரையே தாங்கியவர்கள் என்பதை சரித்திர ஆசிரியர்கள் நன்கு அறிவார்கள். இலக்கிய அறிஞர்களோ நந்திக்கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவனாம் நந்தியம் பெருமான் தொண்டைமானையும், கலிங்கப்போரில் வெற்றி கண்டு ஜயங்கொண்டானால் பரணி பாடப்பெற்ற கருணாகரத் தொண்டைமானையும் அறிவார்கள். இவர்கள் பரம்பரையிலே வந்தவர்கள்தான் புதுக்கோட்டை ஒன்றைக் கட்டி அதன் அரசர்களாய் வாழ்ந்திருக்கிறார்கள். இந்த அரசப் பரம்பரையைச் சேர்ந்த மூன்று சகோதரர்கள் ஏதோ குடும்பத்தில் ஏற்பட்ட மனத்தாங்கல் காரணமாக புதுக்கோட்டையை விட்டுப் புறப்பட்டுத் தெற்கு நோக்கி நடந்திருக்கிறார்கள். அப்படி வந்தவர்கள் தென்பாண்டி நாட்டில் பொதிகை மலைச் சாரலில் தங்கி வாழ்ந்திருக்கிறார்கள். திருக்குற்றாலம், பாபநாசம், திருச்செந்தூர் முதலிய இடங்களில் மடாலயங்கள் நிறுவி அறக்கட்டளைகள் நடத்தி இருக்கிறார்கள். அப்படி வந்து தங்கிய அரச சகோதரர் ஒருவரின் பரம்பரையே எங்கள் பரம்பரை. அந்தப் பரம்பரையில் வந்த பெரியார்களை எல்லாம் எனக்குத் தெரியாது. நான் சிறிய பெண்ணாக இருக்கும்போது உயிரோடிருந்தவர்கள் என் தந்தையாரின் பாட்டனார், எனது பூட்டனார் திரு. சிதம்பரத் தொண்டைமான். எனக்கு வயது பன்னிரண்டு நிறையு முன்பே இறைவனடி சேர்ந்துவிட்டார்கள். ஆதலால் அவர்களது தோற்றம் குணநலம் ஒன்றும் எனக்கு ஞாபகம் இல்லை. என்றாலும் அவர்கள் எழுதிக் கையெழுத்துப் பிரதியாக வைத்துவிட்டுப் போன பாடல்கள் எங்கள் வீட்டில் இருக்கத்தானே செய்கிறது. அதிலிருந்தும் என் தந்தையார் சொல்லும் கதைகளில் இருந்தும் பல விஷயங்கள் தெரிந்துகொண்டேன்.

அந்தச் சிதம்பரத் தொண்டைமான் அவர்களின் சிற்றப்பாதான் அருணாசலத் தொண்டைமான் என்பவர்கள். அவர்கள்தான், வண்ணச்சரபம் திருப்புகழ்ச்சாமிகள் முருகதாச சுவாமிகள் என்றெல்லாம் தமிழ் உலகம் நன்கறிந்த பெரியார், அருள்மிகு தண்டபாணி சுவாமிகளது முதல் சிஷ்யர். எனது பூட்டனார் சிதம்பரத் தொண்டைமான் அவர்களும் அதே முருகதாச சுவாமிகளின் கடைசிக் காலத்தில் சிஷ்யராகச் சேர்ந்தவர்கள். ஆகவே எங்கள் குரு பரம்பரை மிகச் சிறப்பானது என்று நாங்கள் பெருமையோடு சொல்லிக் கொள்ளலாம் அல்லவா?

முருகதாச சுவாமிகள் குமரனை வழிபட்டு உயர்ந்தவர். வழிபாடு என்றால் சாதாரண வழிபாடு அல்ல. முருகப்

பெருமானையே நேருக்கு நேர் கண்டு அளவளாவும் பேறு பெற்றவர். ஒருநாள் திருக்குற்றாலத்தை அடுத்த திருமலை முருகனைத் தரிசிக்க மலைமீது ஏறி, தரிசித்த பின் அம்மலை உச்சியில் நின்று மலைச் சரிவிலே உருண்டிருக்கிறார். அவரது பக்தியை மெச்சிய ஆண்டவன் அவர் உடலுக்கு யாதொரு தீங்கும் நேராவண்ணம் காத்திருக்கின்றான். இதை முருகதாச சுவாமிகளே பாடியிருக்கிறார்கள். அவர்கள் பாடிய பாட்டு இதுதான்.

**வடதிசையில் தலைவைத்து**
**மறலி திசைக் கால்நீட்டி**
**உடலை அந்தத் திருமலையிற்**
**உச்சியின் நின்று உருட்டிவிட்டேன்**
**விடலையிடும் தேங்காய் போல**
**வேறு பட்டுச் சிதறாமல்**
**மடமடவெனக் கொண்டாங்கோர்**
**மண் தரையில் விட்டதுவே.**

இப்படி முருகன் அருள் பெற்றுயர்ந்த முருகதாச சுவாமிகளின் சிஷ்யர்களாகவே எனது பூட்டனாரும், அவர்கள் சிறிய தந்தையும் இருந்திருக்கிறார்கள். அருணாசலத் தொண்டைமான் என்னும் கவிஞர், தன் குருநாதரைப் போலவே வண்ணங்களும் சந்தங்களும் பாடுவதில் சமர்த்தர். அவர்கள் செந்திலம்பதி இரட்டை, செந்தில் வண்ணப் பதிகம் எல்லாம் பாடியிருக்கிறார்கள். மேலும் அகப்பொருள் அடிப்படையில் பிறிவுழி இரங்கல் துறையில் தனது குருநாதரைப் பற்றியும் பாடியிருக்கிறார்கள். அதன் முதல் பாட்டு,

**சோதிமிகுஞ்சடையார் திரு நீலகண்டமுளார்**
**சிவகாமசுந்தரி பாகமொன்றிய**
**சோமசுந்தரர் தம்பதந்தேடியே**
**நாடியருந்தவமே செய லால்வரம்பெறுநாள்**
**மலர்தவே னிந்திர னாதியந்தரர்**
**வாழ்விழந்துவ ருந்தவுஞ்சீறு**
**சூரன்மடிந்திடவே தனி வேல்விடுங்குகவே**
**ளிருபாதபங்கய மீதுநெஞ்சக**
**லாதுநின்றுத வஞ்செயுந்தீரர்**
**அருண்முருகதாசரெனையாளுவார்**

என்பதாகும்.

எங்கள் பூட்டனார் சிதம்பரத் தொண்டைமானும் பலப்பல பாடல்கள் பாடி உள்ளார்கள். அரங்கத்து அரவணையான் மீது பாடிய

ஸ்ரீரங்கநாதர் மாலைப் பாடல்கள் முப்பதுமே அச்சிடப் பெற்றிருக்கின்றன. அதில் ஒரு பாடல்,

**பண்டங்கொண்டு படர்ந்திழி காவிரி**
**வண்டல் நின்று வளர்ந்திடு தெங்குபோய்**
**அண்டர் கோனுக்கு அமர் நிழலாகவை**
**குண்டம் என்று குலவிடும் ரங்கமே.**

இத்தோடு, நெல்லைப்பள்ளு என்று சுவை மிகுந்த பள்ளு ஒன்றையும் பாடியிருக்கிறார்கள். துரதிர்ஷ்டவசமாக அதன் கையெழுத்துப் பிரதி கூட இப்போது அகப்படவில்லை. என்றாலும் அதில் ஒரே ஒரு பாட்டு மட்டும் எங்கள் தந்தையார் நினைவிலிருக்கிறது.

**உமிழ்மது துன்று கொன்றையார்**
**விடைகொண் டெங்கும்திரிபவர்**
**உமையாள் கொழுநன் உலகசயனன்**
**கலையாள் கொழுநன் உபயர் அறிதற் அரியவர்**

**அமிழ்தினின் சுவை பனுவல் மூவருக்கு**
**அரிய நற்பதம் அளிப்பவர்**
**அயிலை நிகர்த்த விழியாள் காந்தி**
**மதியோடமர்ந்த நெல்லையர்**

**தமிழ் தருமுனி மலையினின்றிழி**
**தாமிரபருணியாய் கழனியில்**
**தழைகொள் தொழியில் மிதிகொள் பள்ளர்**
**சரசமொழிகள் மொழியவே.**

**குமிழ்த்த முலையைக் காட்டி நின்று**
**குறைப் பொழுதையும் போக்குறீர்**
**குரவை ஒலித்து முடியை அவிழ்த்து**
**குனிந்து நடுங்கள் பள்ளியரே.**

என்பதுதான் அந்தப் பாட்டு.

இந்தச் சிதம்பரத் தொண்டைமானின் சீமந்த புத்திரர்தான் எங்கள் பாட்டனார் தொண்டைமான் முத்தையா அவர்கள். அவர் சிறந்த சித்ரீகராக வாழ்ந்தவர்கள் சென்னை சித்திர கலாசாலையில் வேலாயுத ஆச்சாரியாரிடம் மாணவனாகப் பயின்றிருக்கிறார்கள். திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் சித்திர ஆசிரியராக முப்பத்தைந்து

வருஷம் பணியாற்றியிருக்கிறார்கள். நூற்றுக்கணக்கான மாணவர்களுக்குச் சித்திரப் பயிற்சி கொடுத்து ஆசிரியர்களாக்கியிருக்கிறார்கள். இது எல்லாம் காலம் செல்லச் செல்ல மறந்துவிடக் கூடியதுதான். சிறந்த கவிஞர் பரம்பரையில் வந்தவர்கள் ஆனதால் கவிதையை அனுபவிக்கும் ஆற்றலோடு கவிதை இயற்றும் திறனும் பெற்றிருந்திருக்கிறார்கள். இராமலிங்க அடிகளாரின் பாடல்களையே பாடிப்பாடி செம்பாகமாக அடிகளாரைப் போலவே பாடவும் வல்லவர்களாக இருந்திருக்கின்றார்கள். அவர்கள் பாடியவை திருவொற்றியூர் தியாகேசர் காதல், நெல்லை நாயகர் குறம், அருள் கடன் விண்ணப்பம், ஆட்கொண்ட பதிகம், பகவத் கீதை அகவல் முதலியன. அவைகளில் இரண்டே இரண்டு பாடல்கள் மட்டும் அடியில் கொடுத்திருக்கிறேன்.

**தெருவீதி விளையாடித் திரிந்தலையும் காலம்**
**தெய்வரம்பை நானெனவே சிந்தையுறச் செய்தே**
**ஒருவழியும் கண்டிலேன் பாவிமகள் ஆணை**
**உனையல்லால் ஆதரிப்பார் ஒருவரிலை என்றே**
**வருவழி நினையாதே பெண்ணங்கே என்றார்**
**மறுமொழி ஒன்றுரையாதே மயக்கமுற்றேன் அவர்பால்**
**பெருவெளியில் புகுகின்றார் என்னை இவண்விட்டே**
**பேதையரோ? ஒற்றிநகர் பெருமான் என்தோழி.**

**காமவியல் சிறிதுமிலாக் காலமதில் வந்து**
**கண்ணாளன் எனையன்றிக் கலக்காதே என்றார்**
**நாமமென்னோ என்றவரை நான்விரும்பிக் கேட்டேன்**
**நாம்நெல்லை நாதர் என்றார் நாணக்கைபிடித்தார்**
**சேமமுறத் தில்லைசென்று வாழ்கின்றார் என்னே?**
**தேட்டமுறு காலமதில் தேடிஎனை அணையார்**
**வாமமதில் எனைவைத்து வாழ்விக்கும் காலம்**
**வருமோ சொல்?வாராதோ? வகுத்துறை நின்குறமே.**

இப்படி தியாகேசர் காதலையும், நெல்லை நாயகர் குறமும் பாடிய எங்கள் பாட்டனார், பின்னர்ச் சமய ஆராய்ச்சியில் ஈடுபட்டு கிறிஸ்துவ சகோதரர்களோடு பழகியிருக்கிறார்கள். பிரம்ம சமாஜத்தில் சேர்ந்திருக்கிறார்கள். கடைசியில் ராதாஸ்வாமி சத் சங்கத்தில் சேர்ந்து யோகப் பயிற்சிகளில் ஈடுபட்டிருந்திருக்கிறார்கள். இத்தகைய இலக்கிய குரு பரம்பரையில் வந்தவர்களே எங்கள் தந்தையார். ஆதலால் அவர்களுக்கு இலக்கிய உணர்வு, கலை

வாழ்வு எல்லாம் பிதுரார்ஜிதமாகக் கிடைத்திருக்கிறது. இவர்கள் பள்ளி மாணவனாக இருந்த காலத்தில் இவர்களுக்கு ஆசிரியராக அமைந்தவர் குற்றாலக் குறவஞ்சிப் பாடிய திரிகூட ராஜப்பன் கவிராயர் பரம்பரையில் வந்த மேலகரம் சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள். அவர்களிடம் இவர்கள் கேட்டு அனுபவித்த தனிப்பாடல்கள் எண்ணில் அடங்கா. பள்ளியை விட்டு வெளியேறுகிறபோது சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்களோடு சேர்ந்து கம்பராமாயணம் படித்திருக்கிறார்கள். பின்னர்தான் ரசிகமணியின் சீடராய் அமைந்து கவிதை என்றால் என்ன? கம்பன் என்றால் யார்? என்றெல்லாம் தெரிந்து கொண்டார்கள். அதன் பின்னர்தான் சிறந்த பேச்சாளராகவும் எழுத்தாளராகவும் உருப்பெற்றிருக்கிறார்கள்.

இந்தப் பரம்பரையின் புகழ் நாளும் வளர இறை அருளை இறைஞ்சி நிற்கின்றேன் நான்.



நாடோடி நடனம்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# பாஸ்கரத் தொண்டைமான்

திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள், 'திக்கெலாம் புகழும் திருநெல்வேலி' என்று ஞானசம்பந்தப் பெருமானால் பாடப்பெற்ற நெல்லை மாநகரில் 1904 ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள் 22 ஆம் நாள் (22.7.1904) திரு. தொண்டைமான் முத்தையா அவர்களுக்கும், திருமதி. முத்தம்மாளுக்கும் மகனாகப் பிறந்தார். உடன் பிறந்தவர் ஐவர். பரம்பரையாகவே நல்ல தமிழ்ப் புலமையும், கலைஞானமும் செறிந்த குடும்பம் அது. தந்தையார், திரு. தொண்டைமான் முத்தையா, தமிழ்ப் புலமையும், ஆங்கிலப் புலமையும் ஒருங்கே அமையப் பெற்றவர். சிறந்த ஓவியக் கலைஞர். புகைப்பட வல்லுநர். தந்தை வழி பாட்டனார், திரு. சிதம்பரம் தொண்டைமான் நல்ல தமிழ்ப் புலவர். வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளிடத்தில் முறையாகத் தமிழ் பயின்றவர். நெல்லைச் சிலேடை வெண்பா, நெல்லைப் பள்ளு ஆகியவற்றை எழுதிய கவிஞர். ஆகவே தொண்டைமான் அவர்களுக்கு, கலை, இலக்கியம் ஆகிய இரண்டிலும் இயல்பாகவே பற்றும், ஆர்வமும், தேர்ச்சியும் ஏற்பட்டதில் வியப்பில்லை.

பாஸ்கரத் தொண்டைமானவர்களுடைய மாணவப் பருவம் திருநெல்வேலி, இந்துக் கல்லூரியில் கழிந்தது. அவர் கல்லூரியில் பயின்ற காலத்தில் அவருக்குத் தமிழாசிரியராக இருந்தவர் மேலகரம் சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள். கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும்போதே திருமணமும் நடந்தேறியது. முறைப் பெண்ணாக பாலம்மாள் என்பவரே அவருக்குத் துணைவியாக வாய்த்தார். இனிய இல்வாழ்க்கையின் பயனாக நான்கு மக்கள் பிறந்தனர். இளையவர் இருவரும் இளமையில் மறைந்து போக, மூத்த இருவரும் உள்ளனர்.

தொண்டைமானவர்கள் கல்லூரியில் இளங்கலைப் பட்டம் பெற்றதும் வேலையும் தேடிவந்தது. முதன்முதலில், இப்போது வனவளத்துறை என்று அழைக்கப்பெறும் காட்டிலாகாவில் உதவியாளராகச் சேர்ந்தார். பின்னர் வருவாய்த்துறைக்கு மாறி, வருவாய்த்துறை ஆய்வாளராகப் பணியேற்றார். அதிலிருந்து படிப்படியாக முன்னேறி தாசில்தார், முதல் வகுப்பு நடுவர், உதவி மாவட்ட ஆட்சியாளர் என்று பல்வேறு பதவிகளை வகித்து, ஐஏஎஸ் ஆகவும் தேர்ந்தெடுக்கப்பட்டு, வேலூர் மாவட்ட ஆட்சித் தலைவராக ஓராண்டுக்கும் மேலாக பதவி வகித்த பின்னர், 1959 ஆம் ஆண்டில் ஓய்வு பெற்றார். முப்பதாண்டு கால அரசுப் பணியின் முடிவில், நேர்மையானவர், திறமையானவர் என்ற நல்ல பெயரும் அவரை வந்தடைந்தது. ஓய்வு பெற்ற பின்னர் மீண்டும் திருநெல்வேலிக்கே வந்து பரம்பரை வீட்டில் தங்கி, இலக்கியப் பணியை மேற்கொண்டார்.

தொண்டைமானவர்களை இளமைப் பருவத்தில் கவர்ந்தவர் சொல்லின் செல்வரான திரு. ரா.பி. சேதுப்பிள்ளையவர்கள். அவருடைய தூண்டுதலின் பேரில் கம்பராமாயணத்தில் ஈடுபாடு கொண்டு கல்லூரி நாட்களிலேயே ஆனந்த போதினி பத்திரிகையில் கட்டுரைகள் எழுதத் தொடங்கினார். பின்னர்த் தமிழறிஞர், முதுபெரும் புலவர் வெள்ளகால் திரு. சுப்பிரமணிய முதலியார் அவர்களுடனும், குற்றால முனிவர் ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார் அவர்களுடனும் தொடர்பு ஏற்பட்டு அவர்கள் அன்புக்குப் பாத்திரமாகி, அவர்களால் ஆட்கொள்ளப்பட்டார். தமிழறிஞர் வெள்ளக்கால் முதலியார் அவர்கள் மறைந்த பின்னர், முழுக்க முழுக்க ரசிமகணி டிகேசியின் பிரதம சீடராகவே தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். அப்போது புத்தேரியில் வாழ்ந்து வந்த கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களிடத்தும் தொண்டைமானுக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது. ரசிகமணி அவர்களையும், கவிமணியவர்களையும் ஒருங்கே வரவழைத்து, கலைதெரி கழகம் என்ற அமைபின் மூவலம் பெரிய பாராட்டு விழாவை நெல்லையில் நடத்திப் பெருமை கூட்டினார்.

தொண்டைமானவர்களுடைய ரசிக உள்ளம், கம்பன் கலை, கவிதை இவற்றில் தோய்ந்து நின்றது. கம்பன் பக்தி ரசிகமணியின் கூட்டுறவில் மேலும் வளர்ந்தது. காரைக்குடி கம்பன் விழாவில் அவர் பங்கு பெரிது. கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்களும், தொண்டைமான் அவர்களும் உடன்பிறவா சகோதரர்களாகவே பழகி வந்தனர். பிரபல எழுத்தாளர், திரு. தொ. மு. சிதம்பர ரகுநாதன் அவருடைய உடன் பிறந்த தம்பி.

தமிழ்நாட்டுக் கலைகளில் தொண்டைமான் அவர்களைப் பெரிதும் கவர்ந்தது, தமிழ்நாட்டுச் சிற்பக் கலைதான். அவர் தஞ்சையில் பணியாற்றியபோது, அங்கு தடுக்கி விழும் இடம் எல்லாம் கலைச் செல்வங்கள், சிற்ப வடிவங்கள் கேட்பாரற்றுக் கிடப்பதைக் கண்டுபிடித்து, அவற்றைச் சேகரித்து, தலைநகராம் தஞ்சையில் அற்புதமான ஒரு கலைக்கூடமே அமைத்துவிட்டார். பொறுப்பான அரசுப் பணியிலிருந்தபோதும், பணியிலிருந்து ஓய்வுபெற்ற பின்னரும் தமிழகமெங்கும் சுற்றி அங்குள்ள கோயில்களைக் கண்டு, அவற்றின் வரலாற்றுச் சிறப்பு, கலைநயம் ஆகியவற்றை நுணுகி ஆராய்ந்து, கட்டுரைகள் எழுதி மக்களுக்கு விருந்து படைத்தார். அந்தக் கட்டுரைகளை, வேங்கடம் முதல் குமரி வரை என்ற தலைப்பில் தொடர்ச்சியாக வெளியிட்டுக் கல்கி பத்திரிகை பெருமை அடைந்தது. தொண்டைமானவர்களுடைய திருப்பணியைப் பாராட்டி, வணக்கத்துக்குரிய காஞ்சி முனிவர் ஒரு வித்வத் சதஸைக் கூட்டி "கலைமணி" பட்டம் வழங்கி, பொன்னாடை போர்த்தி, சிறப்புச் செய்தார்கள். தொண்டைமானவர்களுடைய மணி விழாவின்போது, காஞ்சி பீடாதிபதி அவர்கள்,

> **"கலாமணி தொண்டைமான் ஸ்ரீ பாஸ்கர சில்ப கல்பக**
> **ஷஷ்டி பூர்த்யுத்ஸவே சர்வ மங்களா கருணாஸ்பதம்"**

என்ற ஸ்லோகத்தையும் அருளி ஆசி கூறினார்கள்.

தொண்டைமானவர்களுடைய கலைத்தாகம் அதோடு தணிந்துவிடவில்லை. வேங்கடத்துக்கு அப்பால் இமயம் வரை உள்ள கோயில்களையும் கண்டு தெளியவேண்டும் என்ற அவா உந்த, வடநாட்டுப் பயணம் மேற்கொண்டு, பாரதம் முழுவதையும் வலம் வந்தார். அதன் பயனாக வேங்கடத்துக்கு அப்பால் என்ற தலைப்பில், கல்கியில் 56 கட்டுரைகள் பிரசுரிக்கப்பட்டு, அவை இன்று நூல் வடிவமும் பெற்றுவிட்டன. இவை தவிர பிள்ளைவாள், தமிழறிஞர் முதலியார், ரசிகமணி டிகேசி என்ற நூல்களும், கலைஞன் கண்ட கடவுள், கல்லும் சொல்லாதோ கவி, அமர காதலர், தென்றல் தந்த கவிதை, இந்தியக் கலைச் செல்வம், தமிழர் கோயில்களும் பண்பாடும் என்ற கலைக்கட்டுரைத் தொகுப்புகளும், மதுரை மீனாட்சி, ஆறுமுகமான பொருள், பிள்ளையார்பட்டிப் பிள்ளையார், கம்பன் சுயசரிதம், கம்பன் கண்ட இராமன், அன்றும் இன்றும், பட்டி மண்டபப் பேருரைகள் என்ற நூல்களும் தொண்டைமான் எழுதியவற்றில் குறிப்பிடத்தக்கவை.

தொண்டைமானவர்கள் சிறந்த எழுத்தாளர் மட்டுமல்ல நல்ல பேச்சாளரும் கூட. இலக்கிய மேடைகளிலும், வானொலியிலும் அவருடைய குரல் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

தஞ்சைக் கலைக் கூடமும், அவருடைய நூல்களும் கலைமகளுக்கும் தமிழ் மகளுக்கும் அவர் விட்டுச் சென்ற சீதனமாகும். இன்னும் பதிப்பிக்கப் பெறாத அவரது கட்டுரைத் தொகுப்புக்கள் ஏறத்தாழ ஏழுக்கும் அதிகமாகவே இருக்கும். இந்த அறக்கட்டளையின் மூலம் அவற்றையும் பதிப்பிக்க முயற்சி மேற்கொள்ளப்பட வேண்டும். தஞ்சைக் கலைக் கூடத்தில் அதை உருவாக்கிய தொண்டைமானவர்களுடைய உருவப்படமோ, பெயரோ இடம் பெறாதது அவருடைய நண்பர்களுக்கும், குடும்பத்தாருக்கும் பெருங்குறையாகவே இருந்து வருகிறது. அந்தக் குறையும் நிவர்த்திக்கப்பட வேண்டும். அதற்காக மேற்கொண்ட முயற்சிகள் இதுவரை பயன் தரவில்லை.

இலக்கியப் பணியையும், கலைத் தொண்டையும் தம் இரு கண்களாக மதித்து, அறுபதாண்டு காலம் வாழ்ந்த பயனுள்ள வாழ்க்கை, 1965 ஆம் ஆண்டு, மார்ச் 31 ஆம் நாள் நிறைவு பெற்றது.



முதுபெரும் புலவர் **வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார்**



**ஆச்சி**

அப்பாவின் அம்மா

**முத்தம்மாள்**



திருமணத்தின் போது... [25.05.1925]

**பாஸ்கரத் தொண்டைமான் - பாலம்மாள்**



எங்கள் தந்தையார்

**திரு. பாஸ்கரத் தொண்டைமான்** அவர்கள்



**எந்தையும் தாயும்**
அறுபதாண்டு விழாவின் போது
திருச்செந்தூரில்
திருமணம் நிறைவேறிய பின்
எடுத்த படம்



**அம்மாவும்**

குழந்தைகளாகிய நாங்களும்

ராஜேஸ்வரி

சரோஜினி

கருணாகரன்

இந்திராணி



திருநெல்வேலி, இந்து கல்லூரியில், தமிழ்த்தாத்தா மகாமகோபாத்யாய, டாக்டர் உ.வே. சாமிநாத அய்யர் தலையில்
நடைபெற்ற முதுபெரும் புலவர் வெள்ளகால் ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களின்
எண்பதாண்டு நிறைவு விழாவின்போது எடுக்கப்பெற்ற படம்.



திருநெல்வேலி இந்து கல்லூரி வாளகத்தில்
1934 ஆம் ஆண்டு, முதன்முதலாக கம்பன் திருநாள்
கொண்டாடப்பட்டபோது எடுக்கப்பெற்ற படம்.



குருநாதர் **ரசிகமணி** அவர்களுடன்
பாஸ்கரத் தொண்டைமான்



ரசிகமணி டி.கே.சி.யும்
கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையும்



தஞ்சை சரஸ்வதி மகால் கலைக்கூடத்தில்
**மூதறிஞர் இராஜாஜி** அவர்கள்



கஜசம்ஹாரர் சிற்பத்தை
இரசிக்கும் இரசிகர்
திரு. **பாஸ்கரத் தொண்டைமான்** அவர்கள்



பழைய மாணவருக்கு
புதிய கல்லூரித் தலைவர் மாலை அணிவிக்கிறார்



தொண்டைமான் அறக்கட்டளை விழாவில்
திரு. **ஜி.கே. மூப்பனார்** அவர்கள்,
திரு. **சிவாஜிகணேசன்** அவர்கள்

# எழுத்தாளர், கலெக்டர் முப்பதாண்டு சர்க்கார் சேவகம்

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன் நான் திருநெல்வேலி ஜில்லாவில் ரிவின்யூ இன்ஸ்பெக்டராக வேலை ஏற்றிருந்தேன். அந்த உத்தியோகத்தில் நல்ல பெயர் எடுப்பதும் அதன் மூலம் உத்தியோக உயர்வு பெறுவதும் மேலதிகாரிகள் முகாம் வருகிறபோது அவர்களுக்கு சப்ளை செய்வதைப் பொறுத்ததுதான் என்பதையும் அறிந்திருந்தேன். தாசில்தார் முகாம் வந்தால் அவரது உணவு விஷயமாக காரியங்களை எல்லாம் கிராம முனிசீப்களே கவனித்துக் கொள்வர். டிப்டி கலெக்டர் முகாம் வந்தால் அவருக்கும் அவருடைய பட்டாளத்திற்கும் உணவருத்துவது முதலிய செலவுகளை ரிவின்யூ இன்ஸ்பெக்டர்தான் கவனித்துக்கொள்ள வேண்டும். கலெக்டர் முகாம் வந்தால் தான் கஷ்டம். ஒரு சிறு தவறு கூட ஏற்பட்டு விடாமல் பார்த்துக் கொள்ளவேணும். தப்பித்தவறி ஏதாவது தவறு நேர்ந்துவிட்டால், தொலைந்தார் ரிவின்யூ இன்ஸ்பெக்டர்.

இந்த நிலையில் அப்போதைய ஜில்லா கலெக்டர் என்னுடைய பிர்க்காவிற்கு முகாம் வருவதாகத் தகவல் வந்தது. கலெக்டர் வருவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பே அவரது குதிரை வந்தது. குதிரைக்காரனும் வந்தான். குதிரையை, குதிரைக்காரனைப் பராமரிப்பதில் அக்கறை செலுத்தி சரியாகக் கவனித்துக் கொண்டேன். கடைசியில் கலெக்டர் வந்தார். அவரோடு ஒரு பரிவாரமும் வந்தது. எல்லோருக்கும் வேண்டுவன எல்லாம் தேடிக் கொடுத்து அவர்கள் மனம் கோணாதபடி நடந்துகொண்டேன். மூன்று நாள் முகாம் முடிந்து கலெக்டர் மற்றொரு முகாமிற்குப் புறப்பட்டார். மூன்று நாள் வாங்கிக் கொடுத்த பால், முட்டை முதலிய சாமான்களுக்கு பில் கேட்டார் கலெக்டர். கிராம முனிசீப்பும் செலவு ரூபாய் ஒன்றரை என்று விவரமாகப் பில் எழுதிக் கொண்டு வந்து கொடுத்தார். கலெக்டர் முன்னிலையிலேயே கலெக்டரின் காம்ப் கிளார்க் அந்தப் பணத்தைக் கிராம முனிசீப்பிடம் கொடுத்துவிட்டார்.

புறப்படும் கலெக்டரை அனுப்பி வைக்க நான் அவர் முன் வந்து நின்றேன். "கிராம முனிசீப் கொடுத்த பில்லில் குதிரைக்கு என்று செய்த செலவு காட்டப்படவில்லையே" என்றார் கலெக்டர் என்னிடம். நான் கொஞ்சம் ஜாக்கிரதையாய் அப்படிச் செலவு ஒன்றும் ஆகிவிடவில்லை என்றேன். அவ்வளவுதான் கலெக்டர், "அப்போது என் குதிரையை மூன்று நாள் பட்டினி போட்டு விட்டீர்" என்று என் மேல் பாய்ந்தார். நடுநடுங்கிவிட்டேன். புல்லுக்கும் கொள்ளுக்கும் அதிகம் செலவாகவில்லை என்று குறிப்பிட்டே பதில் சொன்னேன். "என்ன செலவு ஆயிற்றோ அதையும் வாங்கிக் கொள்ளும்" என்று கூறிவிட்டு குதிரை மீது ஏறி புறப்பட்டுவிட்டார் கலெக்டர். மற்றவர்களும் புறப்பட்டுப் போய்ச் சேர்ந்தார்கள். தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று நானும் வீட்டிற்குத் திரும்பினேன், கொஞ்சம் மனத் தாங்கலோடேயே.

என்னுடைய கவலையை அறிந்த கிராம முனிசீப் "இதற்கென்ன சார் இவ்வளவு வருத்தப்படுகிறீர்கள். இதற்கு முன் என்ன என்ன நடந்திருக்கிறது என்று தெரியுமா? சொல்கிறேன், கேட்கிறீர்களா" என்று ஒரு கதை சொல்ல ஆரம்பித்தார். கலெக்டர் முகாம் வந்தால் அவருக்கு வேண்டிய சப்ளை எல்லாம் செய்யவேண்டியது ரிவினியூ இன்ஸ்பெக்டர் பொறுப்புத்தான். கலெக்டரை விட கலெக்டருடன் வரும் பட்லரைத் திருப்திச் செய்யத் தெரிந்திருக்க வேண்டும் முதலில். ஒரு அப்பாவி ரிவினியூ இன்ஸ்பெக்டர் சப்ளை விஷயத்தில் எல்லாம் கண்ணும் கருத்துமாகவே இருந்தார். ஆனால் அவர் கலெக்டரது பட்லரைக் கவனிக்கத் தவறிவிட்டார். மூன்று நாள் கலெக்டர் முகாம் செய்து இருந்தார். எல்லாம் ஒழுங்காய் நடந்தது. மூன்றாம் நாள் காலை கலெக்டருக்குக் காப்பி கொடுக்கவில்லை பட்லர். கலெக்டர் முகத்திலோ எள்ளும் கொள்ளும் வெடித்தது. "ஏன் பெட் காபி வரவில்லை" என்று கேட்ட கலெக்டரிடம் "ரிவின்யூ இன்ஸ்பெக்டர் திரிந்த பாலையே கொண்டு வந்திருக்கிறார்" என்று புகார் செய்துவிட்டார். கலெக்டர் கோபம் எல்லை கடந்துவிட்டது. ரிவினியூ இன்ஸ்பெக்டரை அழைத்தார். அவர் கொண்டு வந்ததாக பட்லர் காட்டிய திரிந்த பால் உள்ள செம்பை ரிவினியூ இன்ஸ்பெக்டர் தலையில் கவிழ்த்து 'போ, போ' என்று விரட்டிவிட்டார். இந்த ரிவின்யூ இன்ஸ்பெக்டர் கொஞ்சம் மானியாகவும் இருந்திருக்கிறார். பாலாபிஷேகம் பெற்ற கோபத்துடனே தாசில்தார் வீட்டிற்குச் சென்றார். நடந்ததைச் சொன்னார். அத்துடன் தன் வேலையையும் ராஜிநாமா செய்து கால் கடுதாசியையும் நீட்டிவிட்டார்.

இதற்குள் கலெக்டரின் கோபம் தணிந்துவிட்டது. தான் செய்த காரியம் தவறு என்பதை உணர்ந்திருக்கிறார். தாசில்தாருக்கு ஆள் அனுப்பி அழைத்து, தான் ரிவின்யூ இன்ஸ்பெக்டரிடம் மன்னிப்புக் கோரத் தயாராக இருப்பதாக அறிவித்திருக்கிறார். ஆம், ஆங்கிலேய கலெக்டர், அவரின் இனத்திற்கே உரிய பெருந்தன்மையோடு நடந்து கொள்ள விரைந்திருக்கிறார். தாசில்தாரோ தயங்கித் தயங்கி ரிவின்யூ இன்ஸ்பெக்டர் தன் வேலையை ராஜினாமாச் செய்த விவரத்தைக் கூறி இருக்கிறார். கலெக்டரும் வருத்தப்பட்டு ரிவின்யூ இன்ஸ்பெக்டரை அழைத்துத் தான் செய்த காரியத்திற்கு மன்னிப்புக் கேட்டதுடன், அவர் ராஜினாமாவை வாபஸ் பெற்றுக்கொண்டால், அவரை ஹெட் அக்கவுண்டண்டாக உயர்த்துவதாகச் சொல்லியிருக்கிறார். ரிவின்யூ இன்பெக்டரும் உத்தியோக உயர்வு என்றவுடனே பல்லை இளித்துத் தன் ராஜினாமாவை வாபஸ் பெற்றுக்கொண்டார். உத்தியோக உயர்வையுமே ஏற்றுக்கொண்டார். "இப்படியெல்லாம் நடந்திருக்கும் போது குதிரையைப் பட்டினியாய்ப் போட்டுவிட்டாயா என்று கலெக்டர் கேட்டது ஒன்றும் பிரமாதமில்லை" என்று கிராம முனிசீப் எனக்கு ஆறுதல் கூறினார். பின்னர் சில வருஷங்கள் நான் ரிவின்யூ இன்ஸ் பெக்டராக இருந்தும் எனக்கு ஒரு கலெக்டரும் பாலாபிஷேகம் செய்யவும் இல்லை. அதனால் உத்தியோக உயர்வு கொடுக்கவும் இல்லை.

ரிவின்யூ டிபார்ட்மெண்டில் வேலை பார்த்த எனக்கு படிப்படியாக உத்தியோக உயர்வு கிடைத்தது. ரிவின்யூ இன்ஸ்பெக்டராக வேலை பார்த்து முப்பது வருஷங்கள் கழிந்த பின்னரே கலெக்டர் வேலையும் கிடைத்தது. இந்த முப்பது வருஷகாலத்தில் எத்தனை கலெக்டர்களை நான் பார்த்திருப்பேன். அவர்களது வேலைத் திறமை, குணங்கள், குறைகள் எல்லாவற்றையும் உணர்ந்திருப்பேன். அந்நியர் ஆட்சியில் சர்க்கார் சேவகனாக வேலையேற்ற நான் பதினைந்து வருஷ காலம் அநேகமாக வெள்ளைக்காரக் கலெக்டர்களிடமே வேலை பார்த்திருக்கிறேன். இன்னும் பதினைந்து வருஷம் சுதந்தர இந்தியாவில் டிப்டி கலெக்டராகவும் கலெக்டராகவும் பணியாற்றியிருக்கிறேன்.

இன்று அதிகாரிகள் முகாம் போவது குறைந்து விட்டது. என்றாலும் 'சப்ளை' வாங்குவது குறையவில்லைதான். இதற்குக் காரணம் கீழேயுள்ள உத்தியோகஸ்தர்கள் சப்ளை மூலமே மேலதிகாரிகளைத் திருப்தி செய்தல் கூடும் என்று எண்ணுகிறார்கள். அதிகாரிகளும் அதற்கேற்றாப்போலவே நடந்து கொள்கிறார்கள்.

என் கீழ் வேலை செய்த டிப்டி கலெக்டர் ஒருவர் வேலை செய்வதில் திறமை மிக்கவர். அவர் வேலையில் குறையே காண முடியாது. இவரிடம் இருந்த குறை எல்லாம், இவர் அரசியல்வாதிகளின் தயவை நாடி அவர்களுக்கு வால் பிடிப்பதுதான். இவர் சப்ளையும் அதிகம் வாங்குகிறார் என்று புகார். அவரைப் பற்றி ஒரு மொட்டை மனு சர்க்காருக்குப் போய், அது என்னிடம் விசாரணைக்கு வந்தது. நான் அந்த டிப்டி கலெக்ரை அழைத்து இப்படி உம்பேரில் புகார் ஒன்று வந்திருக்கிறது கொஞ்சம் கவனமாக நடந்து கொள்ளும் என்று எச்சரித்தேன். மூன்று வருஷ காலமாக டிப்டி கலெக்டர் வேலை பார்த்தவர் அவர். அந்த மூன்று வருஷ காலத்திலும் முகாம்களில் எல்லாம் என்ன என்ன சப்ளை வாங்கினார், அந்த சப்ளைகளுக்கு எல்லாம் அவர் வாங்கிய பில்கள், அந்த பில்களுக்குப் பணம் கொடுத்துப் பெற்றுக் கொண்டதாக கிராம முனிசீப் சர்டிபிக்கெட்டுடன் வாங்கிய சீட்டுகள் அத்தனையையும் ஒரு நோட்டுப் புத்தகத்தில் ஒட்டி ஒழுங்காக வைத்திருந்தார். இப்படி அதி அக்கறையோடு அவர் செய்திருப்பதிலிருந்தே அவர் பேரில் இருந்த சந்தேகம் வலுப்பெற்றது. அவருக்கு எழுதினேன், "சமீபகாலத்தில பெரிய அதிகாரிகள் முகாம்களில் தங்கள் சப்ளைகளைத் தாங்களே கவனித்துக் கொள்ள வேண்டும். தன் கீழ் வேலை செய்பவர்களிடம் சப்ளை எதிர்பார்க்கக்கூடாது" என்று சர்க்கார் உத்திரவிட்டிருப்பது உமக்குத் தெரியாதா? இனி சப்ளை பெறுவதையும் அதற்காக பில்கள் வாங்கி அவற்றை அதிக கவனத்துடன் ஒட்டி வைப்பதையும் நிறுத்திவிடும் என்று எழுதினேன். அவ்வளவுதான், அந்த டிப்டி கலெக்டர் இடிந்தே போய்விட்டார். சப்ளை பெறுவதையும் நிறத்திவிட்டார் என்றே கேள்வி.

இத்தகைய அனுபவங்கள் எல்லாம் பெற்ற நான் எனக்கு வேண்டியவைகளை என் காம்ப் கிளார்க்கு மூலமே பெற்றுக் கொண்டேன். ஒவ்வொரு தடவையும் ரூபாய் நூறுக்கு அவர் பெயருக்கு செக் கொடுத்து அதற்குக் கணக்கு வைத்துக் கொள்ளச் சொல்வேன். அத்தொகை செலவானதும் மேலும் ஒரு நூறு ரூபாய்க்கு செக் கொடுக்கும் வழக்கம் வைத்திருந்தேன். பில் வாங்குவது என்ற பழக்கமே வைத்துக் கொள்ளாதவனாக வாழ்ந்து ஓய்வு பெற்றுவிட்டேன்.

ரிவின்யூ டிபார்ட்மெண்டில் எது எடுத்தாலும் தாமதம். எல்லாம் சிவப்பு நாடா செய்கிற காரியம் என்றெல்லாம் புகார் சொல்பவர்கள் இருக்கிறார்கள். உண்மைதான் விஷயங்களை மனிதத் தன்மையோடு

அணுகத் தெரியாதவர்களே இந்த சிவப்பு நாடாவைச் சுவைத்துச் சுவைத்து இன்பம் காண்கிறவர்களாயிருப்பார்கள். அவிழ்க்க முடியாத முடிச்சுடன் போராடுவதை விடுத்து அதை வெட்டி எறியத் தெரிந்தவர்களே உத்தியோகத்தில் வெற்றி காணத் தெரிந்தவர்கள் என்று கூறுவேன் நான். ஒரு கிராமத்தில் பிள்ளைகளுக்குப் பள்ளிக்கூடம் இல்லை. ஒன்றரை மைல் தூரத்திலுள்ள அடுத்த கிராமத்தில் உள்ள பள்ளிக்கூடத்திற்கே பிள்ளைகள் எல்லாம் சென்று வரவேணும். ஊருக்கு மேல்புறம் ஒரு பெரிய ஏரி. அந்த ஏரியின் மறுகால் ஊரை அடுத்து இருக்கிறது. அதில் வருஷத்தில் எட்டு மாதங்கள் முட்டளவு தண்ணீர் இருக்கும். இந்தத் தண்ணீருக்குள் இறங்கியே சிறு குழந்தைகள் எல்லாம் அடுத்த கிராமத்தில் உள்ள பள்ளிக்குச் செல்ல வேணும். இந்த மறுகாலில ஒரு சிறு பாலம் கட்ட கிராமத்தார் பத்து வருஷ காலமாக முயல்கிறார்கள். ஜில்லா போர்டில் அந்தக் கிராமத்தில உள்ளவர்கள் செல்வாக்குடையவர் களாக இல்லாத காரணத்தால் பாலம் கட்டப்படவில்லை. பின்னர் வட்டார அபிவிருத்தித் திட்டத்தின் கீழும் இப்பாலம் கட்ட முயன்றிருக்கிறார்கள். வட்டார அபிவிருத்தி அதிகாரி பாலத்தின் அவசியத்தை உணர்ந்திருக்கிறார். ஆனால் அதற்கு வட்டார அபிவிருத்திப் பணத்தில் ஐம்பது சதவிகிதம்தான் செலவு செய்தல் கூடும். மீதப் பாதியைக் கிராமத்தார் இருபத்து ஐந்து சதவிகிதமும் ஜில்லா போர்ட் இருபத்து ஐந்து சதவிகிதமும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது சட்டம். அந்த ஜில்லா போர்டிலோ வரவுக்கு மேல் செலவு. ஆதலால், எந்த வேலைக்கும் ஜில்லா போர்டார் உதவித் தொகை கொடுத்தல் கூடாது என்பது சர்க்கார் உத்தரவு. இது காரணமாக எனக்கு முன்னிருந்த கலெக்டர் ஜில்லா போர்டாரிடம் உதவித்தொகை கேட்டு கலெக்டர் ஹோதாவில் கடிதம் எழுதுவார். பின்னால் அவரே ஜில்லா போர்ட் ஸ்பெஷல் ஆபிசர் ஹோதாவில் சர்க்கார் உத்திரவைக் குறிப்பிட்டு உதவித் தொகை கொடுத்தல் இயலாது என்று கலெக்டருக்குப் பதில் எழுதுவார். இப்படியே சிவப்பு நாடா வேலை செய்து கொண்டிருந்தது இந்த விவகாரத்தில். நான் வேலை ஏற்ற பின் ஒருநாள் இந்தக் கிராமத்திற்குச் சென்றிருந்தேன். பாலம் கட்டவேண்டிய அவசியத்தை உணர்ந்தேன். ஆபீஸ் கட்டுகளைப் புரட்டி இதுவரை நடந்திருந்த விவகாரங்களையும் படித்துப் பார்த்தேன். வட்டார அபிவிருத்தி அதிகாரியும், மற்றவர்களும் "ஜில்லா போர்ட் உதவித் தொகை இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது" என்றனர். அந்தத் தொகையையும் சேர்த்துக் கிராமத்தார்களே கொடுத்தல் இயலாது என்பதையும் கண்டேன். ஓர் இரவு முழுவதும் யோசித்தேன்,

மறுநாள் காலையில் எஞ்சினீயரைக் கூப்பிட்டு அனுப்பினேன். ஆமாம், இந்த வேலையை வட்டார அபிவிருத்தி வேலையாகச் செய்ய வேண்டாம் ஜில்லா போர்ட் வேலையாகச் செய்ய ஏதாவது ஆக்ஷேபனை உண்டா? என்றேன். ஆக்ஷேபணை இல்லை. ஆனால் அதற்குரிய எட்டாயிரம் ரூபாயை ஜில்லா போர்டிலிருந்து கொடுத்தல் இயலாதே என்றார். சரி, எஸ்டிமேட்டை என்னிடம் கொடுங்கள் என்றேன். கிராமத்துக்காரரில் ஒரு பெரிய பிரமுகரைக் கூப்பிட்டனுப்பினேன். அவரிடம் கண்டிராக்டை ஒப்புவிப்பதாகச் சொன்னேன். கிராமத்தார் சேர்த்து வைத்திருக்கும் இரண்டாயிரம் ரூபாய் பெறுமான கற்களையும் எடுத்துக்கொண்டு, ஜில்லா போர்டிலிருந்து ரூ 4000 மும் பெற்றுக் கொண்டு வேலையை முடியும் என்றேன். அப்படியே வேலையும் இரண்டு மாத காலத்தில் முடிந்துவிட்டது. பாலத்தின் திறப்பு விழாவையும் ‘ஜாம் ஜாம்’ என்று நானே முன்னின்று நடத்திவிட்டேன். இதையெல்லாம் பார்த்த எஞ்சினீயர் சொன்னார் “சார், நாங்கள் எல்லாம் காலுக்குத் தக்கபடி செருப்பைத் தறி” என்றோம். தாங்களோ செருப்புக்குத் தக்கபடி காலைத் தறி என்று சொல்லிக் காரியத்தை முடித்துவிட்டீர்கள் என்று குறைபட்டுக் கொண்டார். “சரிதான் ஐயா! சிவப்பு நாடாவை வெட்டித் தள்ளத் தெரியவேண்டும். அதற்கு மனிதாபிமானம் வேண்டும். அந்த மனிதாபிமானம் உடையவர்களாய் அதிகாரிகள் வாழ வேண்டும். அதுவே வெற்றியின் ரகசியம்” என்றேன். ஒரு நல்ல காரியத்தை எப்படியோ செய்து முடித்தோம் என்ற திருப்தி இருந்தது எனக்கு. அது போதாதா?

இன்னும் ஒரு சந்தர்ப்பம் - நான் வேலை பார்த்த மாவட்டத்தில் ஒரு கிராமத்தில் தோல் பதனிடும் தொழில் சிறப்பாக நடந்தது. அங்கு முதலாளிமார் எல்லாம் முஸ்லீம் சகோதரர்கள். கூலி வேலை செய்பவர்கள எல்லாம் ஹரிஜனங்கள் இருவருக்கும் இடையே எவ்வளவோ தகராறுகள். பல வருஷங்களாக ‘போனஸ்’ கொடுபடவில்லை. இதற்கெல்லாம் தொழிலாளிகள் லேபர் கோட்டுக்குப் போவார்கள். அவர்களுக்கு அனுகூலமாகத் தீர்ப்புக் கூறப்படும். அதை எதிர்த்து முதலாளிகள் அப்பீல் பண்ணுவார்கள். அப்பீல் முடியும்வரை தொழிலாளர் குறைகள் நீங்காது. இந்த நிலையில் தொழிலாளர்கள் ஒரு நாளைக் குறிப்பிட்டு அன்றிலிருந்து வேலை நிறுத்தம் பண்ணப் போவதாக நோட்டீஸ் கொடுத்துவிட்டார்கள். இதைச் சாக்காக வைத்துக்கொண்டு அக்கிராமத்தில் இந்து முஸ்லீம் கலகம் ஏற்படலாம் என அரசியல்வாதிகள் பீதியை வேறே கிளப்பிவிட்டுவிட்டனர். நான்

கிராமத்திற்குச் சென்றேன். நிலைமையை அறிந்தேன். முதலாளிமார் கையாளும் கோர்ட்டு நடவடிக்கைகளையும் புரிந்துகொண்டேன். இரண்டு கட்சிக்காரர்களையும் தனித்தனியே அழைத்து அவர்கள் வாதப் பிரதிவாதங்களையும் கேட்டேன். பின்னர் முதலாளிமார் பிரதிநிதிகளைச் சந்தித்து இருக்கும் நிலையை விளக்கினேன். கோர்ட்டு நடவடிக்கைகளைக் காட்டிக் காட்டி போனஸ் கொடுப்பதை நாலு வருஷம் தள்ளிப் போட்டது தவறு என்றேன். இரண்டு வருஷத்து போனஸையாவது உடனடியாகக் கொடுக்க ஒப்புக் கொண்டால் நான் தலையிட்டு தொழிலாளர்களை வேலைநிறுத்தம் நோட்டீசை வாபஸ் பெறச் சொல்கிறேன் என்றேன். முதலாளிமார் இந்த ஏற்பாட்டிற்கு இணங்கினார்கள்.

மறுநாள் தொழிலாளர் தலைவர்களை அழைத்தேன் நான் சமாதானம் பண்ணி வைக்கிறேன். ஆனால் எந்த முறையில் சமாதானம் இருக்கும் என்பதை உங்கள் வேலை நிறுத்தம் நோட்டீஸ் தேதி கழியும் வரை சொல்ல மாட்டேன். என் வார்த்தையில் நம்பிக்கை வைத்து அன்றே வேலைநிறுத்தம் நோட்டீசை வாபஸ் பெறுவதாக நீங்கள் அறிக்கை வெளியிட வேண்டும் என்றேன். முதலில் தயங்கினார்கள், பின்னர் நான் சொன்னபடியே சம்மதித்து அறிக்கை வெளியிட்டு விட்டார்கள். இரண்டு நாள் கழித்து லேபர் கமிஷனர் சென்னையிலிருந்து வந்து என்னைக் கண்டார். "சமாதான உடன்படிக்கையின் ஷரத்து தெரியாமலே எப்படி சார் தொழிலாளர்கள் பணிமுடக்கம் நோட்டீஸை வாபஸ் பெற்றார்கள்" என்று அதிசயித்தார். "உன்படிக்கை ஷரத்து என்ன என்று தெரியலாமோ" என்று என்னிடம் கேட்டார். அவருக்குமே 'பெப்பே' என்று சொல்லிவிட்டேன். ஏமாற்றத்தோடேயே திரும்பினார் என்றாலும் போகும் போது 'இது உங்களுக்கு ஒரு பெரிய வெற்றி சார்' என்று சொல்லிவிட்டே சென்றார். சும்மா சட்டத்தையே சுட்டிக்காட்டிக் கொண்டிருக்காமல் மனிதாபிமானத்தையே முக்கிய குறிக்கோளாகக் கொண்டு காரியங்களைக் கவனித்தால் எந்தச் சிக்கலையும் எளிதாகத் தீர்க்கலாம் என்பது என் நம்பிக்கை.

இன்னும் மோட்டார் ரூட்டிற்குப் பெர்மிட் வழங்குதல், சினிமாக் கொட்டகைக்கு லைசென்ஸ் வழங்குதல், ரைஸ் மில்களுக்கு லைசென்ஸ் வழங்குதல் எல்லாம் கலெக்டர்களுக்கு இப்போது எவ்வளவு தலைவலியைக் கொடுக்கிறது, அதில் அரசியல்வாதிகளின் தலையீடு எவ்வளவு தூரம் நியாயம் வழங்குவதை பாதிக்கிறது என்பதைப் பற்றி எல்லாம் விரிவாகவே நான் கூறுதல் கூடும்.

என்றாலும் அவைகளைப் பற்றி இக்கட்டுரையில் ஒன்றும் கூறுவதாக இல்லை. நான் ஓய்வு பெறவதற்கு ஒன்றிரண்டுமாதங்களுக்கு முன்னே நான் நடத்திய ஒரு நாடகத்தைப் பற்றி மட்டும் ஒரு சில வார்த்தைகள் சொல்லிவிட்டு நிறுத்திக் கொள்கிறேன்.

ஆண்டுக்கொரு முறை சர்க்கார் சேவகத்தில் உள்ளவர்களுக் கெல்லாம் ஒரு விளையாட்டு விழா நடக்கிறதுண்டு. அந்த விழாவுடன் சேர்ந்து ஒரு கலை நிகழ்ச்சி நடத்துவதும் உண்டு. நான் கலெக்டராக இருந்த காலத்தில் ஒரு நாடகம் நடத்த ஏற்பாடு செய்தேன். நாடகத்திற்குத் தலைமை தாங்க முதலமைச்சரை அழைத்தேன். நாடகத்தை நானே எழுதினேன். 'சர்க்கார் சேவகம் அன்றும் இன்றும்' என்று நாடகத்திற்குப் பெயர் சூட்டினேன். அன்று அதிகாரிகள் எல்லாம் மக்கள் பேரில் அதிகாரம் செலுத்தி ஆண்டார்கள் என்பதை விளக்கிய தோடு, இன்று மக்கள் எப்படி அதிகாரிகள் பேரில் குதிரை ஏறுகிறார்கள், அதற்கு அரசியல்வாதிகள் எப்படி எப்படி எல்லாம் உதவுகிறார்கள், நிர்வாகத்தில் அவர்கள் தலையிட்டு எப்படி குட்டையைக் குழப்பு கிறார்கள் என்றெல்லாம் காட்டினேன். ஏன்? சொல்லப்போனால், நானே ஒரு ரிட்டயர்டு தாசில்தார் வேடம் தாங்கி நடித்தேன்.

நாடகம் இரண்டு மணி நேரம் நடந்தது. வந்திருந்த மக்கள் எல்லாம் சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாயினர். கடைசியில் நான் பேசும் போது "நாங்கள் எல்லாம் வருஷம் 365 நாளும் ஆபிஸ் பேப்பர்களையே கட்டிக்கொண்டு அழுகிறவர்கள். அப்படி அழப் பிறந்தவர்கள் ஒரு நாளாவது சிரித்து மகிழலாமே என்று எண்ணினோம். நாங்கள் சிரிப்பதுடன் உங்களையும் சிரிக்க வைக்கலாமே என்றுதான் விரும்பினோம். எங்கள் எண்ணம் எவ்வளவு தூரம் நிறைவேறி இருக்கிறது என்பதை நீங்கள் சிரித்துச் சிரித்து எங்களுக்கு உற்சாக மூட்டியதிலிருந்து தெரிந்து கொண்டேன். நாடகத்தில் நல்ல நடிப்பு இருந்தது என்றால் பாராட்டுகளை நடித்த நண்பர்களுக்குக் கொடுத்து விடுங்கள். ஏதாவது குறையிருந்தால் அதை எனக்குத் தள்ளுங்கள். நான்தான் இந்த நாடகம் எழுதியவன்" என்று கூறினேன். தலைமை வகித்த முதலமைச்சர் நடிகர்களை எல்லாம் பாராட்டி விட்டுச் சொன்னார். "தொண்டைமான் சிறந்த ஒரு எழுத்தாளர், பேச்சாளர் என்பதை எல்லோரும் அறிவோம். ஆனால் அவர் ஒரு சிறந்த நடிகரும் கூட என்பது எனக்குத் தெரியாது. மிகவும் நன்றாக நடிக்கிறார். மற்றவர்களையும் நடிக்கப் பழக்கியிருக்கிறார். இப்படி ஒரு நாடகத்தை எழுதி அதை நடிக்க வெறும் திறமை மட்டும் போதாது. மிக்க துணிச்சலும் வேண்டும்.

அது அவரிடத்தில் நிறைய இருக்கிறது. இந்த எழுத்தாளர் கலெக்டரை நான் பாராட்டுகிறேன்" என்று முடித்தார்.

கலெக்டர் போன்ற அதிகாரிகள் தங்கள் பணியைச் சிறப்பாகச் செய்ய வேணுமானால் அவர் நேர்மையானவராகவும் திறமைமிக்கவராகவும் மட்டுமிருந்தால் போதாது. மனிதாபிமானமும் தைரியமும் உள்ளவராய் விளங்க வேண்டும். இந்த மனிதாபிமானத்தையும் தைரியத்தையும் பெற எனக்கு ரொம்பவும் உதவியது. எழுத்துத்துறை. ஆகவேதான் எழுத்தாளர், கலெக்டர் என்று பாராட்டப்பட்டதை நான் பெரிதாக மதிக்கிறேன்.

பி.கு. : அப்போது முதலமைச்சராக இருந்தவர் பெருந்தலைவர் காமராஜர்.



குறத்தி இராஜகுமாரனைத் தூக்கிச் செல்லல்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# நினைவுண்டு, நினைவுண்டு!

நினைவுண்டு! நினைவுண்டு!
நான் பிறந்த வீடெதன்று
நினைவுண்டு! நினைவுண்டு!

பல கணியின் இடைவழியாய்
பகலவனின் கதிர் ஒளிகள்
பலகாலும் பார்த்ததெலாம்
நினைவுண்டு! நினைவுண்டு!

அண்ணனிட்ட விதை முளைத்து
அழகாக வளர்ந்தோங்கி
அணி அணியாய் மலர் சொரிந்து
மனம் மகிழ வைத்ததுமே
நினைவுண்டு! நினைவுண்டு!

மல்லிகையும் ரோஜாவும்
மணமுடனே மலர்ந்தளித்த
வண்ணக் கோல மெல்லாம்
நினைவுண்டு! நினைவுண்டு!

சிட்டுக் குருவியைப் போல்
சிறகடித்துப் பறந்ததுவும்
சிறு குறும்பு செய்ததுவும்
நினைவுண்டு! நினைவுண்டு!

## அவன் அமரன்

'சென்றிடுவோம் அவன் பின்னே
செல்கதிக்குத் துணை அவனே'
என்று சொலி ஒரு கூட்டம்
ஏகி நடந்தது காண்

அன்றொரு நாள் காலையிலே
ஆர்வமுடன் அணி அணியாய்
'இன்றே நம் லட்சியத்தை
இனிதாய் அடைந்திடுவோம்

குன்றேறச் சொன்னாலும்
கூசாமல் பின் வருவோம்'
என்றே நடந்தார்கள்
எல்லோரும் ஒற்றுமையாய்.

முன்னின்று நடத்துகின்ற
முதல்வன் அடிச்சுவட்டைப்
பின்பற்றிச் சென்றார்கள்
பின் திரும்பிப் பார்க்காமல்.

வலிவுடைய பெருமக்கள்
வாகாய் நடந்தார்கள்
நலிவுற்ற பொழுதகத்தும்
நடந்தார்கள் மற்றவரும்

நீண்ட நெடுவழியாய்ப் போயிற்று
நிற்காமல் நடந்தாலும்
மூண்ட பெருவழியின்
முடிவோ தெரியவிலை.

குன்றேறிக் கடந்தாரும்
குமைந்தார்கள் அலுப்புற்று
இன்றே நாம் சென்றடைவோம்
என்றவரும் மனம் உடைந்தார்

நம்பிக்கை இழந்தவர்கள்
நலிந்தார்கள், மெலிந்தார்கள்
வம்புக்காய் இவன் பின்னே
வந்தலுத்தோம் என்றார்கள்

வழிகாட்டும் வள்ளலையே
வைதிடவும் துணிந்தார்கள்
பழித்தார்கள் பல சொல்லி
பண்பறியா ஒரு சிலரும்

அன்னவரில் ஒரு கயவன்
ஆங்காரம் கொண்டெழுந்து
முன் சென்ற தலைவனவன்
வழி மறித்து முன் நின்றான்

ஓங்கி ஒரு தடி கொண்டு
உச்சந்தலை தாக்கி
தாங்க வலியற்ற அந்தத்
தலைவனையே முடித்துவிட்டான்.

கல்லாய்ச் சமைந்துவிட்டார்
கற்றவரும் மற்றவரும்
எல்லாரும் நின்றிருந்தார்
என்செய்வ தென்றறியாமல்

‘இனி நமக்கு வழிகாட்டி
யாரே!’ எனப் புலம்பி
தனித்தனியே தவித்தார்கள்
பதைத்தார்கள்,

இனி நமக்கு வழிகாட்டி
நாம் கொன்ற உத்தமனே!
அன்னவன்தன் அடிச்சுவட்டில்
அயராமல் நடந்திடுவோம்

என்று முழங்கி ஓர் அறிஞன்
எல்லோர்க்கும் முன் நடந்தான்
நன்றென்றார் மற்றவரும்
நாணித் தலை குனிந்து

அண்ணல் மறைந்தாலும்
அவன் அமரன் என்றுணர்ந்து
திண்ணிய நெஞ்சமுடன்
தலை நிமிர்ந்து நின்றார்கள்.

மூலம் : ரவீந்திரநாத தாகூர் | தமிழில் : பாஸ்கரன்

# எங்கள் கவிராயர்

“அட எருமைமாடுகளா! கழுதைகளா! ஒருதரம் சொன்னால் புத்தியில்லை? ஏன் இப்படி சத்தம் போடுகிறீர்கள்?” என்று ஒரு ஆசிரியர் மூக்கின் மேலிருக்கும் கண்ணாடியை நெற்றிக்குத் தள்ளிக் கொண்டு, ஆறாம் பாரத்தில் உள்ள ஐம்பது மாணவர்களைக் கோபித்தால், மாணவர்கள் என்ன செய்வார்கள் என்று நினைக்கிறீர்கள்? உடனே, “இப்படி எல்லாம் எங்களை பேசலாச்சா? எங்களுக்கு சுய மரியாதை கிடையாதா? உடனே ‘ஸ்டிரைக்’ பண்ணுவோம் வாருங்கள்” என்று எழுந்து மாணவர்கள் வெளியே சென்று விடுவார்கள் என்றுதானே நினைக்கிறீர்கள். அதுதான் இல்லை. அப்படியெல்லாம் மாணவர்கள் ஸ்டிரைக் பண்ணுவது 1946 ஆம் வருஷத்திலே நடக்கலாம். ஆனால் 1922 லே ஆம், இருபத்திநான்கு வருஷத்துக்கு முன்பு நடக்கவில்லை. காரணம், அப்போதுள்ள மாணவர்களுக்குச் சுயமரியாதையும், சுதந்திர உணர்ச்சியும் கிடையாது என்பதில்லை. இப்படியெல்லாம் திட்டுகிற உபாத்தியாயர் யார் என்றுதான் கேள்வி. அப்படித் திட்டிய வாத்தியார்தான் எங்கள் தமிழ்ப் பண்டிதர் மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள். அவருடைய திட்டுகளையெல்லாம், இந்து கலாசாலையில் அன்று படித்த மாணவர்களாகிய நாங்கள் ஆசீர்வாதமாகவே கொண்டோம், திட்டியவர் உள்ளத்தில் யாதொரு கல்மிஷமும் இல்லாத காரணத்தினால். திட்டி முடிந்ததும் வகுப்பில் ‘குப்’ என்று ஒரே சிரிப்பு. அதன் பின் அமைதி. இதெல்லாம் தினசரி வகுப்பு ஆரம்பிக்குமுன் நடக்கும் சம்பவம். தமிழ் வாத்தியார் கிளாஸ் என்றால் அது விளையாடும் நேரம், விடுமுறை எடுப்பதற்குரிய காலம் என்றெல்லாம் அந்தக் காலத்து மாணவர்கள் சிலர் எண்ணியிருந்ததுதான் அப்படியெல்லாம் வகுப்பு ஆரம்பிக்குமுன் மாணவர்கள் கும்மாளி போடுவதற்குக் காரணம். ஆனால் வகுப்பில் பாடம் ஆரம்பித்துவிட்டாலோ அதை விடக் கும்மாளிதான், கவிராயர்

அவர்கள் சொல்லும் பாடல்களைக் கேட்பதிலே. எத்தனை எத்தனையோ ரஸமான பாடல்கள், நையாண்டிப் பாடல்கள், எல்லாம் வந்து மாணவர்களை ஒரு குலுக்கு குலுக்கும். தமிழ்க் கவிகளில் ஈடுபடுத்தும். தமிழின் பேரில் ஒரு ஆர்வமே பிறக்கும்படி செய்துவிடும். அவர்களிடம் மாணவராக இருந்து அவர்கள் தந்த தமிழார்வத்தை அனுபவித்தது காரணமாகத் தமிழ்நாட்டில் தக்க புகழ்பெற்று விளங்கும் பெரியார் பலர் உண்டு. சென்னைப் பல்கலைக்கழகத்துப் பேராசிரியர் திரு ஆர்.பி. சேதுப்பிள்ளையவர்களே ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

மே.சொ. சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள், நல்ல கவிராயர் குடும்பத்திலே பிறந்தவர்கள். குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர் திரிகூடஇராஜப்பன் கவிராயர், திருவாவடுதுறை ஆதீனம், மகாசன்னிதானம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் முதலானவர்கள் பரம்பரையை சேர்ந்தவர்கள் என்றால் பல சொல்வானேன். திருவாவடுதுறை மடத்தில் மகா வித்துவான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்களிடம், டாக்டர் சுவாமிநாத அய்யர் அவர்களோடு ஒரு சாலை மாணாக்கராக இருந்து பாடம் கேட்டவர்கள். இவர்களையே தனக்குப் பின் மடாதிபதியாக ஆக்க வேண்டும் என்று நினைத்து, தேசிகர் அவர்கள் இவர்களுக்கு சின்னப் பட்டம் கட்ட விரும்பியபொழுது மடத்தைவிட்டே இவர்கள் தப்பியோடி வந்துவிட்டது பலருக்கும் தெரிந்த ஒரு ரகசியம். மடாதிபதியாக இருந்திருந்தால் தமிழ் வளர்ச்சிக்கு எவ்வளவோ செய்திருக்கக்கூடும். மடத்தையும் விருத்தி செய்திருக்கலாம். ஆனால், மடத்திற்கு ஏற்பட்ட நஷ்டம் திருநெல்வேலி இந்து கலாசாலைக்கு லாபகரமாக முடிந்தது. மடத்தை விட்டு வெளியே வந்ததும் இந்து கலாசாலையில் தமிழ் ஆசிரியராக அமர்ந்தார்கள். ஸ்ரீ சிவராம பிள்ளை அவர்களோடு ஒத்துழைத்தார்கள். மூன்றாவது பாரம் வகுப்பிலிருந்து இண்டர்மீடியேட் வகுப்பு வரை பாடம் எடுத்தார்கள். முப்பது முப்பத்தைந்து வருஷங்களாக வேலை பார்த்து எண்ணற்ற மாணவர்களின் அன்புக்குப் பாத்திரம் ஆனார்கள்.

பாடம் நடத்துவதைவிட பாட்டுக் கட்டுவதில் அவர்கள் மிகு சமர்த்தர். பாடல்கள் எல்லாம் நல்ல அர்த்த புஷ்டியுள்ள சிலேடை நயமுடையதாய் கேட்பவர்களுக்கு இன்பம் அளிப்பதாய் இருக்கும். யாருக்காவது உபசாரப் பத்திரம் தயார் செய்ய வேண்டுமானால் மாணவர்கள் கவிராயர் அவர்களிடம்தான் ஓடுவார்கள். கவிராயர் அவர்களும் உடனே பாட்டுக்கட்டிக் கொடுக்கத் தயங்கமாட்டார்கள்.

'நாமங் களவாணி' என்று ஒருவரைத் தூற்றுவது போலச் சொல்லிப் பின்னால் 'நா மங்களவாணி' என்று வாழ்த்துவார்கள்.

**"பாட்டில் (Bottle) ஏய் பொருள் கொண்டு**
**ரஸாயன சாத்திரம் பயிற்றும் நின்பால் யாங்கள்**
**பாட்டிலே பொருள் கொண்டு பயிற்றுதும்"**

என்றுதான் "கெமிஸ்டிரி லெக்சரர்" ஸ்ரீ டி.வி. நீலகண்டம் பிள்ளையவர்கள் பள்ளிக்கூடத்தைவிட்டு விலகியபோது பாடிக் கொடுத்தார்கள். கல்லூரிக் காரியதரிசியாயிருந்த சர் எஸ். குமாரசாமி ரெட்டியார் அவர்கள் மந்திரி பதவி ஏற்றபோது "இருவேறு உலகத்து இயற்கை, திரு வேறு. தெள்ளியராதலும் வேறு" என்ற குறள் இவரிடம் பொய்த்துவிட்டது. கல்வியும் திருவும் ஒருங்கே இவரிடம் இருந்த காரணத்தினால்தானோ இவருக்கு 'இரட்டியார்' என்று பெயர் வாய்த்தது என்றெல்லாம் பாடினார்கள்.

பள்ளி ஆசிரியர்களுக்கும் காரியதரிசிகளுக்கும்தான் பாட்டெழுதவார்கள் என்றில்லை. தன்னிடம் படித்த பள்ளி மாணவர்களையும் பாட்டெழுதி வாழ்த்துவார்கள்.

**திருவளர் மருமச் செங்கண்மால் பணியும்**
**சிவபிரான் திருவடி பணிந்தே**
**மருவளர் மாலை சூட்டு பாற்கரனாம்**
**மாணவ! பாற் கரம் பிடித்தே**
**பெருவளமுடன் நீ நல்லறம் பேணும்**
**பெற்றியை யான் மிக மகிழ்ந்தேன்**
**சருவ நன்னலமும் எம்பிரான் உமக்குத்**
**தருகென வாழ்த்துகின்றேனே.**

என்ற பாட்டு யாருடைய கல்யாணத்தில் பாடியிருக்க வேண்டும் என்று நான் சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

இவர்களுடைய கல்வித் திறமையை, திருநெல்வேலி வாசிகளும் இந்து கலாசாலை மாணவர்களும் மாத்திரம் அனுபவித்தார்கள் என்றில்லை. சென்னைக்கு மாட்சிமை தங்கிய வேல்ஸ் இளவரசர் விஜயம் செய்தபோது தமிழ்நாட்டில் தலைசிறந்த வித்துவான்களாக நான்கு பேரைப் பொறுக்கி அவர்களுக்கு 'கில்லத்' என்ற மரியாதையை அரசாங்கத்தார் செய்தார்கள். அப்படிப் பொறுக்கி எடுத்த நான்கு பேர்களில் இவர்களும் ஒருவர், சென்னை சென்று, வேல்ஸ் இளவரசர் கையால் கொடுத்த தங்கத்தோடா - பீதாம்பரங்கள் எல்லாம் பெற்று திருநெல்வேலிக்குத் திரும்பிவந்த

போது மாணவர்களாகிய நாங்கள், எதிர் சென்று அழைத்து வந்து உபசாரப் பத்திரங்கள் எல்லாம் வாசித்துக் கொடுத்தோம். உபசாரப் பத்திரத்தில் "ஐயா! தங்களுக்குக் கிடைந்த இந்த கில்லத் தங்களுக்கு மட்டுமே கிடைத்ததாக நாங்கள் கருதவில்லை, தங்களை அண்டியிருக்கும் தமிழ் மாணவர்களாகிய எங்கள் எல்லோருக்குமே கிடைத்தாகத் தான் கருதுகிறோம்" என்று எழுதியிருந்தோம். உடனே அவர்கள் "ஆம்! வேல்ஸ் இளவரசர் இதை ஒரு கையில் கொடுக்க வில்லை பலகையில் தான் கொடுத்தார்" என்று குறிப்பிட்டார்கள். பின்னால் விசாரித்ததில் நல்ல அழகாய் வேலைப்பாடு செய்த பலகைத் தட்டில் வைத்துத்தான் கில்லத் பரிசு கொடுக்கப்பட்டது என்று அறிந்தோம். பலகையும், பல´. கையும் நல்ல சிலேடையாக அமைந்து கேட்டவர்களுக்கு பரம சந்தோஷத்தைக் கொடுத்தது. இப்படி எத்தனை எத்தனையோ சம்பவங்கள், சிலேடையும் யமகமுமாகவே அவர்கள் பாடல்களைக் கொட்டி எங்களை மகிழ்வித்திருக்கிறார்கள்.

கவிராயர் அவர்களைப் பற்றி வெள்ளகால் ராவ்சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பல தடவை பாராட்டிப் பேசுவதை நான் கேட்டிருக்கிறேன். முதலியாரவர்கள் தாம் பாடும் பாட்டுக்களையெல்லாம் முதல் பரிசீலனைக்கு அனுப்புவது இவர்களுக்கும் டாக்டர் சாமிநாத அய்யர் அவர்களுக்கும்தான். பாட்டின் ஓசை நயத்தை அறிவதில் கவிராயர் அவர்களை மிஞ்சியவர்கள் ஒருவருமே கிடையாது என்பார்கள். நல்ல சுவையை அறியும் காது படைத்தவர்கள் அவர்கள் என்பார்கள். அந்த உள்ளுணர்ச்சி அவர்களுக்கு கருவிலே அமைந்த திருவாகும். அந்த உணர்ச்சி காரணமாகத்தான் நல்ல சுவையுடைய பாட்டுக்களைத் தாம் அனுபவிப்பதுடன் மற்ற மாணவர்களையும் அனுபவிக்கும்படி செய்யும் திறன் அவர்களிடம் இருந்திருக்கிறது.

இத்தகைய எங்கள் கவிராயர் அவர்கள், கலாசாலையின் சேவையை விட்டு 1930 இல் பிரிந்து விட்டார்கள். 1931 இல் இறைவன் திருவடியையே சேர்ந்துவிட்டார்கள். கலாசாலையில் அவர்கள் செய்த சேவையை நினைவூட்ட அவர்களுடைய திருவுருவம் ஆங்கிலச் சொற்பொழிவு மண்டபத்தை அலங்கரிக்கிறது. படத்தில் கில்லத் உடையுடனேதான் அவர்கள் காட்சி அளிக்கிறார்கள்.

எங்கள் கவிராயர் அவர்களைப் பற்றி இன்னும் எவ்வளவோ சொல்லலாம். ஆனால் இடம் வேண்டுமே!

**சீர்த்திவளர் துறைசையிற் சுப்பிரமணிய**
**தேசிகன் தாள் சிரத்திற் கொண்டோன்**
**பார்த்திபர்கள் வழங்கு பல பரிசுடையோன்**
**மேலகரப் பதியில் வாழ்வோன்**
**ஆர்த்தியுடன் அடியனேுக்கு அருந்தமிழ் நூல்**
**உணர்த்தும் அருள் ஆழி ஆனோன்**
**வேர்த்து வெகுள் அறியாச் சுப்பிரமணிய**
**கவிஞன் அடி விரும்பி வாழ்வாம்**

என்று அவர்களுடைய மற்றொரு மாணவர், திருவாவடுதுறை ஆதின வித்துவானும் எனது தமிழாசிரியர்களில் ஒருவருமான ஸ்ரீ வி. சிதம்பரராமலிங்கம் பிள்ளையவர்களுடன் சேர்ந்து எங்கள் கவிராயர் அவர்களை வாழ்த்தி வணங்குவதைத் தவிர வேறு செய்ய அறியேன்.



குறத்தி இராஜகுமாரனைத் தூக்கிச் செல்லல் [மறுபக்கம்]
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# தமிழறிஞர் முதலியார்

"உங்களுக்கு அந்தப் பாட்டு ஞாபகத்தில் இருக்கிறதா?"

"எந்தப் பாட்டு?"

"என்ன? சுந்தர காண்டத்தில் அனுமன் சீதையிடம் கணையாழியைக் கொடுத்ததும், அவள் அடைந்த நிலையை வருணிக்கும் பாட்டு."

"ஓ! அதுவா!

**வாங்கினள்; முலைக்குவையில் வைத்தனள்; சிரத்தால்**
**தாங்கினள்; மலர்க்கண்மிசை ஒற்றினள்; தடந்தோள்**
**வீங்கினள்; மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்பொடு**
**ஏங்கினள்; உயிர்த்தனள்; இதென்னதெனலாமே.**

என்ற பாட்டுத்தானே!"

"ஆமாம். அந்தப் பாட்டுத்தான்! அந்தப் பாட்டுத்தான்! சரியாக நான் நினைத்த பாட்டையே சொல்லிவிட்டீர்களே! சபாஷ்" (அளவிறந்த உத்சாகம் உள்ளத்தில் தோன்றியதை முகம் காட்டிற்று.)

"ஆம். அது நல்ல பாட்டுத்தான். கம்பன் பாட்டில் எதுதான் நல்ல பாட்டில்லை?"

"அப்படியா! அந்தப் பாட்டின் விசேடம் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா? தெரிந்தால் சொல்லுங்கள் பார்ப்போம்."

(இது ஏதடா வம்பாக முடிந்தது)

"எனக்கு அப்படி விசேடமாக ஒன்றும் தெரியவில்லை. தாங்களே கொஞ்சம் சொல்லுங்கள். நான் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன்."

"அப்படியானால் கேளுங்கள். இமயமலையின் உயர்ந்த சிகரத்தைக் காண, ஒரு கூட்டம் புறப்படுகின்றது. அவர்களுக்கு வழிகாட்டியாய், அதற்குமுன் பல தடவை அச்சிகரத்தைக் கண்ட ஒருவன் அவர்களை அழைத்துச் செல்கிறான். எல்லோரும் செல்லக்கூடிய ஒரு எல்லைவரை அக்கூட்டத்தை அவன் கூட்டிச்சென்று விடுகிறான். அந்த எல்லைக்கு அப்புறம் அக்கூட்டத்தார் அவனைத் தொடர்ந்து போவதற்கு இயலவில்லை. ஆனால் வழிகாட்டியாக வந்தவனோ, ஒரே தாவில் தாவி, சிகரத்தின் உச்சிக்குப் போய் விடுகிறான். 'இதுதான் உயர்ந்த சிகரம்' என்று கைகளை அகல விரித்துக் காட்டுகிறான். அவன் அச்சிகரத்திற்குத் தாவிப்போன முறையையும், அவன் அங்கு நின்று கொண்டு கைகளை விரித்துக் காட்டுகின்ற நிலையையும் பார்த்துச் சிகரத்தின் உச்சியைக் காணச் சென்றவர்கள் அப்படியே அதிசயித்து நிற்கிறார்கள்.

இதேபோலத்தான் கவிச்சக்கரவர்த்தி கம்பரும் வாசகர்களாகிய நம்மையெல்லாம் தம்முடன் இழுத்துச் செல்கிறார். சிறையிருந்த செல்வியான சீதை, தன் நாயகன் அனுப்பிய கணையாழியைப் பெற்றவுடனே, அடைந்த இன்பத்தை நம்மால் எவ்வளவு தூரம் அனுபவிக்க முடியுமோ, அவ்வளவையும் அனுபவிக்கும்படி செய்துவிட்டு, நாம் அவரைப் பின் தொடர முடியாதிருக்கிற அந்த நிலையில், சீதை அடைந்த அத்தியந்த இன்பத்தைத் தாம் உணர்ந்து, அது உணரக்கூடியதேயன்றி, உரைக்கக்கூடியதன்று என்பதைப் புலப்படுத்த "இதென்னதெனலாமே" என்று கூறித் தமது கவிதா சக்தியின் சிகரத்திற்குத் தாவி விடுகிறார். நாமெல்லாம் அவருடைய கவித்திறனைக் கண்டு அப்படியே ஆச்சரியப்படுவதைத் தவிர, வேறு செயலில்லாதவர்களாக இருக்கிறோம். தெரிந்ததா இப்போது 'இதென்ன தெனலாமே' என்று கம்பன் பாடியதின் அர்த்தம்."

"ஆமாம். ரொம்ப அற்புதமாய்த் தானிருக்கிறது."

இவ்வளவும், திரு. வெள்ளக்கால் முதலியாரவர்களுக்கும், எனக்கும் பல வருஷங்களுக்கு முன் நடந்த ஒரு சம்பாஷணை. இந்த சம்பாஷணையைப் படிப்பதில், ஒரு ரஸமும் இருக்காது. இந்த நிகழ்ச்சியையும், பேச்சையும் சினிமாவாகப் படம்பிடித்திருந்தால், முதலியாரவர்களைப் பலர் நன்கு தெரிந்திருக்கலாம். ஆனால், சம்பாஷணை சினிமா ஸ்டுடியோவில் நடக்கவில்லையே. வெள்ளக்காலில் ஒரு வாய்க்கால் கரையிலே, ஒரு அழகிய தென்னந்தோப்பின் பக்கம் அல்லவா நடந்தது. அந்தப் பேச்சைக் கேட்கும் பாக்கியம் எனக்கு மட்டுந்தானே கிடைத்தது.

1936 ஆம் வருஷம் கிறிஸ்துமஸ் விடுமுறையில் நான் சில நாட்கள் வெள்ளக்கால் முதலியார் அவர்கள் வீட்டில் தங்கினேன். காலை 6 அல்லது 6.30 மணியிருக்கும். அப்போதுதான் நான் படுக்கையைவிட்டு எழுந்து வெளியே கொஞ்சம் உலாவி வரப் புறப்பட்டேன். முதலியார் அவர்களோ, காலை நாலு மணிக்கே படுக்கையை விட்டு எழுந்திருப்பவர்கள். 5 மணிக்குள் காலைக் கடன்கள், சாப்பாடு எல்லாம் முடிந்துவிடும். 5 மணி முதல் 6.30 மணி வரை ஊருக்கு வெளியே வாக்கிங். வாக்கிங் என்றால் அரை மைல் ஒரு மைல் அல்ல. குறைந்தது மூன்று மைல். முதலியார் அவர்கள் வாக் முடிந்து திரும்புகிற நேரமும், நான் வாக் புறப்படுகிற நேரமும் சரியாயிருந்தது. இடைவழியில் சந்தித்தோம் இருவரும். அப்போதுதான் இவ்வளவு பேச்சும்.

என்ன உத்சாகம்! என்ன துள்ளல்! என்ன குதிப்பு! இமயமலை ஏறுபவர்களுக்கு வழிகாட்டியாகப் போகும் வழிகாட்டி, (Guide) தான் தான் என்றல்லவா தன்னைப் பாவித்துக் கொண்டார்கள். வாய்க்கால் கரையானாலும், மலையேறுகிற பாவனைதான் பேச்சு முழுவதும். இமயமலை ஏறுவதற்கு இவர்கள் வழிகாட்டியாக அமையாவிட்டாலும், கம்பன் கவிதா சிகரத்திற்கு நம்மையெல்லாம் கூட்டிச் செல்வதற்கு இவர்களைவிடச் சிறந்த ஒரு வழிகாட்டி உண்டா? என்றெல்லாம் நினைத்தேன். ஐந்து வருஷங்கள் ஆகிவிட்டன. ஆனாலும் அந்தப் பேச்சை நினைத்தால் அவர்களது உடல் உறுதி, தளராத உக்கம், உத்சாகமான உள்ளம், கம்பன் பக்தி, தமிழ் வெறி எல்லாம் இப்போதும் என் கண்முன்னே வந்துவிடுகின்றன.

இவ்வளவும் யாரைப் பற்றிச் சொல்லுகிறேன் என்று நினைக்கிறீர்கள்? எண்பத்தி நான்கு ஆண்டுகள் நிறைந்த நமது தமிழ்ப் பெரும்புலவர் வெள்ளக்கால், ராவ் சாகிப் சுப்பிரமணிய முதலியாரவர்களைப் பற்றித்தான்.

நான் சொன்ன இவ்வளவு விஷயங்களையும் கவி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள்.

> **"எண்பதாண் டான இளைஞனே! இன்னமுதின்**
> **பண்பெலாங் காட்டுதமிழ்ப் பாவலனே! – நண்பனே**
> **வெள்ளக்காற் செல்வனே! வேள்சுப் பிரமணிய**
> **வள்ளலே வாழ்க மகிழ்ந்து!"**

என்ற வெண்பாவில் எவ்வளவு எளிதாகச் சொல்லி விடுகிறார்கள்.

## 2

நூறு ஆண்டு வாழ்வது எப்படி? என்பது ஒரு பெரிய பிரச்சினை. இதற்கு என் பதில் "தமிழ்ப் படிப்பது" என்பதுதான். "என்ன ஐயா! தமிழ் படித்தால் நூறு ஆண்டு வாழ முடியுமா? இது என்ன நடக்கிற காரியமா, ஐயா!" என்று பலர் சந்தேகிக்கலாம். டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களையும், வெள்ளக்கால் முதலியார் அவர்களையும் பார்த்தவர்களுக்கு - ஏன்? - கேள்விப்பட்டவர்களுக்குக் கூட இந்தச் சந்தேகம் எழ வேண்டிய அவசியமேயிருக்காதே! இருவருக்கும் வயது எண்பது ஆண்டுக்கு மேல் என்பது உலகம் அறிந்ததுதானே! இருவருஞ் செய்த தமிழ்ப் பணியைத் தமிழர்கள் மட்டுமா தெரிந்து கொண்டிருக்கிறார்கள். தமிழ் படித்தால், தமிழ்த் தாய்க்கு சேவை செய்தால், இவர்களைப் போல் சேவை செய்ய வேண்டும் என்று மட்டும் கங்கணம் கட்டிக் கொள்ளுங்கள். அப்படியே செய்யவும் செய்யுங்கள், அதன் பின் நீங்கள் நூறு ஆண்டு வாழாவிட்டால் என்னைக் கேளுங்கள்.

பழைய நகைகளான சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி முதலியவைகளைப் புதுப்பித்துத் தமிழ்த்தாய்க்கு அணிவித்து, அவள் அழகைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தார்கள் டாக்டர் ஐயர் அவர்கள். முதலியார் அவர்களோ, தமிழன்னைக்கு இந்தப் பழைய காலத்துக் கர்நாடக நகைகள் மட்டும் போதாது, புது அணிகளாலும் அவள் அலங்கரிக்கப்பட வேண்டும் என்று நினைத்தார்கள். அவர்கள் செய்து அணிவித்த அணிகள்தான் சுவர்க்க நீக்கம், அகலிகை வெண்பா, கோம்பி விருத்தம் முதலியன. இரு பெருங்கிழவரது சேவையையும், தமிழ் மக்கள் போற்றக் கடமைப்பட்டவர்களே.

## 3

முதலியார் அவர்கள் தொண்டைமண்டல வேளாளர் வகுப்பிலே, ஒரு உயர்ந்த குடும்பத்திலே பிறந்தவர்கள். திருநெல்வேலி ஜில்லாவில் பிரபலமான தளவாய் முதலியார் அவர்கள் குடும்பத்திலும், ஆறை அழகப்ப முதலியார் குடும்பத்திலும் சம்பந்தம் செய்து கொண்டவர்கள். இளமையிலேயே, இவர்களுக்குத் தமிழார்வம் ஏற்பட்டு விட்டது. இவர்கள் உள்ளத்தில் தமிழ்க் காதலை ஊட்டியவன், தளவாய் அரண்மனையில் வேலை செய்து வந்த முத்துச்சாமி பிள்ளை என்ற வேலையாள்தான். அவனுக்கோ இரண்டு கண்ணுந் தெரியாது. ஆனால் கதை சொல்லுவதிலோ சமர்த்தன். அவன் வேலை ஓய்ந்திருக்கும் நேரமெல்லாம், நமது முதலியார்

அவர்களுக்கு, பாரதம் இராமாயணம், ஸ்காந்தம், திருவிளையாடற் புராணம் முதலிய கதைகள் சொல்வதிலே கழியும். அவன் தான் இவர்களுடைய தமிழ்ப் பயிற்சிக்கு மூல குரு. இவர்கள்தான் அவனது பிரதம சிஷ்யர். இப்படிக் குருட்டுக் குரு காட்டிய வழியிலே நடந்த முதலியாரவர்கள் நல்ல இளைஞராக இருக்கும்போது, திருநெலவேலி தெற்குப் புதுத்தெரு சவுக்கைப் புலவர்களின் பழக்கம் கிடைத்தது. சவுக்கையை அழகு செய்த வள்ளல் முத்துச்சாமி பிள்ளையவர்களும், கவிஞர் அழகிய சொக்காநத பிள்ளை, நெல்லையப்பன் கவிராயர், வேம்பத்தூர் பிச்சுவையர், முகவூர் கந்தசாமிக் கவிராயர், அருணாசலக் கவிராயர் சின்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் முதலியவர்களும் இவர்களுக்குத் தோழர்கள் ஆனார்கள். கேட்பானேன்! சிலேடையும், யமகமும், திரிபுமாகத் தமிழ்ப் பாட்டுக்களைக் கொட்டுக் கொட்டென்று கொட்டித் தள்ளிவிட்டார்கள். 'நெல்லைச் சிலேடை வெண்பா' எல்லாம், இந்தத் தமிழ்ப் பண்ணையில் உருவாக்கப்பட்டதுதான். (ஒரே ஒரு ரகஸ்யம், தப்பித்தவறி முதலியார் அவர்களிடம் போய் சிலேடை, யமகம், திரிபுகளில் என்ன இருக்கிறது? எல்லாம் சர்க்கஸ் வித்தைதானே! உண்மையான கவிதை அங்கு உண்டா என்று கேட்டு வைக்காதீர்கள். உடனே அவர்களுக்கு, உங்கள் பேரில் பழியான கோபம் வந்துவிடும். முஷ்டி யுத்தத்திற்குக் கூட வந்துவிடுவார்கள். உங்கள் அபிப்பிராயத்தை உங்களுடனேயே வைத்துக் கொள்ளுங்கள்.)

## 4

முதலியார் அவர்கள் ஆங்கிலங்கற்ற தமிழர். திருநெல்வேலி இந்து கலாசாலையிலும், சென்னை கிறிஸ்தவக் கலாசாலையிலும் படித்தார்கள். டாக்டர் மில்லர் போன்ற பேராசிரியர்களிடம் தான் படிக்க நேர்ந்த பாக்கியத்தை இன்றும் நினைத்து, நினைத்து உருகுகிறார்கள். சென்னை விவசாயக் கலாசாலையிலும், பம்பாய் வெட்டினரி கலாசாலையிலும் படித்து உயர்ந்த பட்டங்களைப் பெற்றிருக்கிறார்கள். கால்நடை மருத்தவ இலாக்காவில் ஆரம்பத்தில் மாதம் ரூபாய் ஐம்பதே சம்பளமுள்ள ஸ்டாக் இன்ஸ்பெக்டர் வேலையில் தாக்கலாகி, பின்னால் உண்மையான உழைப்பினாலும், உயர்வான வேலைத் திறமையினாலும், ரூ. 300 சம்பளம் உள்ள டிப்டி சூப்பிரண்டு ஆகி, பிறகு (பென்ஷன்) பெற்றுக் கொண்டவர்கள். ஆனால், செல்வம், அதிகாரம் முதலியன சேர்ந்தவுடனே பிறமொழிகளை உயர்த்திப்பேசி, தமிழில் என்ன ஐயா இருக்கிறது? என்று தாய்மொழியைப் புறக்கணிக்கும் கூட்டத்தைச்

சேர்ந்தவர்கள் அல்ல. ஆங்கிலக் கல்வியறிவால் தமிழர்களுக்கு ஏதாவது உதவிசெய்ய முடியுமா? என்றுதான் பலகாலும் சிந்தித்தார்கள். அந்தச் சிந்தனையின் பலன்தான் மிலிட்டன் எழுதிய 'சுவர்க்க நீக்கத்தின் மொழிபெயர்ப்பு', 'கோம்பி விருத்தம்' முதலிய நூல்கள். மிலிட்டனது காவியம் ஒரு பெரிய கடினமான கருங்கற்பாறை என்று ஆங்கிலப் புலவர்களே சொல்லுவார்கள். ஒரு ஆசிரியர் பிரஞ்சு பாஷையில் அதை மொழிபெயர்க்க ஆரம்பித்து அப்படியே திணறிப்போய்விட்டாராம் முதலியார் அவர்களோ இந்தக் கருங்கற்பாறையையே உடைத்து, அதில் தமிழ்ப்பாட்டின் சுனையைக் கண்டுவிட்டார்கள். அந்தச் சுனை நீரை உண்டு, அதனுடைய புதிய ருசியைக் கண்டுதான் டாக்டர் ஜி.யு.போப் முதலிய அறிஞர்கள் திகைக்கிறார்கள்.

5

முதலியார் அவர்களின் தமிழ்க் கவிப் புலமையின் சிகரத்தைக் காண விரும்புபவர்களுக்குச் சுவர்க்க நீக்கமும், நெல்லைச் சிலேடை வெண்பாவும் உதவி செய்யாது. அவர்களுடைய கவி ஹிருதயம் முழுவதையும் தெரிந்துகொள்ள வேண்டுமானால் 'அகலிகை வெண்பாவைத்தான் பார்க்க வேண்டும். இந்திரனால் வஞ்சிக்கப்பட்டு கற்பழிக்கப்பட்ட காரிகை அகலிகை, கௌதமரால் கல்லாய்ப் போகுமாறு சபிக்கப்படுகிறாள். "ஐயோ இந்தச் சாபம் இடுவதில்தான் எவ்வளவு கருணை காட்டிவிட்டார் என் கணவர்" என்று கனிவுடன் சாபத்தை ஏற்றுக்கொள்ளும் அகலிகையை,

> **'எம்பெருமான் பேரருள் தான் என் என்பேன்! தாங்கவொணாத்**
> **துன்புறுவேன் யான் உணர்வு தன்னில் என்று—துன்புணராக்**
> **கல்லாக என்று கருணை வெள்ளத்து ஆழ்த்தினன் என்**
> **பொல்லாத குற்றம் பொறுத்து."**

என்ற முதலியார் அவர்கள் பாட்டில் நாம் நேருக்கு நேராகச் சந்திக்கிறோம். அவளிடம் கொஞ்சம் இரக்கமும் காண்பிக்கிறோம்.

முதலியாரவர்கள் உத்தியோக முறையில் பல ஊர்களில் முகாம் செய்ததும், அங்கு படுக்கும் வசதிக்காக 'கியாம்பு'க் கட்டில்கள் செய்ததெல்லாம் பெரிய கதை. ஒரு கட்டில் செய்வார்கள். அது கொஞ்சம் தொய்யும். உடனே அதை விறைப்பாகவே இருக்கும்படி செய்ய என்ன என்ன மாறுதல் செய்ய வேண்டும் என்றெல்லாம் யோசனை. இந்த யோசனையின் முடிவு, வேறு விதமாக வேறு கட்டிலைச் செய்வது. இப்படி ஒன்றைவிட ஒன்று நல்ல மாதிரியாக

அமையும்படி கட்டில்கள் கட்டுவது என்பதில் எல்லாம் இவர்களுக்கு ஒரு தனி உத்சாகம். இப்படிக் கட்டிய கட்டில்கள்தான் இவர்களிடம் நிற்குமா? அது ஏது? ஒரு ஊரிலே முகாம். கூடவே முகாம் செய்வார் ஒரு தாசில்தார். இவர்கள் கட்டிலில் ஒருநாள் இரவு படுத்துப் பார்ப்பார். விடிந்ததும், "சார் முதலியார்வாள்! ரொம்ப நன்றாகச் செய்திருக்கிறீர்களே! எந்த ஊர் வேலை!" என்று கேட்பார் தாசில்தார். அவ்வளவுதான். கட்டில் அவர் கியாம்புச் சாமான்களுடன் புறப்பட்டு விடும். இப்படியே எத்தனை எத்தனை கட்டில்கள் எத்தனை நண்பர்களுக்கு இனாம் கொடுத்திருக்கிறார்கள் என்றால் அதற்கு முதலியார் அவர்களிடம் இன்று கணக்கில்லை. ஆனால் எல்லாவற்றிற்கும் மேலாகத்தான் அகலிகைக்குக்கூட ஒரு கல்லாகிய கட்டிலை ஆக்கிக் கொடுத்து, அவளை அதில் அமைதியுடன் தூங்கும்படி செய்து இருக்கிறார்களே!

*6*

இவற்றையெல்லாம் விட அவர்கள் தமிழர்களுக்கும், அதிலும் என்போன்ற தமிழ் மாணவர்களுக்கும் செய்துள்ள ஒரு பெரிய உபகாரம் என்றும் மறக்க முடியாதது. தமிழர்கள் பொக்கிஷம், தமிழ் மொழியின் பெருமையை உலகறியச் செய்யும் ஒரு காவியம். உலக மகா இலக்கியத்தில் ஒன்றாக வைத்து, எண்ணப்பட வேண்டிய ஒரு நூல், கம்பராமாயணம். கம்பராமாயணம் என்றாலே தமிழ் மாணவர்களுக்கு ஒரு பெரிய பயம், "எத்தனை ஆயிரம் பாட்டு, ஐயா! பாட்டுக்களாவது படித்தால் லேசாக அர்த்தமாகக் கூடியதாகவா இருக்கிறது. இதைப் படிப்பது என்பதெல்லாம் நமக்குச் சாத்தியமா?" என்றெல்லாம் மலைத்தார்கள் தமிழ் மாணவர்கள். இவர்களுடைய மலைப்பை எல்லாம் போக்கி "நண்பர்களே! கம்பராமாயணத்தின் அளவைக் கண்டாவது அல்லது, புத்தகம் அச்சடித்திருக்கும் ரீதியைக் கண்டாவது நீங்கள் மிரண்டுபோக வேண்டாம். நான் பொறுக்கித் தரும் பாக்களை மட்டும் படியுங்கள். வேண்டுமானால் நான் சொல்லும் உரையையும் கேளுங்கள். கம்பனை அனுபவிக்க முடிகிறதா இல்லையா பாருங்கள்" என்ற அபயப்பிரதானம் கொடுத்தவர்கள் நமது முதலியாரவர்கள். அவர்களது கம்பராமாயண சாரம் அப்படியே பருகத்தக்கது. பருகிப் பருகிக் களிக்கத்தக்கது. இதுவரை ஐந்து காண்டங்களே அச்சாகியிருக்கிறது. ஆறாவது காண்டமாகிய யுத்த காண்டத்தின் சாரத்தை இந்த எண்பத்தி நான்காவது வயதிலே வடித்து எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நூல்தான் அவர்கள் புகழை இவ்வுலகமுள்ளளவும் நிலைநிறுத்தும் என்று நான் கருதுகிறேன்.

வடநாடிருந்து தென்னாடு வந்த குறுமுனிவன், என்று முளதென் தமிழை இயம்பி இசை கொண்டான். அந்த முனிவன் ஸ்தானத்தில் இன்று தமிழர்களிடையே இருப்பவர்கள் முதலியாரவர்கள்தான். இக்குறு முனியைக் காண விரும்புபவர்களுக்கு ஒரு வார்த்தை. தென்னிந்திய ரயில்வேயில், பாவூர் சத்திரம் ஸ்டேஷனுக்கு ஒரு டிக்கட்டு வாங்குங்கள். அந்த ஸ்டேஷனிலுள்ள வண்டிக்காரர்களிடம் வெள்ளக்கால் பட்டணத்து ஐயா வீட்டுக்குப் போக வேண்டும் என்று சொல்லுங்கள். அவ்வளவுதான் வண்டிக்காரர்கள் உங்களை அல்லாக்காய் தூக்கிக் கொண்டுபோய் முதலியாரவர்கள் முன்னிலையில் இருத்திவிடுவார்கள். பின்னால் நடக்கும் தமிழ் விருந்தில் (ஏன்! வயிற்று விருந்திலுந்தான்) என்னை நினைத்துக் கொள்ளுங்கள்.



அர்ச்சுனன்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# பொதிகை முனிவர் டி.கே.சி

அன்று பொதிகை மலையிலே அகத்திய முனிவர் வந்து தங்கியிருந்தார். அவரோ தென் சொற் கடந்தவர். வடசொற்களுக்கு எல்லை தோந்தவர். என்று முளதென் தமிழை இயம்பி இசைகொண்டவர். அவரது பர்ணசாலையிலிருந்த இருந்த இடத்திலே ஒரு சத்தியயுகமே நடந்தது. ஆம், அங்கு வரும் யானையும், அதன் மேல் பகைமை பூண்ட சிங்கமும் கூடிக்குலாவி விளையாடிக் கொண்டிருந்தன. மானும் ஒரு துறையிலே தண்ணீர் குடித்தது. கரடியும் எருமையும் சேர்ந்து உறவாடிக் களித்தது. இன்னும் பாம்பும் மயிலும் சேர்ந்து ஒன்றாய் விருந்தருந்தியது. ஒன்றுக்கொன்று வைரவரிகளாகப் பிற இடங்களிலே வாழ்ந்த ஜந்துக்கள் எல்லாம் அகத்தியர் முன்னிலையிலே இப்படி கூடிக் குலாவி மகிழ்ந்தது. இப்படியெல்லாம் நான் சொல்லவில்லை குமரகுருபரர் சுவாமிகளே சொல்கிறார். மதுரை மீனாட்சி அம்மைக் குறத்திலே, பொதிகை மலைக் குறத்தி தன் நாட்டு வளம் கூறும் முறையிலே தான் இப்படி சத்திய யுகம் ஒன்று நடந்தது அன்று, என்று பாடுகிறாள்.

**சிங்கமும் வெங்களிறுமுடன்**
**விளையாடும் ஒருபால்**
**இனப்புலியும் மடப்பிணையும்**
**திளைத்திடும் அங்கொருபால்**
**வெங்கரடி மரையினோடும்**
**விளையாடும் ஒருபால்**
**விடஅரவும் மடமயிலும்**
**விருந்தயரும் ஒருபால்**
**அங்கணமர் நிலங்கவிக்கும்**
**வெண்காகை நிழற்கீழ்**

**அம்பொன்முடி சூடும் எங்கள்**
**அபிடேக வல்லி**
**செங்கமலப் பதம்பரவும்**
**கும்பமுனி பயிலும்**
**தென் பொதிய மலையத்துற்று**
**மற்று எங்கள்மலை அம்மே!**

என்பது பாடல். இப்படி ஒரு சத்திய யுகம் நடந்ததை நேரில் காணவில்லை. தன் கற்பனைக் கண்களால் கண்ட காட்சியைச் சொல்கிறார் நல்லதொரு பாட்டில். ஆதலால் இப்படி ஒரு சத்திய யுகம் நடந்ததோ என்னவோ என்று தான் சங்கை எழும். ஆனால் சமீப காலத்திலே நம் கண்முன்னே அப்படி ஒரு சத்திய யுகம் நடந்தது. அந்த பொதிகை மலைச் சாரலிலே, குற்றாலத்திலேதான். ஆம், ரசிகமணி டிகேசி என்றும் பொதிகை முனிவர் முன்னால் நடந்து ஒரு சத்திய யுகம். இதை நானும் தமிழ் அன்பர் பலரும் நேரிலேயே கண்டோம், அறிந்தோம்.

டிகேசி குற்றாலத்தில் பர்ணசாலை கட்டியிருக்கவில்லை, யோக தண்டமும், கமண்டலமும் தாங்கி நடக்கவில்லை சடைமுடி, புலித்தோல் ஆடை உடுக்கவில்லை. என்றாலும் பொதிகை முனிவராக வாழ்ந்தார். அவரிடம் பலதரப்பட்டவர்கள் வந்தார்கள். ஆம், ராஜரிஷியான ராஜாஜி வந்தார். அவர் காரியங்கள் அத்தனையையும் வெறுக்கும் ஈரோட்டுப் பெரியார் வந்தார். ஆங்கில சர்க்காரின் அடிவருடிகள் வந்தார்கள், அந்தச் சர்க்காரைக் கவிழ்க்க விரும்பிய அரசியல் வாதிகள் வந்தார்கள். அஃகு சட்டம் என்னும் ஐசிஎஸ் வர்க்கத்தினர் வந்தனர். அவர்களைக் கண்டு அஞ்சி குலை நடுங்கும் அஸ்திவார உத்தியோகஸ்தர்கள் வந்தனர். ஏன், நிரம்ப சொல்லப்போனால் சிஐடி என்னும் ரகசிய போலீசார் வந்தனர். அவர்கள் கண்ணுக்கு அகப்படாமல் திரைமறைவாய்த் திரியும் குற்றவாளிகள் வந்தனர். வைதீகப் பிராமணர்கள் வந்தனர், அவர்களை ஒழித்துக்கட்ட வேண்டும் என்று கூறும் ஜஸ்டிஸ் கட்சியினர் வந்தனர். முஸ்லீம் அன்பர்கள் வந்தனர். ஹரிஜன சகோதரர் வந்தனர், சைவர்கள் வந்தனர், வைணவர்கள் வந்தனர், சமணர்கள் வந்தனர், பௌத்தர்கள் வந்தனர், ஆண்கள் வந்தனர், பெண்கள் வந்தனர். குடுகுடு கிழவர்கள் வந்தனர், பச்சிளங் குழந்தைகள் வந்தனர். எல்லோரும் டிகேசி உடனிருந்து அவர் சொல்லும் பாடல்களைக் கேட்டனர். அவற்றைக் கேட்பதில் மெய்மறந்தனர். அவர் சொன்ன கவிகளை மாந்தினர். உணவை உண்டனர். கோலகலமான வாழ்வையே அனுபவித்தனர். இப்படி ஒரு யுகத்தை நடத்தியவர் அவர் என்னும்

போது, அவரைப் பொதிகை முனிவர் என்றோ அப்பொதிகை முனிவர் சந்நிதியில் ஒரு சத்தியயுகம் நடந்தது என்றோ கூறினால் அதை மறுக்க முடியுமா என்ன?

ரஸிகமணி டிகேசி உலகை நீத்து, ஒன்பது வருஷங்கள் ஆகிவிட்டன. அவரது நினைவு விழாவை அவரது ஜனனதினமாகிய கோகுலாஷ்டமி அன்று (11-9-63) திருக்குற்றாலத்திலே கொண்டாடுகின்றனர். அப்படி அவர் நினைவைக் கொண்டாடும் அளவுக்கு அவர் செய்த சேவைதான் என்ன? ஐம்பது வருஷங்களுக்குமுன்னே ஆங்கிலம் கற்ற தமிழர், தமிழில் என்ன இருக்கிறது என்று கேட்டார்கள். கூட்டங்களில் தமிழில் பேசுவது கௌரவக் குறைவு என்று நினைத்தார்கள், ஆங்கிலத்தில் உள்ள அறிவியல் நூல்களைப் போல் தமிழில் இல்லை என்று சொன்னார்கள். இப்படியெல்லாம் அவர்கள் சொன்னதைத்தான் கவிஞர் பாரதி,

> **புத்தம் புதிய கலைகள் பஞ்ச**
> **பூதச் செயல்களில் நுட்பங்கள்கூறும்**
> **மெத்த வளருது மேற்கே அம்**
> **மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை**
> **சொல்லவும் கூடுவதில்லை அவை**
> **சொல்லும் திறமை தமிழ் மொழிக்கில்லை**
> **மெல்லத் தமிழினிச் சாகும்**
> **மேற்கு மொழிகள் புவிமிசை ஓங்கும்**

என்று ஒரு பேதை உரைத்தான் என்று வெகு ஆவேசத்தோடு பாடி இருக்கிறார். அந்த நிலைமை மாறி ஆங்கிலம் கற்ற தமிழர்களை எல்லாம் தமிழிலே மோகங்கொள்ளச் செய்தவர் டிகேசி. அறிவியல் சரித்திரங்கள் மாத்திரம் அல்ல அழகுக் கலைகளைப் பற்றியெல்லாம் தமிழில் சொல்லுதல் கூடும் என்று நிரூபித்தவர் டிகேசி. எல்லாம் தமிழில் முடியும் என்று கட்டியங்கூறி இளைஞர் பலரைமுன் நடத்தியவர் டிகேசி. இந்தப் பணி ஒன்றுக்கே அவரை வாழ்த்தலாம், வணங்கலாம், போற்றலாம்.

டிகேசி மிக துணிச்சல் உடையவர். கிட்டத்தட்ட முப்பது வருஷங்களுக்கும் மேலாக இருந்து கம்பன் காவியமான ராமாயணத்தைப் படித்தார். அதில் கம்பன் பாடாத பாடல்கள் பல இடைச்செருகலாக இருக்கின்றன என்று கண்டார். மேலும் பல பாடல்கள் பிழைபட அச்சடிக்கப்பட்டிருக்கிறது என்றும் கண்டார். மிக துணிச்சலாக ஆம், எத்தனையோ பண்டிதர்களுடைய எதிர்ப்புகளுக்கிடையே, இடைச்செருகல்களை எல்லாம் நீக்கினார்,

கம்பன், அவன் பாடிய கவிகளுக்குக் கொடுத்த உருவம் எப்படி இருக்க வேண்டும் என்று படித்து அதன்படியே திருத்தியமைத்தார். அப்படியே கம்பர் தரும் ராமாயணம் என்று ஒரு புதிய பதிப்பையே வெளியிட்டார். கம்பராமாயணம் என்றாலே பயந்து ஓடிய அன்பர் பலரும் கம்பன் பாடல் மீது மோகம் கொண்டு கம்பன் காவியத்தைப் படிக்க ஆரம்பித்தனர், கம்பராமாயணப் பிரசங்கம் ஊருக்கு ஊர் நடக்க ஆரம்பித்தன. கம்பனுக்குத் திருநாள், கவிஞனுக்கு பல்லாண்டு அவன் பிறந்த தேரழுந்தூரிலும், அவர் அமரரான நாட்டரசன் கோட்டையிலும், இன்னும் சென்னையிலும் கோவையிலும் கோலகலமாகக் கொண்டாடப்பட்டன. அத்தகைய ஒரு அரிய பணியைச் செய்தவர் ஆவர்.

இன்னும் ஒன்று. அன்று தமிழ்நாட்டு இசை. தமிழில் பாடுவது அனுசிதம். சுந்தரத் தெலுங்கினில் பாடுவதே சீரும் சிறப்பும் உடையது என்று கருதப்பட்டது. உள்ளம் உருகிப் பாவம் கலந்த இசையை எல்லாம் மறந்து, வெறும் நாத சுகத்திலேயே பாகவதர்கள் எல்லாம் மெய்மறந்தனர். பாடுகிற பாட்டுகளில் பாடுகிறவர்களுக்கும் பொருள் தெரியாது, கேட்கிறவர்களுக்கோ பொருள் தெரியவே தெரியாது. இதைக் கேட்ட ஒரு சிலர் நெஞ்சம் குமுறினார்கள். இதயத்தைத் தொடுவது, பாவம் கலந்த இசையே. தமிழர்களும் அந்தப் பயனை அடையவேண்டும் என்று பத்திரிகைகளில் எழுதினார்கள் மேடைகளில் பேசினார்கள். இப்படிப் பேசியவர்களில் முதன்மையனவர்தான் டிகேசி. அவருடைய பேச்சைக் கேட்டபின் தான் செட்டிநாட்டு அரசர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் தமிழிசை இயக்கத்தையே ஆரம்பித்தார். அந்த இயக்கம் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் கேட்கும்படி செய்திருக்கிறது. தமிழிசைக்குத் தலையாய தொண்டு புரிந்தவர் டிகேசி. பண்ணும் பரதமும் அவைகளில் பங்குபெறச் செய்தவரும் அவரே. தமிழ்நாட்டின் கலை வளர்ச்சிக்கு அவர் தந்த ஆதரவே இன்று பல காரியங்கள் வளர்வதற்கு உறுதுணையாக இருந்து வருகிறது.

எல்லாவற்றுக்கும் மேலாக அவர் செய்த சேவை, அன்பர் பலரைத் தமிழ்க் கவிதையை அனுபவிக்கும்படியும் அப்படி அனுபவித்து ஓர் ஆனந்த பரவச நிலையையே அடையும்படி செய்ததுதான். மேலைநாட்டில் ஒரு பெரிய கூட்டத்தைக் கலைக்க போலீசார் வேண்டியதில்லையாம், கண்ணீர்ப் புகை வேண்டிய தில்லையாம். சரி, நான் இப்போது ஒரு கவிதை சொல்லப் போகிறேன் என்று சொன்னால் கூட்டம் கலைந்து விடுமாம். அதேநிலையில்

இருந்த தமிழகத்தை, அதில் வாழ்ந்த தமிழர்களை எல்லாம் நல்ல கவிதைகளை அனுபவிக்கவும், அக்கவிதைகளைக் கேட்டு அதில் லயித்து ஆனந்தம் அடையவும் செய்தவர் டிகேசி. அவர் விளக்குகிறது போல தமிழ்ப் பாட்டையோ, ஆங்கிலக் கவிதையையோ வேறு யாரும் விளக்கி நான் கேட்டதில்லை. அவர் பாட்டிற்கு புது உரையோ பொழிப்புரையோ கருத்துரையோ கூறமாட்டார். பாட்டைப் பாடுவதற்கு முன் ஒரு விரிவான முன்னுரை சொல்வார். பாட்டின் பொருளையும் கூறுவார். அதன்பின் அவருக்கே உரிய பாணியில் பாட்டைப் பாடுவார். அடிஅடியாக நிறுத்தி நிறுத்திப் பாடுவார். மடக்கி மடக்கிப் பாடுவார். அவர் பாட்டைப் பாடி முடித்துப் பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்த அன்பர் எல்லோருக்குமே பாட்டு மனப்பாடம் ஆகிவிடும். அவருடைய சொற்பொழிவுகளில் ஆவேசம் இருக்காது. அடுக்குச் சொல் ஆரவாரம் இருக்காது. ஆனால் அமைதி இருக்கும், அனுதாபம், அழகு இருக்கும். ஆழமாக கேட்போர் உள்ளத்தில் பதியவும் செய்யும். கம்பனைப் பற்றித் தமிழ்க் கவிதையைப் பற்றி பேசும்போது அவருடைய நா பேசாது. வாய் பேசும். அவருடைய அடர்ந்த நெற்றிப் புருவம் பேசும், செழித்து வளர்ந்துள்ள மீசை பேசும். எல்லாவற்றுக்கும் மேலாக அவருடைய இதயமே நம்முடைய இதயத்தோடு பேசும் என்று சொன்னால், அவர் பேச்சைக் கேட்ட ஒருவரும் மறுக்க முடியாது.

டிகேசியின் தமிழ்ப் பற்று, கம்பன் பற்று, இவைகளை தமிழ் அன்பர் சிலர் தான் அனுபவித்திருப்பார்கள். ஆனால் அவர் வீட்டு விருந்தோம்பலை அனுபவித்திருப்பவர்கள் எண்ணிறந்தவர்கள். விருந்தோம்பலில் சிறந்த இலக்கியமாக வாழ்ந்தவர் அவர். குற்றாலத்தில் அவரது வீடு அடையாத வாயில் அகமாகவே விளங்கியது. அவர் வரும் விருந்தினர்களுக்கு விருந்தளித்து கம்பனை உணர்த்துகிறார் என்றால் அது எல்லாம் அவ்வளவு எளிதாகச் சொல்லக்கூடிய நிலைதான். உணவையும் கவிதையையும் சேர்த்தே ஊட்டிவிடுவார். அவருடைய விருந்தோம்பலை பல தடவை அனுபவித்த கவிமணி தேவியவர்கள்,

**அன்னைபோல் என்னை**
**அருவியில் நீராட்டி**
**இன்னமுதும் பக்கத்து**
**இருந்தூட்டி என்னோடு**
**தங்கு தங்கு என்று சொன்ன**
**தங்கக் குணத்தானை**
**எங்கு நான் காண்பேன்இனி**

என்று பாடி ஏங்கியதை தமிழ்நாடு நன்கறியும். இன்னும் அவரது வீட்டுத் தோசை இலக்கிய அந்தஸ்தையே பெற்ற ஒன்று. அத்தோசையை உருவாக்குவதில் பெரும் பணி டிகேசியின் துணைவியார் அண்ணியைச் சார்ந்ததே.

**அண்ணி சுட்ட தோசையை**
**ஆசையோடு தின்றவர்**
**எண்ணிலாதார் அல்லவோ**
**அதில் யானும் ஒருவன் அல்லனோ**

என்று இளங்கவிஞர் ஒருவர் பாடினால் ஆம், ஆம், நானும் அக்கூட்டத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவனே, என்று இன்றும் கும்மாளம் போடுவார் பலர் உண்டுதான்.

அந்த அமரர் ரசிகமணிதான் பொதிகை முனிவர் அகத்தியரைப் போல் நம் கண்முன் வாழ்ந்தவர். என்றும் வாழ்பவர்.

**கன்னித் தமிழே போல்**
**கம்பன் கவியே போல்**
**மன்னும் பொதியை**
**மலையே போல் – பண்ணுநம்**
**நாடுமகிழச்**
**சிதம்பரநாத நண்பா**
**நீடுழி வாழ்க நீ**

என்று கவிமணியுடன் சேர்ந்து வாழ்த்தி வணங்கி அவர் நினைவு நாளை தமிழகம் கொண்டாடினால் அது போதும்.



தொண்டைமான் மணிவிழா மலரை எஸ். மகராஜன் வெளியிடுகிறார்.

# இலக்கிய நினைவுகள் - கவிமணி

இருபது வருஷம் இருக்கும். அப்போது என் வீட்டிற்குப் பக்கத்தில் உள்ள பள்ளியில் ஒரு கதம்ப நிகழ்ச்சி நடக்க இருந்தது. அந்த கதம்ப நிகழ்ச்சியில் ஒரு காட்சி. பாரதமாதாவின் திருவோலக்கம். இந்திய நாட்டின் படம் பகைப்புலனாக அமைய, சூலம் ஏந்திய கையளாய் பாரதமாதா உயர்ந்த பீடத்தில் நிற்கவும், அவளைச் சுற்றி அவள் தன் பிள்ளைகள் பஞ்சாபி, மராத்தி, வங்காளி, தமிழ்க்கன்னி முதலியவர்கள் நின்று பாடவும், ஆடவும் ஏற்பாடு. பாடுவதற்கு என்று பள்ளித் தலைமை ஆசிரியை தேடி எடுத்த பாட்டு,

**பாருக்குள்ளே நல்ல நாடு – எங்கள்**
**பாரத நாடு**

என்று தொடங்கும் பாரதியார் பாட்டுத்தான். பாட்டிலே வருகின்ற சரணங்கள் எல்லாம், பாரத நாட்டின் பெருமையைப் பொதுவாகக் கூறுகின்றதாகத்தான் அமைந்திருந்தது. ஆசிரியைக்கு ஒரு ஆசை. இந்த சரணங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிரதேசத்தின் பெருமையைக் குறிப்பதாக இருக்கலாமே. அதை அந்த அந்த பிரதேசத்துப் பெண் பாடலாமே, பின்னர் எல்லோரும் ஒன்றாய்ச் சேர்ந்து பாருக்குள்ளே நல்ல நாடு எங்கள் பாரத நாடு என்று பாடலாமே, அப்படிப் பாடலும் ஆடலுமாக ஒரு காட்சி நடத்தினால், அந்தப் பாரதமாதாவின் திருவோலக்கம், அத்தாணி, இருப்பு நன்றாக இருக்குமே என்று என்னைக் கண்டு தன் விருப்பத்தைச் சொன்னாள் ஆசிரியை. சரி, பாரதி பாட்டில் உள்ள சரணங்களை மட்டும் வேண்டுமானால் மாற்றி எழுதிவிட்டால் போகிறது என்று சொல்லிவிட்டேன். அப்படியே, நான்கைந்து சரணங்களை எழுதிக் கொடுத்தேன். வித் அபாலிஜிஸ் டு பாரதி என்று மிக்க பணிவான வணக்கத்தோடு பாட்டை எழுதினேன். பாட்டு இதுதான்.

**பாருக்குள்ள நல்ல நாடு – எங்கள்**
**பாரத நாடு**
**வீரத்திலே சிந்து தீரத்திலே – போரில்**
**விறிட்டு எழுந்திடும் நாட்டினர் யாம்**
**பாரதத்திலே புகழ் ஏறிச் சிறந்திடும்**
**பாஞ்சால நாட்டினுக் கீடுமுண்டோ**

*இப்படிப் பாடுவாள் பஞ்சாபி.*

**மேலை நிலத்தினர் மெச்சிப் புகழ்ந்திடும்**
**மேன்மை படைத்த துறைமுகமும்**
**மாலை பரிதிக் குழம்பில் குளித்திடும்**
**மாமலை மராட்டம் என் நாடாம்.**

*இது மராத்திய பெண்ணின் பாட்டு*
*இனி வருகிறது வங்காளியின் எக்காளம்*

**பொங்கு திரைகளும் நொங்கு நுரைகளும்**
**பூக்கள் இனங்களும் தாங்கி வரும்**
**கங்கை மகள் நடம் ஆடிவரும் எந்தன்**
**வங்கத்துத் தாய்க்கொரு ஈடுமுண்டோ**

*கடைசியாக வருகிறாள் தமிழ்மகள்*

**கன்னித் தமிழ் இன்பப் பாய்ச்சலோடு**
**வையை காவிரி எல்லாம் புரண்டு வரும்**
**எண்ணத் தித்திக்கும் தமிழ் நாடே புகழ்**
**ஏறிச் சிறந்திடும் எந் நாடாம்**

*பின்னர் எல்லோருமாகச் சேர்ந்து பாடி ஆடி மகிழ்கிறார்கள்*

**இந்து முசல்மான் கிறிஸ்தவரும் இன்னும்**
**எண்ணற்ற சாதி இருந்தாலும்**
**சொந்தச் சகோதரர் போலவே நாற்பது**
**கோடி ஜனங்களும் கூடிடுவோம்.**

பள்ளிப் பிள்ளைகளும் பாட்டைப் பாடி நாட்டியம் ஆடி, கதம்ப நிகழ்ச்சியை வெற்றிகரமாக நடத்திவிட்டார்கள். இந்த நிகழ்ச்சி நிகழ்ந்த ஒரு மாதத்திற்குள் நண்பர் சிலருடன் திருவனந்தபுரம் செல்லப் புறப்பட்டேன். திருநெல்வேலியிலிருந்து காரிலேயே புறப்பட்ட நாங்கள் நாகர்கோயில் வழியாகச் சென்றோம். அது வரை நான் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் பாடல்களைப் பத்திரிக்கையில் பார்த்துப் படித்த அனுபவித்திருந்தேனே ஒழிய கவிமணியவர்களை நேரில் காணும் வாய்ப்புப் பெறவில்லை.

ஆதலால் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நாகர்கோயிலில் தங்கிய ஒரு சில மணிநேரத்தில், பக்கத்தில் உள்ள புத்தேரிக்கு நண்பர்களுடன் சென்று, கவிமணியவர்களைக் கண்டு வணங்கினேன். நிரம்பவும் அருமையோடு வரவேற்றார்கள், அளவளாவினார்கள். ரசிகமணி டிகேசிக்கு மிகவும் வேண்டியவன் நான், என்று தெரிந்ததும் இன்னும் மிகவும் அன்போடு ஆரத்தழுவினார்கள். அமுதின் சுவையை ஒத்த அரிசிப்புட்டு, பழம், காப்பி எல்லாம் கொடுத்து உபசரித்தார்கள். பத்திரிகைகளில் வெளியான அவர்கள் பாடல்கள் எல்லாம் என் கத்தரிக்கோலுக்குத் தப்பவில்லை என்றும், அந்தப் பாடல்களை எல்லாம் வெட்டிச் சேர்த்து ஒரு நோட்டுப் புத்தகத்தில் ஒட்டி வைத்திருக்கிறேன் என்று தெரிந்ததும் "இப்படி நீ மலர் மலராகச் சேர்த்து வைத்திருப்பதைத் தானே புதுமைப் பதிப்பகத்தார் மாலையாகத் தொடுத்திருக்கிறார்கள்" என்று நகைச்சுவையோடு மலரும் மாலையும் வெளிவந்ததைக் குறிப்பிட்டார்கள்.

இப்படிப் பேச்சு வளர்ந்து கொண்டே இருந்தது. அப்போது உடன் வந்திருந்த நண்பர் ஒருவர், நானும் பாட்டு எழுதுவேன் என்று சொல்லி, பாரதி பாட்டை மாற்றி எழுதியதையும் குறிப்பிட்டு, இந்தப் பாட்டினால் பாரதமாதா திருவேலாக்கக் காட்சி மிகவும் அனுபவிக்கத் தக்கதாக இருந்தது என்றும் சொல்லிவிட்டார். "சரி தம்பி, அந்தப் பாட்டைச் சொல்லேன்" என்றார்கள். எனக்கோ ஒரே பயம். ஏதோ அந்தரங்கத்தில் நடந்தது அம்பலம் ஆகிவிட்டதே என்று. அதிலும் இன்றைய தமிழ்நாட்டின் தலைசிறந்த கவிஞர் முன்பு என்பாட்டை அரங்கேற்றுவது என்பது கொஞ்சம் சிரமமாகவே இருந்தது. ஆதலால் புது மணப்பெண்ணின் நாணத்தோடே பாட்டைப் படித்துச் சொன்னேன். கேட்டுக் கொண்டே வந்தார்கள்.

**கன்னித் தமிழ் இன்பப் பாய்ச்சலோடு**
**வையை காவிரி எல்லாம் புரண்டு வரும்**
**எண்ணத்திதிக்கும் தமிழ் நாடே புகழ்**
**ஏறிச் சிறந்திடும் எந்நாடாம்.**

என்ற பகுதியைச் சொன்ன உடனே, "பேஷ் தம்பி பேஷ் ரொம்ப நன்றாயிருக்கிறது பாட்டு" என்று பாராட்டிவிட்டு மேலும் சொன்னார்கள். 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே என்றுதான் பாரதி பாடினார், நீயோ, அவருக்கும் மேலே ஒரு படி சென்று எண்ணத்திதிக்கும் தமிழ் நாடு என்றே பாடிவிட்டாய். ரொம்ப ரொம்ப அழகாயிருக்கிறது பாட்டு"

என்றார்கள். இத்தகைய பாராட்டுப் பெற்ற பின்தான் எனக்கும் பாடல்கள் எழுதலாம் என்று துணிவு பிறந்தது. கவிமணி மெச்சிய கவிஞனாக அல்லவா ஆகிவிட்டேன் நான் அன்று.

இப்படித்தான் நேரில் கவிமணியுடன் அறிமுகம் ஆனேன் நான் இருபது வருடங்களுக்கு முன்பு. இந்த இருபது வருஷ காலத்தில் அவர்களை இருபது முறையாவது நேரில் சந்தித்திருப்பேன், கண்டு அளவளாவி இருப்பேன். அவர்கள் பாடல்களைக் கேட்டு பரவசம் அடைந்திருப்பேன். அவர்களுடன் பேசும் போதெல்லாம், அவர்களுடைய எளிய வாழ்க்கையும், அவர்கள் தூய உள்ளத்தையும் எல்லாவற்றிற்கும் மேலாகச் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் கவிதா சன்னதத்தையும் கண்டு கண்டு மகிழ்ந்திருக்கிறேன்.

**நாடிப்புலங்கள் உழுவார் கரமும் நயஉரைகள்**
**தேடிக் கொழிக்கும் கவி வாணர் நாவும், செழுங்கருணை**
**ஓடிப்பெருகும் அறிவாளர் நெஞ்சும், உவந்து நடம்**
**ஆடிக் களிக்கும் மயிலே, உன்பாதம் அடைக்கலமே.**

என்று அற்புத வணக்கம் செய்கிறார்கள் கலைமகளுக்கு தன் கவிதை மூலமாக. நய உரைகள் தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவையும் நான் அறிந்து அறிந்து மகிழ்ந்தது அவர்களிடம்தான். தான் எழுதிய பாட்டின் இலக்கணத்திற்கு இலக்கியமாகவே அமைந்திருந்தார்கள் கவிமணியவர்கள்.

ஒரு தடவை நானும் நண்பர் முத்துசிவனும் கவிமணியவர்களைக் காணச் சென்றோம். அப்போது தான் நண்பர் முத்துசிவன் அசோகவனம் என்ற புத்தகத்தை எழுதி வெளியிட்டிருந்தார். அதில் கவிதையைப் பற்றி வருகிற கட்டுரையில் வெய்யிற்கேற்ற நிழலுண்டு, என்ற கவிமணியின் பாடலைப் பாராட்டி பல சொல்லியிருந்தார். ஆனால் ஒரு விமர்சகர் அந்தப் புத்தகத்தை விமர்சனம் செய்யும் போது, இந்த வெய்யிற்கேற்ற நிழலுண்டு என்ற பாட்டு, வெறும் மொழிபெயர்ப்புத் தானே, பெரிய கவிதை ஒன்றும் இல்லையே என்று எகத்தாளமாக நையாண்டி பண்ணியிருந்தார். இதைப் படித்திருக்கிறார்கள் கவிமணி. "என்னைத்தான் விமர்சகருக்குப் பிடிக்கவில்லை. இந்தப் பிள்ளையாரைப் பிடித்த சனியன் அரசமரத்தையும் சேர்த்தல்லவா பிடித்திருக்கிறது. என் கவிதையை இவர் பாராட்ட, இவரே அல்லவா தாக்குதலுக்கு உட்பட்டுவிட்டார்" என்று நகைச்சுவையோடு அந்த விமர்சனத்தைப் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, பிற பாஷைகளில் உள்ள நல்ல

விஷயங்களை எல்லாம் தமிழில் மொழிபெயர்க்க வேண்டிய அவசியத்தையும் பற்றிக் குறிப்பிட்டார். ஆங்கிலக் கவிஞன் ஆர்னால்ட் பென்னட் எழுதிய ஆசிய ஜோதி, பாரசிக கவிஞன் ஓமர்க்கய்யாம் எழுதிய ரூபயாத், முதலியவைகளை எல்லாம் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்ததைப் பற்றி எல்லாம் பேசினோம். பிற நாட்டுக் கவிஞர் கருத்துக்களை தமிழ் மொழியில் பெயர்த்து எழுதும்போது, அப்படியே சொல்லுக்குச் சொல், வார்த்தைக்கு வார்த்தை மொழியெர்க்கக் கூடாது, அந்த அந்த மொழியில் உள்ள பாட்டை பலமுறை படித்து அனுபவிக்க வேண்டும். அனுபவித்து அனுபவித்து ஒரு ஆனந்த வெறியையே அடைய வேண்டும், அந்த வெறியில், மூல பாடத்தையே மறந்து விட்டு, தமிழ்ப் பண்பு, தமிழ் மரபுகளுக்கு எல்லாம் மாறுபடாவகையில் மொழிபெயர்ப்புப் பாடல் அமைய வேணும். அப்படிச் செய்யாமல் சொல்லுக்குச் சொல் தேடி, வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்த்து கவிதைக் கன்னி உருவானால் 'பாப்' பண்ணிய தலையும், சாயம் பூசிய உதடும், உடைய ஆங்கிலப் பெண்ணுக்கு கொரநாட்டுப் புடவையை கொசுவம் வைத்துக் கட்டி விட்ட கதையாகத்தான் இருக்கும்.

இதற்கு உதாரணமே பார்த்துவிடலாமே

Have with a loaf of bread beneath the Bough

A flask of wine, a book of Verse and thou

Beside me singing in Wilderness

And wilderness is Paradise now

என்பது உமர்கய்யாம் பாடிய பாட்டு. அதற்கு

**பூங்கொடிகள் கவின் நிழற் கீழ்**<br>
**புகழ்க் கவிதை நூலொன்றும்**<br>
**தேங்கமழும் மதுச் சாடி**<br>
**சிறு ரொட்டியுடன் நீயும்**<br>
**கோங்கலரும் கடுவனத்தே**<br>
**குயிலிசையில் பாட்டிசைத்து**<br>
**பாங்கிலெனைக் கூடுவையேல்**<br>
**அது அன்றோ பரம பதம்**

என்பது, நண்பர் ஒருவர் எழுதிய நேரான மொழிபெயர்ப்பு.

**வெய்யிற் கேற்ற நிழல் உண்டு**
**வீசும் தென்றல் காற்று உண்டு**
**கையில் கம்பன் கவி உண்டு**
**கலசம் நிறைய அமுதுண்டு**
**தெய்வ கீதம் பல உண்டு**
**தெரிந்து பாட நீயும் உண்டு**
**வையம் தனில் இவ்வனம் அன்றி**
**வாழும் சொர்க்கம் வேறு எதோ**

என்பது கவிமணியின் பாட்டு. அப்போது எளிதாகத் தெரிந்து விடுமே. எது மூலம், எது மொழிபெயர்ப்பு. எது வைரம் எது போலிக்கல் என்று. ஆங்கிலப் பாடல் ஆனாலும் சரி, பாரசீகப் பாடல் ஆனாலும் சரி, அந்தப் பாடல்களில் உள்ள கருத்து இருக்கும் மொழிபெயர்ப்பில். ஆனால் அந்த நாட்டு மண்வாடையே இருக்காது. ஆம். பிற நாட்டு நல்லறிஞர் கருத்துக்களையெல்லாம் கவிமணியவர்கள் தமிழ்ப் படுத்தியிருக்கிறார்கள், தமிழையும் தமிழரையும் படுத்தாமலேயே.

1944 ஆம் வருஷம் திருநெல்வேலியில் ஒரு தமிழ் விழா கொண்டாடினோம். விழாவின் முதல் நாள் தலைவர் கவிமணியவர்கள். இரண்டாம் நாள் தலைவர் ரசிகமணி டிகேசி அவர்கள். இருவருக்கும் வரவேற்பு கூறும் பணி எனக்குக் கிடைத்தது. என்னால் சொல்லக் கூடியதை எல்லாம் சொல்லிப் பாராட்டிப் பேசினேன். வான் புகழ்க்கு எல்லை வாழ்த்துவோர் நாவெல்லை என்று கவிஞன் பாடியது போலவே இருந்தது என் நிலை. இதைக் கேட்ட பின், டிகேசி பேசினார்கள். "ஒரு கல்யாணத்திற்கு மாப்பிள்ளை போகிறது என்றால், மாப்பிள்ளையுடன் மாப்பிள்ளைத் தோழனும் போவான். மாப்பிள்ளை அப்பாவியாக இருந்தாலும், தோழன் பட்டவாளியாயிருப்பான். பெண் விட்டார் செய்யும் உபசரணைகளில் எல்லாம் குற்றம் குறை கூறிக்கொண்டே இருப்பான். ஆதலால் பெண் வீட்டார் மாப்பிள்ளையை விட மாப்பிள்ளைத் தோழனையே கரிசனமாகக் கவனித்துக் கொள்வார்கள். மாப்பிள்ளைக்கு சரிகை வேஷ்டி, சில்க் ஷர்ட், கல் வைத்த மோதிரம் என்றால், அத்தனையும் தோழனுக்கும் கொடுப்பார்கள். அவன் கலகம் செய்துவிடக் கூடாதே என்று. அதுபோல் இந்த விழா நடத்துபவர்கள் விழாவிற்கு மாப்பிள்ளையாக வந்திருக்கும் கவிமணியவர்களைப் பாராட்டு கிறார்கள். மாப்பிள்ளைத் தோழனாக என்னையுமே பாராட்டுகிறார்கள். நான் என்ன பட்டவாளிப் பயலா" என்று சொன்னார்கள்.

கவிமணியும் சளைக்கவில்லை, "தமிழ்விழா அன்பர்களுடன் சேர்ந்து கொண்டு ரசிகமணியவர்களும் என்னை என்ன எல்லாமோ சொல்லிப் பாராட்டுகிறார்கள். எனக்கு நிரம்ப நாளாக இருந்த சந்தேகம் இன்று தீர்ந்துவிட்டது. நமது கோயில்களில் இருக்கிற மூர்த்திகளை எல்லாம் ஏன் கல்லிலும் செம்பிலும் செய்து வைத்திருக்கிறார்கள் என்று. இன்று தெரிந்தது எனக்கு. இப்படிப் பக்தர்கள் பாலையும், தேனையும், பஞ்சாமிர்தத்தையும் குடம் குடமாகக் கொட்டினால் எப்படி அந்தத் தெய்வங்கள் எலும்பும் தோலும், சதையும் இரத்தமும் உடையவர்களாக இருந்தால் தாங்க முடியும் என்று. முடியாதையா முடியாது, என்றுதான் கல்லாகவே சமைத்துவிட்டார்கள் அவர்கள். எலும்பும் தோலுமாக இருக்கின்ற என் பேரிலே இத்தனை அன்பையும் பாராட்டையும் கொட்டுகிறீர்களே அது சரிதானா" என்றார்கள். ஆனால் என்னுடைய ஆதங்கம் எல்லாம், தமிழ் மக்கள் எல்லாம் முன்னால் கட்டியங்கூற, தமிழ்க் கவிஞர்கள் எல்லாம் பின்னால் பல்லாண்டு பாட, அலங்கரிக்கப்பட்ட யானை மீது அம்பாரி வைத்து அதில் கவிமணியவர்களை ஏற்றி பவனிவிடவில்லையே, அதற்கு அவர்கள் உடல் நிலை இடம் கொடுக்கவில்லையே என்பதுதான்.

கவிமணியவர்கள் சென்ற செப்டம்பரில் அமரர் ஆகிவிட்டார்கள். அவர்கள் அமரர் ஆவதற்கு ஒரு மாத காலத்திற்கு முன்பு அவர்களைக் கடைசி முறையாகச் சென்று காணும் வாய்ப்புக் கிடைத்தது எனக்கு. அவசர வேலையாக தஞ்சையிலிருந்து திருநெல்வேலிக்குச் சென்றிருந்த நான், கவிமணியவர்கள் உடல்நிலை கவலைக்கிடமாக இருக்கிறது என்று தெரிந்து, மனைவி மக்களுடன் விரைந்து சென்று புத்தேரியில் அவர்களைக் கண்டேன். படுத்த படுக்கையில் இருந்தார்கள், என்றாலும் என்னைக் கண்டதும் கட்டித் தழுவினார்கள் கண்ணீர் விட்டார்கள். என்னாலுமே தாங்க முடியவில்லை. ஆனால் கொஞ்சநேரத்தில தெளிவு பெற்றுவிட்டார்கள். எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள். இல்லை விவாதிக்கவே ஆரம்பித்துவிட்டார்கள். தமிழ் இசையைப் பற்றிப் பேசும்போது சொன்னார்கள். ஒரு கதை ஜெர்மன் தேசத்துப் பாடகி ஒருத்தி, அவள் தன் சொந்த பாஷையான ஜெர்மன் பாஷையில் உள்ள பெருக்கல் வாய்ப்பாட்டையே சாகித்தியமாக வைத்து ஒரு கச்சேரியை சென்னையில் செய்துவிட்டாள். அதைக் கேட்டுக் கொண்டிருந்த தமிழ் நாட்டு ரசிகர்களும் பேஷ், பேஷ், என்று தலையை ஆட்டி பாராட்டிவிட்டார்கள். இப்படி இருக்கிறது தமிழ்நாட்டின் சங்கீத அனுபவம், என்று அவர்கள் சொன்னபோது

அந்தக் கதையில் உள்ள ஹாஸ்யத்தை விட, அவர்கள் உள்ளத்தில் உள்ள குமுறலையே உணர்ந்தேன். நடனச் சங்கீதத்திற்கு சாகித்தியம் எவ்வளவு அவசியம் என்பதை கவிமணியவர்கள் எத்தனை தரம் எப்படி எல்லாம் வற்புறுத்தி வந்திருக்கிறார்கள் என்பதெல்லாம் என் நினைவுக்கு வந்தது.

அவர்களுடன் அன்று தங்கியிருந்ததெல்லாம் ஏதோ ஒரு மணி நேர காலமே என்றாலும், அதற்குள் நாங்கள் பேசிய விஷயங்கள் எல்லாம் எத்தனை எத்தனையோ. ரசிகமணியவர்கள் கம்பராமாயணத் திருத்தங்களைப் பற்றிப் பேசினோம். நாமக்கல் கவிஞர் குறள் உரையைப் பற்றிப் பேசினோம். தமிழ்நாட்டுப் பத்திரிக்கைகளை, அதில் வருகின்ற கட்டுரைகள், கதைகள் எல்லாவற்றையும் பற்றிப் பேசினோம். இத்தனையும் பேசியபோது தளர்வொன்றும் இல்லாதது கண்டு, நான் சொன்னேன். ஐயாவுக்கு நலிவெல்லாம் கழுத்துக்குக் கீழேதான், கழுத்துக்கு மேலே எல்லாம் தெளிவாக இருக்கிறது என்று. சிரித்துக் கொண்டார்கள். பின்னர் அவர்களோடேயே பிறந்து வளர்ந்த வியாதி ஆஸ்த்துமா, எக்சிமா, என்றெல்லாம் தொந்தரவு இல்லையே என்று விசாரித்தேன். இப்போது இல்லை என்று சொல்லிவிட்டு, நல்ல நகைச்சுவையோடு "என்ன தம்பி எனக்கு ஒரு யமன் போதாதா இன்னும் அந்தப் பழைய இரண்டு யமன்களும் வேறே வேண்டுமா" என்றார்கள். வாழ்வு அவ்வளவு கசந்திருக்கிறது அவர்களுக்கு. *(அகில இந்திய வானொலியில் பேசியது - 30.8.1955)*



பெயரன் பேத்தியருக்கு தாத்தா கதை சொல்கிறார்

# தேவனுடன் ஏழுநாள்

**முன்னம்நின் அன்னை அமுதூட்டி**
**மையிட்டு, முத்தமிட்டு**
**கன்னமும் கிள்ளிய நாளல்லவே**
**என்னைக் காத்தளிக்க**
**அன்னமும் மஞ்ஞையும் போல்இரு**
**பெண்கொண்ட ஆண்பிள்ளை நீ**
**இன்னமும் சின்னவள்தானோ**
**செந்தூரில் இருப்பவனே"**

என்று ஒரு பாட்டு. ஆம். அந்தத் திருச்செந்தூர் அலைவாய்க்கரையிலே இருக்கும் அந்த ஷண்முகநாதனைக் காணச்சென்ற பக்தன் ஒருவன் பாடிய பாட்டுத்தான். இந்தப் பாட்டைச் சென்னையில் சில வருஷங்களுக்கு முன்னால் ஒரு கூட்டத்தில் சொல்லும் வாய்ப்புக் கிடைத்தது எனக்கு. துன்பத்திலேயே உழன்று கொண்டிருக்கிறான் ஒரு பக்தன். அவன் நல்லவன். முருகன் குமரன் என்றால் அழகன் இளைஞன். தன் குறைகளை எல்லாம் முருகனிடம் சொல்ல ஆசைப்பட்டு, அவன் மிகவும் இளைஞன் ஆயிற்றே, இப்போதெல்லாம் தன் தாயின் மடியில் கொஞ்சி மகிழ்கின்ற பருவம்தானே, இன்னும் கொஞ்சம் பெரியவனாக வளரட்டுமே என்று காத்திருக்கிறான். இப்படி நினைத்துக் கொண்டிருக்கிற பக்தன், அன்பர் ஒருவருடன், அவர் அழைப்பிற்கிணங்கி திருச்செந்தூர் செல்கிறான். ஷண்முக விலாசத்திற்குள்ளேயே நுழைகிறான். அங்கு வள்ளி தெய்வானை என்னும் துணைவியர் சமேதனாக, விலையுயர்ந்த நகைகள், ஆடைகள் எல்லாம் அணிந்து கொண்டிருக்கும் அந்த ஷண்முக நாதனையே காண்கின்றான். அப்போது கவிஞன் உள்ளத்தில் ஓர் ஆங்காரமே பிறக்கிறது. நம் குறைகளை எல்லாம் அறிய மாட்டானா இவன். அறிகின்ற பருவம் இல்லை என்று ஏமாந்து

போய்விட்டோமே, ஆசாமி பெரிய அசத்தலான ஆசாமியாக இருப்பான் போலிருக்கிறதே, என்று எண்ணுகிறான். அவனையே கேட்கிறான் ஒருகேள்வி. இன்னமும் நீ சின்னவன்தானா என்று.

இந்தப் பாட்டை அன்றைய கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் எத்தனையோ பேர் கேட்டார்கள். ஆனால், அந்தக் கூட்டத்தில் இருந்த ஒரே ஒருவரை மட்டும் இந்தப் பாட்டு ஒரு உலுக்கு உலுக்கியிருக்கிறது. கூட்டத்தை விட்டு தன் வீட்டிற்கு, ஆம், சண்முக விலாசம் என்று விலாசமிட்ட வீட்டிற்குச் செல்வதற்குள் குறைந்தது இருபது தடவையாவது சொல்லிச் சொல்லி மனனம் பண்ணியிருப்பார், மகிழ்ந்திருப்பார், அத்துடன் நிற்கவில்லை அவர். சந்தர்ப்பம் வாய்த்த போதெல்லாம் பாட்டை தன் கதைகளில் நுழைத்தார், கட்டுரைகளில் நுழைத்தார். பேச்சுக்களில் நுழைத்தார். அப்படிப் பாட்டோடு பாட்டாக, ஷண்முகநாதனோடு ஷண்முகநாதனாக தேவனோடு தேவனாக இணைந்து போனவர்தான் நண்பர் மகாதேவன். அதற்குமுன் ஏதோ ஏனோதானோ என்று இலக்கிய உலகில் நண்பராக இருந்த நாங்கள் இருவரும் அந்த நாள் முதல், அந்நியோன்ய நண்பர்கள் ஆனோம். அது காரணமாகவே அவர் தஞ்சைக்கு வந்து என்னோடு ஒரு வாரம் தங்கி, என்னோடு ஊர் ஊராகச் சுற்றி மூர்த்திகளையெல்லாம் கண்டு தொழுதார். இந்த ஒரு வாரமும் எவ்வளவோ இன்பமாகக் கழிந்தது இருவருக்கும்.

நண்பர் தேவனை நல்ல கதை எழுதுபவர் என்று பல வருஷங்களாகத் தெரியும். ஆனந்தவிகடன் நிர்வாகப் பொறுப்புடைய ஆசிரியர் என்றும் தெரியும். ஆனால் எவ்வளவு குழந்தையுள்ளம் படைத்தவர், பண்பு நிறைந்தவர், சிறந்த நண்பர் என்பதை, அந்த ஒருவாரம் என்னுடன் தங்கி இருந்த போதுதான் தெரிந்து கொண்டேன். அவர் முதல் முதல் எழுதிய மிஸ்டர் ராஜாமணியை அந்த குஞ்சுப் பயல் ராஜமணியை அழைத்துக் கொண்டு, தான் வேலை பார்க்கும் துரைமகனிடம் சென்ற அவனது மாமா, அங்கு ராஜமணி குறும்பாகப் பேசிய மழலை மொழிகளை எல்லாம் தமிழே அறியாத துணைவியிடம் அந்த மாமா மொழிபெயர்த்த விதத்தைப் படித்துப் படித்து இருபத்தைந்து வருஷங்களுக்கு முன் நான் சிரித்ததை எல்லாம் சொன்னபோது அவர் சொன்னார். ஆம் அந்த மாஸ்டர் ராஜமணி சார்தான் எனக்கு ஆனந்தவிகடனில் வேலை தேடிக் கொடுத்தார். அவர்தான் என்னை ஆசிரியர் கல்கியிடமும், அதிபர் வாசனிடமும் அறிமுகம் செய்து வைத்தார் என்றார். மேலும் சொன்னார். அந்தக் கட்டுரையைப் படித்த கல்கிக்கு ஒரு சந்தேகம்,

அது என் சொந்தச் சரக்குத்தானா என்று. ஆதலால் அதைத் தொடர்ந்து ஒரு கட்டுரையை அனுப்பி அவர் பக்கத்தில் கிடந்த மேசை அருகிலேயே உட்கார்ந்து அப்போதே எழுதும்படி கேட்டார். எழுதிக் கொடுத்தேன். அதன்பின்தான் அங்கு ஒரு உதவி ஆசிரியனாக என்னை அமர்த்தினார் என்றார். இப்படி தான் ஆனந்தவிகடனில் வேலை பெற்று ஆசிரியர் கல்கியின் அடிச்சுவட்டில் நடந்து, கதைகளையும் கட்டுரைகளையும் எழுதி எழுதி நல்ல எழுத்தாளனாகவும் அவர் பயிற்சி பெற்றுள்ளது பற்றி எல்லாம் கதைகதையாகச் சொன்னார். அப்படி சொல்கிற போதெல்லாம், தன்னை ஒரு நல்ல கதாசிரியனாக ஆக்கிய பெருமை கல்கியையே சாரும் என்பதை மறவாமலேயே இருந்தார்.

அவர் எழுதியதில் அவருக்கே மிகவும் பிடித்தமானது. அதிசயத் தம்பதிகள் தான். அதற்குக் காரணம் அந்த அதிசயத் தம்பதிகள் வாழ்வோடு, அவருடைய வாழ்வும் பின்னிக் கிடந்ததுதான். கணவனும் மனைவியுமாக வாழ்க்கையை ஆரம்பித்தவர்கள் கடைசியில் சண்டை போட்டு, முடிவாக மனைவியைக் கொன்று விட்டுதான். மறு வேலை செய்வது என்று தீர்மானித்திருக்கிறான் என்று அந்த அதிசயத் தம்பதிகளைப் பற்றி எழுதிவிட்டு வீட்டிற்கு வருகிறார். மறுநாள் தன் மனைவி ராஜியோடிருந்து அவளுக்கு சீமந்தத்தை நடத்துகிறார். சீமந்தம் நடந்தபின் அன்று மாலை அவளோடு கேரம் ஆடுகிறார். ஆனால் அந்த அருமை மனைவி அன்றிரவே இவரை துக்கத்தில் ஆழ்த்திவிட்டு மறைந்துவிடுகிறார்.

**மண்ணில் இனிய வாழ்வினுக்கு**
**வாய்த்த நல்ல துணை என்ன**
**எண்ணியிருந்த மணவாளன்**
**ஏங்கி ஏங்கி உளம்வருந்த**
**கண்ணிற் காணா விண்ணுலகம்**
**கடந்து சென்ற**

அந்த ராஜியை நினைத்து. பத்து வருஷ காலம் உருகியிருக்கிறார். இதை அவர் சொல்கிறபோதெல்லாம் அவர் கண்களில் நீர் நிறைந்து நிற்கும்.

அவருக்கு ஒரு குறை. ஒரு குழந்தை இல்லையே என்று. நாகப்பட்டினம் சௌந்திராஜப் பெருமாள் கோயில் போயிருந்த போது அங்குள்ள சந்தான கோபாலனை மடி மீது கிடத்தி, மகப்பேறு வாய்ப்பதற்காக அந்தப் பெருமாளை வேண்டிக் கொண்ட காட்சி

என் உள்ளத்தை விட்டு என்றுமே அகலுவதில்லை. எத்தனையோ பாத்திரங்களின் உள்ளங்களில் எல்லாம் நுழைந்து அவர்கள் ஆசாபாசங்களை எல்லாம் சாங்கோபாங்கமாக வாசகர்களுக்குக் கூறும் எழுத்தாளர், இத்தனை குழந்தையுள்ளம் படைத்தவராக இருக்கிறாரே என்று எண்ணி எண்ணி நான் மகிழுவதுண்டு. பல வருஷங்களுக்கு முன், ராஜியின் பிள்ளை என்று ஒரு தொடர் எழுதினார். அதை எப்படி எழுதினீர் என்று கேட்டேன். சொன்னார். "என் மனைவி ராஜி இருந்து அவள் பிள்ளையைப் பெற்றெடுத்து என் கைகளில் கொடுத்திருந்தால், அந்தப் பிள்ளை எப்படி இருந்திருக்கும், அந்தப் பிள்ளையை எப்படி நான் கொஞ்சியிருப்பேன் என்று இரவு பகலாகக் கற்பனை பண்ணிக் கொண்டே இருந்தேன். அந்தக் கற்பனையில் பிறந்தவன்தான் ராஜியின் பிள்ளை" என்றார். இதைக் கேட்கக் கேட்க ஐயோ பாவம் ராஜி மறைந்து பத்து வருஷங்கள் கடந்த பின் திரும்பவும் மணம் முடித்து மகப்பேறு விரும்பி நின்ற இந்தத் தேவன் அந்த காயம் தீராமலேயே மறைந்துவிட்டாரே என்று எண்ணுகிறபோது அவர் முழுக்க முழுக்க நம்பிய அந்த சண்முக நாதன் பேரில் எவ்வளவோ கோபம் வருகிறது, இப்படி நம்பியவரை மோசம் செய்துவிட்டானே என்று.

ஆனால், நண்பர் தேவன் அந்த சண்முக நாதன் பேரில் கொண்டிருந்த நம்பிக்கையை கடைசி வரை இழந்துவிடவில்லை. இதைப் பார்க்கிறோம். அவருடைய லக்ஷ்மி கடாட்சம் என்ற கதையிலே. கதாநாயகி காந்தாமணி கொழுத்த பணக்காரன் மகா தூர்த்தன் வேணுகோபாலனிடத்துச் சிக்கிக் கொள்கிறான். அப்போது அவன் கையிலிருந்து அவள் தப்பிக்க அவள் உபயோகித்த ஆயுதம். அந்த கந்த ஷஷ்டி கவசத்தையே.

**பெண்களைத் தொடரும்**
**பிரம ராக்ஷதரும்**
**அடியனைக் கண்டால்**
**நில்லாதோட**
**நீ எனக்கு அருள்வாய்**

என்று உருப்போட உருப்போட, வேணுகோபால் நண்பர் சிங்காரம் வந்து இடைநின்று காந்தாமணியை மீட்கிறார் என்று கதையை நடத்தும் முறையை அறிந்தால், தேவனது முருக பக்தி எத்தனை அழுத்தமானது என்று தெரியும். அந்த பக்தியிலேயே தான் திளைத்தார் இத்துணை வருஷகாலமும். அது காரணமாகவே தம் கதைகளில் எல்லாம் திருத்தணி முருகனை வடபழனி

ஆண்டவனை நம்பிக்கைக்குரிய பாத்திரங்களாக கொண்டு வந்து நிறுத்தினார்.

அவர் எழுதிய கதைகளில் எனக்கு மிகவும் பிடித்தமானது லக்ஷ்மி கடாட்சம். அவர் எழுதியதில் எனக்குப் பிடிக்காதது சிஐடி சந்துரு. இதை அப்பட்டமாகவே சொன்னேன். ஆம், அது உங்களுக்குப் பிடிக்காதுதான். அது உங்களுக்காக எழுதப்பட்டது அல்லவே. அதையும் படிப்பதற்கு என்று ஒரு கூட்டம் இருக்கிறதே அவர்களுக்காக நான் எழுத வேண்டாமா என்று என்னை மடக்கினார். அவர் எழுதிய எத்தனையோ கதைகள் அமரத்வம் வாய்ந்தவை. அந்தக் கதைகளை, அந்தக் கதைகளில் வரும் பாத்திரங்களை அவர் எப்படிக் கற்பனை பண்ணுகிறார் என்பதை என்னுடன் அவர் தங்கியிருந்த போது அறிந்தேன். வெடுக்கென்று துடுக்காகப் பேசும் கோபிநாத் என்று ஒரு நண்பர், வீட்டுக்கு வரும் நண்பர்களை அன்போடு உபசரிக்கும் இந்திரா என்று ஒரு பெண்மணி, பெரியவர்கள் பேசும்போது இடையிடையே விழுந்து பேசும் தம்பி என்று ஒரு பையன். இத்துணை பேரையும் தன் கதைகளுக்கு உரிய கதாபாத்திரமாக ஆக்கி விடுகிறார். சுடச்சுட அவர்கள் தன் உள்ளத்தில் இருந்து மறையும் முன்பே. ஏன் கும்பகோணத்தை அடுத்த கோட்டூரிலே காவிரி உத்தாவாகினியாக ஓடுகிறது என்று அங்கு ஒரு முழுக்குப் போட்டால், அந்தச் சம்பவத்தையும் கூட, ஒரு கதையில் நிகழும் நிகழ்ச்சியாகவே சித்தரித்து விடுகிறார். தன் முன் நடக்கும் பாத்திரங்கள், தன் கண் முன் நடக்கும் நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் தத்ரூபமாகக் காட்டும் ஆற்றல் அவரிடம் நிறைந்திருந்தது. இல்லாவிட்டால் ஐந்து நாடுகளில் அறுபது நாள் என்று பன்னிரண்டு மாதம் அழகு அழகாக எழுத முடியுமா என்ன?

எத்தனையோ நல்ல எழுத்தாளர்கள் எனது நண்பர்கள். எவ்வளவோ பெரிய கதாசிரியர்கள், பத்திரிகையாசிரியர்கள், எல்லாம் எனக்கு வேண்டியவர்கள். இத்தகைய பெருமக்களில் பலர் பழகுவதற்குரிய மனிதப் பண்புடையவர்களாக இருக்கவில்லை. எழுத்தாளனாக, கதாசிரியனாக, பத்திரிகையின் நிர்வாக ஆசிரியனாக இருந்த நண்பர் ஒருவர் நல்ல பண்புகள் நிறைந்தவராகவும் குழந்தை உள்ளம் படைத்தவராகவும் இருக்கிறார் என்பதைத்தான், அவர் என்னுடன் தங்கிய ஏழு நாட்களில் கண்டேன். அவர்தான் அருமை நண்பர் தேவன்.

சென்ற நான்கைந்து மாதமாக, அவர் படுக்கையில் இருக்கும்போதெல்லாம் மாதமொருமுறை சென்னை செல்லும்

வாய்ப்புக் கிடைத்தது எனக்கு. சென்றபோதெல்லாம் அவரைக் கண்டேன். கடைசியாக அவரை நான் பார்த்தது 26.4.57 ஆம் தேதி. அன்று அவரது முகத்தில் ஒரு தெளிவு இருந்தது. படுக்கையிலேயே கிடந்தாலும் உடல் நலம் பெற்றிருப்பது போலத் தெரிந்தது. எவ்வளவோ பேசினோம். சில மாதங்களுக்கு முன் நான் அனுப்பிய விநாயக ஸ்தோத்திரங்கள் என்ற சமஸ்கிருத நூலைப் படித்துவிட்டதாகவும் அதிலுள்ள விஷயங்களை வைத்து ஒரு கதையை உருவாக்கிக் கொண்டிருப்பதாகவும் சொன்னார். மிக்க சந்தோஷம் அடைந்தேன். தாம் பிழைத்துக் கொள்வோம் என்ற நம்பிக்கை வந்து விட்டது அவருக்கு. அது போதும் அவர் தேற என்று எண்ணினேன். நான் அவரிடம் விடைபெற்றுப் புறப்படும் போது, என்னிடம் இருந்த காஞ்சி காமகோடி சங்கராச்சாரியார் படத்தில் ஒரு பிரதி வேண்டும் என்றார் அனுப்பி வைக்கிறேன் என்று சொல்லி வந்தேன். உடனே அனுப்ப முடியவில்லை. இனி நான் அந்தப் படத்தை எப்படி எங்கு அனுப்புவது என்றுதான் ஏங்குகின்றேன். வேறு என்ன செய்ய!



கர்ணன்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# அமரர் ஏ.சி. பால்நாடார்

பூர்விக கிரேக்கருக்கு ஹோமர் எப்படியோ, ரோமருக்கு வர்ஜில் எப்படியோ, இத்தாலியருக்கு டாண்டே எப்படியோ, ஜெர்மானியருக்கு கத்தே எப்படியோ, ஆங்கிலேயருக்கு ஷேக்ஸ்பியரும் மில்டனும் எப்படியோ, வடமொழிக்கு வால்மீகி எப்படியோ அப்படியே தமிழுக்கும் கம்பர் பெருமை கொடுக்கிறார் என்று முப்பது ஆண்டுகளுக்கு முன் கம்பனுக்குக் கட்டியங் கூறினார் ஒருவர். ஏதோ உபசாரமாகக் கூறியது அன்று. அப்படிக் கொண்ட சில இலக்கியங்களை அந்த அந்த மொழியிலேயே கற்றவர். மற்றும் பல இலக்கியங்களை ஆங்கில மொழி மூலம் கற்றவர். இப்படி நுண்மான் நுழைபுலத்தோடு கற்று அறிந்த பின் தான் உலக மகா கவிகளின் வரிசையிலே ஒருங்கு வைத்து எண்ணத் தகுந்த தமிழ்க் கவிஞன் கம்பனே என்று கூறினார். அப்படிக் கட்டியங்கூறிக் கொண்டு, சென்ற முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக கம்பன் புகழ் பரப்பும் தொண்டனாக வாழ்ந்திருந்தார் பால் நாடார். எழுபத்து நான்காம் வயது வரை வாழ்ந்து சமீபத்தில் இறைவன் திருவடி சேர்ந்திருக்கிறார். நிறைவாழ்வு வாழ்ந்து நிறைந்த புகழ்பெற்ற பின்னரே மறைந்திருக்கிறார்.

கம்பன், கம்பனது காவியம், கம்பன் உருவாக்கிய ராமனிடம் எல்லாம் எல்லையற்ற ஈடுபாடு உடைய இவரை கிறிஸ்தவ சமயத்தைச் சார்ந்தவர் என்றால் பலர் நம்பவே மாட்டார்கள். ஆனால் இலக்கிய உணர்வுகளில் சமய வேறுபாடு எல்லாம் ஏது. திருநெல்வேலி ஜில்லாவில் ராதாபுரததை அடுத்த கூடங்குளத்திலே நல்ல சைவ மரபிலே பிறந்தவர். அவரது தாய் தந்தையார் அவருக்கு இட்டிருந்த பெயர் சங்கரமூர்த்தி. இளமையிலே தமிழ் இலக்கியங்களை எல்லாம் நன்கு கற்றுத் தேறியிருக்கின்றார். பின்னர் திருச்சி பிஷப்ஹீப்பர் கல்லூரியில் படித்தக் காலத்தில் இவ்வாறு



ஏ.சி. பால்நாடார்

தமிழ்ப் பற்றும் இன்னும் வளர்ந்திருக்கிறது. அப்போதுதான் கிறிஸ்து பெருமானின் போதனைகளைக் கேட்டு கிறிஸ்தவ மதத்தைத் தழுவியிருக்கின்றார். கிறிஸ்டின் பால் என்ற பெயரையும் ஏற்றிருக்கிறார். பின்னரே சென்னைச் சட்டக் கல்லூரியில் படித்துப் பிஎல் படித்து பாஸ் செய்திருக்கிறார். இவரது பள்ளித் தோழர் ரசிகமணி டிகேசி என்றால், கம்பன் பக்தி வளர்வதற்கு கேட்பானேன். கம்பனது காவியத்தைச் சாத்திரக் கண்கொண்டு, காய்தல் உவத்தல் இன்றி நுணுகி ஆராய்வதில் அவர் ஒரு நிபுணர். கம்பனது காலத்தை நிர்ணயிப்பதிலே எத்தனையோ இடர்ப்பாடுகள். பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் கம்பனது காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டே என்று சொல்ல, பால் நாடார் அது தவறு. கம்பன் காலம் ராஜராஜ சோழனுக்கும் முந்திய ஒன்பதாம் நூற்றாண்டே என்று தக்க காரணங்களோடு தமிழிலும் ஆங்கிலத்திலும் விளக்கியிருக்கிறார். தமிழ் கல்சர் என்ற ஆங்கிலப் பத்திரிகையிலே அவர் எழுதி வந்தது இன்னும் முற்றுப்பெறவில்லை என்று நினைக்கிறேன். இப்படி ஆணித்தரமாக அவர் கம்பனை, தலைமை தாங்குவதோடும், சொற்பொழிவுகள் நிகழ்த்துவதோடும் அல்லாமல், மற்றைய இளைஞர்கள் பேச்சில் காணும் நயங்களையும் ஏன் குறைபாடுகளையுமே அவர்களிடம் நேரில் சொல்லி உத்சாகப்படுத்தினார்.

பால் நாடார் அவர்கள் குடும்பம் நல்ல தமிழ்ப் பண்பாட்டிலே ஊறித் திளைத்தக் குடும்பம். வைத்தியமே தொழிலாகவும், இசையே மூச்சாகவும் கொண்ட தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இவர்களது மாமனார். இவர்களது துணைவியார் சௌந்திரவல்லியம்மையும், மைத்துனர் சுந்தரபாண்டியன், ஜோதிப் பாண்டியன், குணபாண்டியன் முதலானோர் நல்ல சங்கீத விற்பன்னர்கள், வீணை வித்துவான்கள். இவர்களது மூன்று பெண்மக்களே கமலவல்லி, திலகவதி, வேதவல்லி என்பவர். மற்றையவர்கள் இந்து சமயத்தைத் தழுவிய தமிழன்பர்கள். இவர்கள் வக்கீல் வாழ்க்கையைத் தொடங்கியது தூத்துக்குடியிலே. அங்கே தான் அறிவுடைமைக்கும், வாதத் திறமைக்கும் இவர்கள்

பெயர் பெற்றிருக்கிறார்கள். சமூக சேவையில் ஈடுபட்டு, ராவ் சாகீப் பட்டம் பெற்று ஜில்லா போர்டு சங்கத் தலைவராக இருந்திருக்கிறார்கள். அவர்கள் செய்த சேவையை எல்லாம் விரிக்கில் பெருகும். நாவலர் சோமசுந்தரபாரதியார். தேசபக்தர் வ.உ.சிதம்பரனார் முதலியவர்களோடு சேர்ந்து முப்பது வருஷகாலமாக சிறந்த இலக்கியப் பணியாற்றி இருக்கிறார். தூத்துக்குடிக் கம்பன் கழகத்தின் நிரந்தரத் தலைவரும் அவரே. காரைக்குடியில் சகோதரர் சா. கணேசன் நடத்தும் கம்பன் திருநாளிலே அவர் பங்கு பெறாத வருஷமே இல்லை. அங்கு தலைமை தாங்குவார் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார். அவ்விழாவில் பங்கு பெறும் இளைஞர்களை எல்லாம் ஊக்குவிப்பார்.

கருத்த மேனியும், நரைத்த மீசையும், பீடு நடையும் அவர்களுக்கே உரிய ஒன்று. இருபது வருஷங்களுக்கு முன்னாலேயே அவர்களைப் பற்றி ஆசிரியர் கல்கி, மீசை நரைத்தும் ஆசை நரைக்காதவர் என்று கூறியிருக்கிறார். ஆம், தமிழ்க் காதலிலே கம்பன் பக்தியிலே நரைக்காத ஆசை உடையவர். தள்ளாத வயதிலும் அண்ணாமலை பல்கலைக் கழக கம்பராமாயண ஆராய்ச்சிக்குப் பங்குபெற்று உழைத்து, அந்தப் பணியைச் செய்து திரும்பும் வழியிலேயே இறைவன் திருவடி சேர்ந்தார். அவரது பிரிவால் வருந்தும் அவர்களது சுற்றத்தாரை விட மற்றைய இலக்கிய அன்பர்கள் துயரே பெரிது. என்றாலும் வானுலகிலே வவேசு அய்யர், வஉசி, கவிமணி, ரசிகமணி எல்லாம் சென்றிருக்கும் அநத் வானுலகிற்கல்லவா சென்றிருக்கிறார். அங்குமே கம்பன் புகழ் பரப்பும் பணி சிறப்பாக நடக்கவேணுமல்லவா என்றுதான் நம்மை நாம் தேற்றிக் கொள்ள வேணும்.



# எங்கள் திருநெல்வேலி

ஒரு கவிஞன். கவிஞன் என்றால்தான் வறுமையும் உடன்பிறந்து வளருமே. அந்த வறுமை காரணமாக வாடுகிறான், வருந்துகிறான். கவிஞனோ அந்தத் திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலிக்காரன். நல்ல தெய்வபக்தி உடையவன். ஒவ்வொரு நாளும் அவன் கோயில் சென்று இறைவனை வழிபட மறவாதவன். கோயிலுக்குச் செல்லும் பொழுதெல்லாம் வேணுவனநாதர், நெல்லையப்பரிடம் தன் குறைகளைச் சொல்கிறான். தன் வறுமையை நீக்க வேண்டுகிறான். ஆனால் நெல்லையப்பரோ இவனது குறைகளைத் தீர்க்கிறவராகக் காணோம். ஏன்? காது கொடுத்துத்தான் கேட்கிறாரா என்பதே சந்தேகம். இப்படிக் கழிகிறது பல நாட்கள்.

இந்தக் கவிஞன் ஒருநாள் அன்னை காந்திமதியின் சந்நிதிக்கு வருகிறான். அம்மன் கோயில் வாயில் வழி நுழைந்தவன் ஊஞ்சல் மண்டபம், மணி மண்டபம், நடு மண்டபம் எல்லாம் கடந்து கருவறைப் பக்கமே வந்து சேருகிறான். அங்கே நிற்கும் அன்னையைப் பார்க்கிறான். அவளோ, தலையில் வைர மணிமுடி, ராக்கொடி எல்லாம் அணிந்திருக்கிறாள். மூக்குப் பொட்டு, மூக்குத்தி, புல்லாக்கு எல்லாம் அழகு செய்கின்றன. மார்பில் நவமணி வடம் புரள்கிறது. அடிகளில் மணிச் சிலம்பு ஒலிக்கிறது. வலக்கையை உயர்த்தி அதில் கிளியுடன் கூடிய செண்டு ஒன்று ஏந்தி, இடக்கையைத் தாழ்த்தி நிற்கும் அந்த வடிவழகியை ஒரு புதுமணப் பெண்ணாகவே காண்கிறான் கவிஞன். அப்போது தோன்றுகிறது கவிஞனுக்கு ஏன், இந்த அன்னையின் மூலமாகவே தனது விண்ணப்பத்தை அந்த வேணுவனநாதரிடம் சமர்ப்பிக்கலாகாது என்று. அப்படி அவள் தனக்காகத் தன் கணவரிடம் பரிந்து பேச நல்ல வாய்ப்பு எப்போது கிடைக்கும் என்பதையுமே அறிகிறான். இந்த எண்ணத்திலே உருவாகிறது பாட்டு,

**ஆய் முத்தப் பந்தரில் மெல்லணை**
**மீது உன் அருகிருந்து**
**'நீமுத்தம் தா' என்று அவர் கொஞ்சும்**
**வேளையில், நித்தநித்தம்**
**வேய்முத்த ரோடுஎன் குறைகள்**
**எல்லாம், மெல்லமெல்லச் சொன்னால்**
**வாய்முத்தம் சிந்தி விடுமோ?**
**நெல்வேலி வடிவு அன்னையே!**

என்று அன்னையிடமே கேட்கிறான். இவ்வளவு ஆத்திரத்தோடு கவிஞன் கேட்டபின் அன்னை சும்மா இருப்பாளா? சிபாரிசு பலமாகத்தான் செய்திருப்பாள். நெல்லையப்பரும் மனைவி உத்தரவுக்குக் கீழ்ப்படியாமலா இருந்திருப்பார், கவிஞனுக்கு விடிவு காலமும் காலதாமதம் இல்லாமலே வந்திருக்கும். உண்மையிலேயே இப்படியே நடந்தது என்பது அல்ல பொருள். இறைவனையும் இறைவியையும் மனம் ஒத்த காதலர்களாகக் கற்பனை பண்ணி இப்படிக் கவிஞன் பாடுவதிலே ஒரு சுவை கண்டிருக்கிறான். இந்த இறைவனாம் நெல்லையப்பரும் இறைவியாம் காந்திமதி அம்மையும் கோயில் கொண்டிருக்கும் தலம்தான் திருநெல்வேலி. அத்தலத்துக்கே செல்கின்றோம் நாம் இன்று.

திருநெல்வேலி தென்பாண்டி நாட்டின் தென்பகுதியிலே உள்ள ஒரு பழம் பதி. 'பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை,' நதிக்கரையிலே உள்ள ஒரு நகரம் திருநெல்வேலி. டவுன் ஸ்டேஷனில் இறங்கினால், வடக்கு நோக்கி நாலு பர்லாங்கு வரவேணும். அப்படி வந்தால் கோயில் வாயில் வந்து சேரலாம். இந்தக் கோயிலிலே ஒரு சம்பிரதாயம். கோயிலுக்கு வருபவர் எல்லாம் முதல் முதல் சென்று தரிசிப்பது காந்திமதி அம்மையையே. ஆம்! மதுரையில் மலயத்துவஜன் மகளான மீனாட்சிக்கு எத்தனை பிரா்தான்யம் அந்தக் கோயிலில் உண்டோ, அத்தனை இங்கு காந்திமதிக்கும் உண்டு. நெல்வேலி முழுதும் வீட்டுக்கு ஒரு காந்திமதி அல்லது காந்திமதி நாதன் இருப்பார்.

காந்திமதியம்மன் கோயில் வாயில் வழியாகவே நாமும் நுழையலாம். உள்ளே சென்றதும் சந்நிதிக்கு எதிரில் உள்ள ஊஞ்சல் மண்டபத்தைக் காணலாம். அதற்கு வடபுறமே பொற்றாமரைக் குளம். மதுரையைப் போல் பெரிதல்ல. ஆயினும் அழகாக இருக்கும். அங்கிருந்தே கோபுர தரிசனம் செய்யலாம். அதன்பின் மகாமண்டபம் எல்லாம் கடந்து அர்த்த மண்டபம் வந்து, அங்கிருந்து காந்திமதி

யம்மையைக் கண்டு வணங்கலாம். முன்னரே கூறியது போல் அம்மை நின்ற திருக்கோலத்தில் புதுமணப் பெண்ணாகவே காட்சி தருவாள். இந்தக் காந்திமதியம்மையின் திருக்கல்யாண மகோத்சவம் கண்கொள்ளாக் காட்சி. கதை நமக்குத் தெரிந்த கதைதான்.

அன்று கைலையில் இறைவன் இமவான் மகளான உமையைத் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானிக்கிறான். அந்தத் திருமணக் கோலங்காண மக்கள் தேவர் நாகர் எல்லாருமே கைலைக்குச் செல்கிறார்கள். அதனால் பாரம் தாங்கமாட்டாமல் தென்கோடு உயர்ந்து வடகோடு தாழ்கிறது. நாட்டைச் சமன் செய்ய இறைவன் அந்தக் குள்ள அகத்தியரையே தேர்ந்தெடுக்கிறான். அவரைத் தென்திசை செல்ல வேண்டுகிறான். அவரோ, 'நான் மட்டும் திருமணக் கோலம் காண வேண்டாமோ' என்று சிணுங்குகிறார். அவரிடம் இறைவன் தாமே தென்திசை வந்து திருமணக் கோலத்தில் காட்சி கொடுப்பதாக வாக்களிக்கிறார். அதன் பின்னேதான் அகத்தியர் தென்திசை வருகிறார். பொதிகை வந்து தங்குகிறார். தென்திசையும் தாழ்ந்து நாடு சமநிலை எய்துகிறது. மணம் முடித்த புதிய தம்பதிகளாம் அந்த அமர காதலர்களிடையே ஒரு விளையாட்டு. அன்னை, அத்தனின் கண்களைப் பொத்தி யார் பொத்தியது என்று கேட்கிறாள். அண்ணலின் கண்கள் பொத்தப் பெற்ற காரணத்தால் அகில உலகமுமே இருளில் ஆழ்ந்து விடுகிறது. இந்தப் பழி அகல அன்னை கம்பை நதிக் கரையில் வந்து தவம் புரிகிறாள். அவள் தவத்துக்கு இரங்கி இறைவன் அங்கு எழுந்தருளிக் காட்சி தருகிறான். மணமும் செய்து கொண்டு அந்தத் திருமணக் கோலத்திலேயே அகத்தியர் முன்பு வந்து நின்றுவிடுகிறான். ஆனால், அந்தத் திருமண விழாவைத் திருநெல்வேலி அன்பர்கள் அதிலும் பெண் மக்கள் எப்படிக் கொண்டாடுகிறார்கள் தெரியுமா? அதைச் சொல்கிறார் ஒரு கவிஞர்.

**வேணு வனத்து இறைவர் புது**
**மணம் விரும்பி, விளையாட்டாய்**
**காணும் உமைப்பெயர் பொருந்தும்**
**காந்திமதிதனைக் கடிந்து காட்டுக்கு ஓட்டி**
**தானும் அவள்பின் சென்று நயம் படித்து**
**பலர் சிரிக்க நலிவே உற்றால்**
**வாள்நுதலும் அவர்பின்னே வருவதுவும்**
**வியப்பாமோ? வசை ஒன்று இன்றி!**

கோபித்துக் கொண்டு தாய் வீடு சென்ற தலைவியின் பின் சென்று, கெஞ்சிக் கூத்தாடி அவளைத் தம் வீட்டுக்குத் திரும்பவும் அழைத்து வருகிறார் நெல்லையப்பர் என்பது பாமரர் காணும் கதை. ஆம், இந்தக் கதையில் கூடப் பெண்மையின் வெற்றியே மேலோங்கி நிற்கிறது. இப்படித்தான் காந்திமதியாம் வடிவன்னை முக்கியத்துவம் பெற்றுவிடுகிறாள். அவள் கருவறையில் கையில் செண்டேந்திக் கொண்டு நின்றால், செப்புச் சிலை வடிவில் ஞான முத்திரையோடு நிற்பாள். உயிர்களுக்கெல்லாம் அருள் புரியும் கோலம் அல்லவா இந்த வடிவன்னையின் வடிவம்.

இந்த வடிவன்னையை மணந்தவரே நெல்லையப்பர் என்னும் வேணுவனநாதர். இவரது சந்நிதி அம்மையின் இடப்பக்கத்திலே. இவ்விரண்டு கோயில்களும் தனித்தனியே கட்டப்பட்டிருக்க வேணும். பின்னர்தான் இரண்டு கோயில்களையும் இணைத்து ஒரு மண்டபம். பொற்றாமரைக்கு மேல் பக்கம் கட்டியிருக்கிறார்கள். இதனையே சங்கிலி மண்டபம் என்கிறார்கள். இம்மண்டபத்தைக் கட்டியவன் ஒரு தொண்டைமான் என்று அம்மண்டபத்தில் உள்ள கல்வெட்டுக் கூறுகிறது.

இந்த மண்டபம் பிராகாரம் எல்லாம் கடந்தே நெல்லையப்பர் சந்நிதிக்கு வரவேணும். இவர் நெல்லையப்பர் என்று ஏன் பெயர் பெற்றார் என்பதற்கு இரண்டு நல்ல வரலாறுகள் உண்டு. இந்தக் கோயில் இன்றிருக்கும் இடம் அந்த நாளில் ஒரே மூங்கில் காடாக இருந்திருக்கிறது. ராமக்கோன் என்று ஒருவன். அவன் தினசரி தன்னுடைய மாட்டுப்பட்டிக்குச் சென்று பால் கறந்து அந்தப் பால் நிறைந்த குடத்துடன் தன் இல்லத்துக்குத் திரும்புவான். அப்படி வரும்போது ஒவ்வொரு நாளும் ஒரு மூங்கில் புதரண்டை கால் தடுக்கிப் பால் குடம் விழுந்து பால் முழுதும் சிந்தியிருக்கிறது. சில நாள் இப்படி நடக்கவே, மறு நாள் கோடாரியுடன் வந்து அந்த மூங்கில் புதரை வெட்டி அகற்ற முனைந்திருக்கிறான். அப்படி வெட்டும் போது வெளிப்பட்டவரே வேணுவனநாதர். அவரை முழுவதும் கண்ட ராமக்கோன் (ராம பாண்டிய ராஜா என்று அழைக்கப்படுகிறார் பின்பு) வேண்டியபடியே வளர்ந்திருக்கிறார் இவர். இந்த சுயம்புமூர்த்தியை இன்னும், வேண்ட வளர்ந்த நாயகர் என்றே அழைக்கிறார்கள். இவரே கருவறையுள் வெட்டுப்பட்ட தலையோடு இருக்கிறார். கோயிலின் முதல் பிராகாரத்திலே ஒரு பள்ளமான இடத்திலே மூலலிங்கர் வேறே இருக்கிறார்.

இந்த வேணுவனநாதர் எப்படி நெல்வேலி நாதர் ஆனார்? வேத சர்மா என்று ஓர் அர்ச்சகர். கோயில் பூசைக்கு வேண்டிய நெல்லை எடுத்துத் தம் வீட்டின் முற்றத்தில் வெயிலில் உலர்த்திவிட்டு ஆற்றுக்குக் குளிக்கச் சென்றிருக்கிறார். அந்த நேரத்தில் பெருமழை பெய்திருக்கிறது. உலர்த்திய நெல் எல்லாவற்றையும் வெள்ளம் வாரிக்கொண்டு போய்விடுமே என்னும் ஆதங்கத்தோடு அர்ச்சகர் வீடு நோக்கி ஓடி வருகிறார். அர்ச்சகரின் அன்பினையும் ஆதங்கத்தையும் அறிந்த இறைவன், அந்த நெல் காய்ந்த இடத்தில் ஒரு துளி மழையும் விழாமல் காத்திருக்கிறார். அப்படி அவர் வேலிபோல் நின்று காத்ததன் காரணமாக நெல்வேலி நாதன் என்று பெயர் பெறுகிறார். நெல்வயல்கள் ஊரைச் சுற்றி நாலு பக்கங்களும் பரவி நிற்கிறதைப் பார்த்தவர்கள் இந்த ஊருக்கு நெல்வேலி என்ற பெயர் பொருத்தமே என்று ஒப்புக் கொள்வார்கள்.

இத்தலத்துக்கு ஞானசம்பந்தர் வந்து பாடிப் பரவியிருக்கிறார்.

மதுரையைத் தலைநகராகக் கொண்ட அந்த நின்றசீர் நெடு மாறனே இக்கோயில் கட்டினான் என்பது வரலாறு. இவனையே 'நிறைகொண்ட சிந்தையன் நெல்வேலி வென்ற சீர்நெடுமாறன்' என்று சமய குரவரில் ஒருவரான சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் பாடியிருக்கிறார். நெடுமாறனோ முதலில் சமணனாக இருந்து பின்னர் சம்பந்தரால் சைவனாக்கப்பட்டவன் என்பது பிரசித்தம். இவனது காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டு. இவனுக்குப் பின் வந்த பாண்டியர்கள், நாயக்க மன்னர்கள் எல்லாம் கோயிலை உருவாக்கியிருக்கிறார்கள்.

கி.பி. 950 இல் இருந்து அரசாண்ட வீரபாண்டியன் சோழர்களை வென்ற வரலாற்றைக் கூறுகிறது சில கல்வெட்டுக்கள். பதின்மூன்று பதிநான்காம் நூற்றாண்டுகளில் இருந்த மாறவர்மன் சுந்தர பாண்டியன், மாறவர்ம குலசேகர தேவன் முதலியவர்களது சாசனங்கள் பல கிடைக்கின்றன இக்கோயிலில். இக்கல்வெட்டுக்களில் இறைவனைத் திருநெல்வேலி உடையார் என்றும் இறைவியைக் காமக்கோட்டமுடைய நாச்சியார் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. நாயக்க மன்னர்களோ திருநெல்வேலியையே தலைநகராகக் கொண்டு கோயிலைப் புதுப்பிப்பதில், மண்டபங்கள் கட்டுவதில் எல்லாம் மிகுந்த அக்கறை காட்டியிருக்கிறார்கள். இப்படிப் பாண்டியர், நாயக்கர்களோடு, முகம்மதிய பக்தர் ஒருவருமே சேர்ந்து கொள்கிறார். முகம்மது அலியின் தானாதிபதி அன்வர்டிகான் என்பவரது மனைவியின் தீராத நோயைத் தீர்த்திருக்கிறார் இந்த

நெல்லையப்பர். அந்த ஞாபகார்த்தமாக அன்வர்டிகான் ஒரு லிங்கப் பிரதிஷ்டை செய்திருக்கிறான். அன்வர்டிகானால் பிரதிஷ்டை செய்யப்பட்டவர், இன்று நல்ல தமிழில் அனவரத நாதனாகவே விளங்குகிறார் கோயிலின் தென்கிழக்கு மூலையில்.

இந்த நெல்லையப்பர் கோயில், ஐந்து கோபுரங்களோடு விளங்கும் ஒரு பெரிய கோயில். ஊருக்கு நடுவில் 850 அடி நீளமும் 756 அடி அகலமும் கொண்ட ஒரு விரிந்த இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. இறைவன் சந்நிதிக் கோபுரத்தை விட, இறைவி சந்நிதிக் கோபுரமே அழகு வாய்ந்தது. கோயிலுள் இருக்கும் பொற்றாமரைக் கரையில் நின்று பார்த்தால் அதன் காம்பீர்யம் தெரியும். இக்கோயிலின் சிற்பச் சிறப்புக்கள் எல்லாம் பிரசித்தம். நாயக்கர் காலச் சிலா வடிவங்கள் அனந்தம். மகா மண்டபத்திலே வீரபத்திரன், அர்ச்சுனன், கர்ணன் முதலியோர் சந்நிதி வாயிலையே அணி செய்கின்றனர். ஆண்மைக்கு எடுத்துக்காட்டாக வீரபத்திரன் சிலை அமைந்திருக்கிறது. பெண்மைக்கு எடுத்துக்காட்டாகக் குழந்தையை ஏந்தி நிற்கும் தாயொருத்தி ஒரு தூணை அலங்கரிக்கிறாள்.

இக்கோயிலில் உள்ள கற்சிலைகளைவிடச் செப்புச் சிலைகள் மிக மிக அழகானவை. இங்குள்ள நடராஜரும் சிவகாமியும் உருவிலே பெரியவர்கள். ஏன்? திருவிலேயும் பெரியவர்கள்தான். அவர்கள் இருக்குமிடம் பெரிய சபை. கிட்டத்தட்ட ஆறு அடி உயரத்திலே நடராஜர் என்றால் ஐந்து அடி உயரத்திலே சிவகாமி. இருவரும் இருக்க வேண்டியது, தலத்துக்கே சிறப்பான தாமிர சபையில். ஆனால் எடுக்க வைக்க இருக்கும் சிரமம் கருதித் தனிக் கோயிலிலே மூல மூர்த்திகளாகவே இவர்கள் செப்புச் சிலை வடிவில் இருக்கிறார்கள். விரித்த செஞ்சடையோடு ஆடவில்லை இந்த நடராஜர். பாண்டிய மன்னர்கள் வடித்த நடராஜர் சிலாவடிவங்கள் எல்லாவற்றிலுமே கட்டி முடித்த சடைதான். இன்னும் ஓர் அதிசயம் இக்கோயிலிலே. வேணுவனநாதனின் கருவறையை அடுத்த வட பக்கத்திலே நெல்லைக் கோவிந்தர் நன்றாகக் காலை நீட்டிப் படுத்திருக்கிறார். அவர் பக்கத்திலே கரகம் ஏந்திய கையராய் மகாவிஷ்ணு நின்று கொண்டிருக்கிறார். தங்கையை மணம் முடித்துக் கொடுக்கும்போது தாரை வார்த்துக் கொடுக்க வந்த அவசரம் போலும். நல்ல அழகான வடிவம், இந்த நெல்லை கோவிந்தரின் செப்புச்சிலை. இன்னும் ஆறுமுகனுக்கு ஒரு பெரிய சந்நிதி. அவனைச் சுற்றி வந்து ஆறுமுகங்களையுமே கண்டு களிக்க வசதி செய்திருக்கிறார்கள் நிர்வாகிகள்.

புராணப் பிரசித்தியும், சரித்திரப் பிரசித்தியும் உடைய இக்கோயில் நல்ல இலக்கியப் பிரசித்தியும் உடையது. தலபுராணம் ஒன்று இருக்கிறது. அழகிய சொக்கநாதப் பிள்ளை பாடிய காந்தியம்மைப் பிள்ளைத் தமிழ் படிக்கப் படிக்க இன்பம் தருவது. நெல்லை மும்மணிக்கோவை, நெல்லை வருக்கக் கோவை, நெல்லை அந்தாதி என்ற இலக்கியங்கள் பெற்றது. நெல்லையப்பர் கோயிலில், காந்திமதியம்மை சந்நிதி வழியே நுழைந்தோம். திரும்பும்போது அவள் சந்நிதி சென்று வணங்கித் திரும்பலாம்.

**ஏர்கொண்ட நெல்லை நகர் இடம்கொண்டு**
**வலங்கொண்டு அங்கு இறைஞ்சுவோர்கள்**
**சீர்கொண்ட தன் உருவும் பரன் உருவும்**
**அருள் செய்து நாளும்**
**வேர்கொண்டு வளர்ந்தோங்கும்**
**வேய்ஈன்ற முத்தைமிக விரும்பிப்பூணும்**
**வார்கொண்ட களபமுலை வடிவுடைய**
**நாயகிதாள் வணங்கி வாழ்வோம்.**

என்ற பாடலைப் பாடிக்கொண்டே வாழலாம்தானே. அப்படியே வாழ்கிற நான், ஒரு திருநெல்வேலிக்காரன் என்பதில் எப்போதும் கர்வம் கொள்கிறவன் ஆயிற்றே.

## திருக்குற்றாலம்

சென்னை கிறிஸ்தவ கலாசாலையில் அன்று இருந்த பேராசிரியர்களில் பலர் ஸ்காட்லாந்து தேசத்தவர். அந்தக் கல்லூரியில் ஒரு விழா. விழாவுக்கு கல்லூரியின் பழைய மாணவரான ரசிகமணி டி.கே.சியை அழைத்திருந்தார்கள். விழா நடக்கும்போது டி.கே.சியின் பக்கத்தில் ஒரு பேராசிரியர் உட்கார்ந்திருந்தார். இருவரும் அளவளாவிக் கொண்டிருந்தார்கள். பேராசிரியருக்கு இந்தியர்கள், அதிலும் தமிழர்கள் என்றால் என்னவோ ஏளனம். பேச்சோடு பேச்சாகக் கேட்டார் அவர் டி.கே.சியிடம் "நாங்கள் இயற்கையை மிகவும் மதிப்பவர்கள். மரங்கள் என்றால் எங்களுக்கு மிக மிகப் பிரியம். நீங்கள் அப்படி இல்லைதானே" என்று. அதற்கு டி.கே.சி சொன்ன பதில் இதுதான். "மரங்களிடம் எங்களுக்குப் பிரியம் கிடையாது. அதனிடம் நாங்கள் பக்தியே செலுத்துகிறோம். எங்கள் கோயில் எல்லாம் ஒவ்வொரு மரத்தைச் சுற்றியே எழுந்திருக்கிறது. ஏன், மரத்தையே கடவுளாகப் பாவிக்கும் மனப்பக்குவம் பெற்றவர்கள் நாங்கள். நான் இருக்கும் குற்றாலத்திலே கோயிலுள் இருப்பது ஒரு பலாமரம். மரத்தின் இலை,

பலாப்பழம், பழத்துக்கு உள்ளிருக்கும் சுளை, சுளைக்குள்ளிருக்கும் கொட்டை எல்லாவற்றையுமே சிவலிங்க வடிவில், இறைவனது வடிவில் கண்டு மகிழ்கிறவர்கள் நாங்கள்'' என்றெல்லாம் சொன்னார். மேற்கோளாக,

**கிளைகளாய்க் கிளைத்த பல கொப்பு எலாம்**
**சதுர்வேதம், கிளைகள் ஈன்ற**
**களை எலாம் சிவலிங்கம், கனி எலாம்**
**சிவலிங்கம், கனிகள் ஈன்ற**
**சுளை எலாம்சிவலிங்கம் வித்து எலாம்**
**சிவலிங்க சொரூபமாக**
**விளையும் ஒரு குறும்பலாவின் முளைத்து எழுந்த**
**சிவக் கொழுந்தை வேண்டுவோமே.**

என்ற பாடலையும் பாடிக் காட்டியிருக்கிறார். ஆம் மரங்களை விரும்புவதோடு நிற்காமல் அவைகளையே சிவலிங்க சொரூபமாக வழிபடவே தெரிந்தவர்கள் தமிழர். அப்படி வழிபாடு இயற்றுவதற்கு உரிய வகையில் இருப்பதுதான் குறும்பலா. அந்தக் குறும்பலா இருக்கும் தலம்தான் குற்றாலம். அந்தத் திருக்குற்றாலத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

திருக்குற்றாலம் எங்கிருக்கிறது என்று சாரல் கால சமயத்தில் நான் சொல்லித் தெரிய வேண்டியவர்கள் அல்ல நீங்கள். தென்காசிக்கு ஒரு டிக்கெட் வாங்கி அங்கு போய் இறங்கி மேற்கு நோக்கி மூன்று மைல் சென்றால் குற்றாலம் போய்ச் சேரலாம். இப்போதுதான் மதுரையிலிருந்தும், திருநெல்வேலியிலிருந்தும், தூத்துக்குடியிலிருந்தும் எக்ஸ்பிரஸ் பஸ்கள் வேறு விடப்படு கின்றனவே. கோடைக்காலத்தில் உதகை, கோடைக்கானல் என்றெல்லாம் செல்லும் சுகவாசிகளைவிட எண்ணிறந்தோர் ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் குற்றாலம் நோக்கிச் செல்வார்கள். குற்றாலத்தின் பெருமை எல்லாம் அது ஒரு சுகவாசஸ்தலம் என்பதினால் மட்டும் அல்ல. அங்குள்ள அருவியில் நீராடி மகிழலாம் என்பதினால்தான். உலகில் குற்றாலத்தை விடப் பிரும்மாண்டமான, அழகிய நீர்வீழ்ச்சிகள் எத்தனை எத்தனையோ. என்றாலும், இப்படி உல்லாசமாக அருவிக்குள்ளேயே நுழைந்து நீராடும் வசதியுடையது அதிகம் இல்லை. அப்படிக் குளிப்பதற்கு வசதியாய், உடலுக்கும் உள்ளத்துக்குமே ஒரு மகிழ்ச்சி தருவதாய் அருவி அமைந்திருப்பதி னால்தான் இந்தத் தலத்துக்கே ஒரு சிறப்பு. ஆதலால் நாமும் குற்றாலம் சென்றதும் நேரே அருவிக்கரைக்கே சென்றுவிடுவோம்.

பஸ் ஸ்டாண்டிலிருந்து கொஞ்ச தூரம் சென்றதும் சிற்றாறு வரும். அதன்மேல் கட்டியிருக்கும் பாலத்தின் வழியாகக் கோயில் வாயில் வரை சென்று அதன்பின் அருவிக்கரை செல்லலாம். இப்போதெல்லாம் சிற்றாறைக் கடக்காமலேயே நேரேயே அருவிக் கரை செல்ல நல்ல பாதை போட்டிருக்கிறார்கள். நாம் அந்த வழியிலேயே செல்லலாம்.

குற்றாலமலை ஐயாயிரம் அடி உயரமே உள்ள மலை. இம்மலை மூன்று சிகரங்களையுடைய காரணத்தால் திரிகூடமலை என்று வழங்கப்படுகிறது. இச்சிகரங்களில் உயர்ந்தது 5135 அடி உயரமுள்ள பஞ்சந்தாங்கி. இம்மலையில் உள்ள காடுகளுக்குச் 'செண்பகக்காடு' என்று பெயர் உண்டு. மலை முழுவதும் நல்ல மரங்களும் செடிகொடிகளும், வளர்ந்து நிற்கும் மூலிகைகளும் நிறைந்திருக்கின்றன என்பர். இந்த மலையிலிருந்து குதித்துக் குதித்து வருகிறது சிற்றாறு. மிக்க உயரத்தில் இருப்பது தேனருவி. அடுத்தபடியாக, செண்பகதேவி அருவி. அதன்பின்தான் நாம் வந்து சேர்ந்திருக்கும் வட அருவி. இங்குதான் இருநூறு அடி உயரமுள்ள மலையிலிருந்து அருவி குதிக்கிறது. இந்த இருநூறு அடியும் ஒரே வீழ்ச்சியாக இல்லாமல் இடையில் உள்ள பாறைகளில் விழுந்து வருவதால் வேகம் குறைந்து குளிப்பதற்கு ஏற்றவாறு இருக்கிறது. முதலில் இவ்வருவி பொங்குமாங்கடலில் விழுகிறது. அங்கிருந்தே பின்னர் கீழே நீர் வழிகிறது. குளிப்பதற்கு வேண்டிய வசதிகள் எல்லாம் செய்யப்பட்டிருக்கின்றன.

அருவியாடும் அனுபவம் ஓர் அற்புத அனுபவம். அது சொல்லும் தரத்தன்று. ஆகவே அருவியாடி திளைத்து, அதன்பின் கோயில் வாயில் வந்து கோயிலுள் நுழையலாம். அருவிக் கரையிலிருந்து அரை பர்லாங்கு தூரம்தான் கோயில் வாயில். கோயில் வாயிலை ஒரு சிறு கோபுரம் அணி செய்கிறது. கோயிலில் நுழைந்தால் விஸ்தாரமான மண்டபம் இருக்கிறது. முதலில் இதனையே திரிகூட மண்டபம் என்பர். இதனைக் கடந்தே நமஸ்கார மண்டபம், மணிமண்டபம் எல்லாம் செல்லவேணும். இதற்கு அடுத்த கருவறையில்தான் திருக்குற்றாலநாதர் லிங்க வடிவில் இருக்கிறார். இவர் ஆதியில் விஷ்ணுவாக இருந்தவர். பின்னர் அகத்தியரால் சிவலிங்கமாக மாற்றப்பட்டார் என்பது புராணக்கதை.

இறைவன் இட்ட கட்டளைப்படி வடநாடிருந்து அகத்தியர் தென்திசைக்கு வருகிறார். அப்போது இக்குற்றாலநாதர் கோயில் பெருமாள் கோயிலாக இருந்திருக்கிறது. அகத்தியர் சிவனடியார்

கோலத்தில் வந்திருந்தார் என்பதற்காக அவரைக் கோயிலுள் செல்ல அர்ச்சகர் அனுமதிக்கவில்லை. ஆதலால் மனம் உடைந்து அகத்தியர் திரும்பி, சிறிது தொலைவில் உள்ள இலஞ்சி சென்று, அங்குள்ள முருகனை வணங்குகிறார். அந்த முருகன் இந்த அர்ச்சகர்களை வஞ்சனையால் வெல்ல வழி சொல்லிக் கொடுக்கிறான். அவன் சொல்லிக் கொடுத்த வண்ணமே துவாதச நாமம் தரித்து, பரமவைஷ்ணவராக மறுநாள் அகத்தியர் கோயிலுக்கு வருகிறார். அர்ச்சகர்களும் ஏமாந்து உள்ளே அனுமதித்து விடுகிறார்கள். உள்ளே சென்றவர் தாமே விஷ்ணுவுக்குப் பூசை செய்வதாகச் சொல்லி, மற்றவர்களை வெளியே அனுப்பிவிட்டு, கதவைச் சாத்திக் கொண்டு, நின்ற கோலத்தில் இருந்த பெருமாளை தலையில் கைவைத்து ஓர் அமுக்கு அமுக்கி, 'குறுகிக் குறுகுக' எனக் கைலாய நாதனை நினைக்கிறார், அப்படியே அவரும் குறுகிக் குற்றாலநாதர் ஆகிவிடுகிறார். அகத்தியரால் இப்படி மாற்றப் பெற்ற இறைவனை அகஸ்தியரே பாடித் துதிக்கிறார். பாட்டு இதுதான்.

**முத்தனே முளரிக் கண்ணா!**
**மூலம் என்று அழைத்த வேழப்**
**பத்தியின் எல்லை காக்கும்**
**பகவனே! திகிரியாளா!**
**சுத்தனே! அருள்சூல் கொண்ட**
**சுந்தரக் கதுப்பினானே!**
**நத்தணி செவிய கோல**
**நாடுதற்கரிய நம்பி!**

இந்தப் பாட்டைப் படித்தால் இதில் உள்ள துதி விஷ்ணுவுக்கும், சிவனுக்கும் பொருத்தமாயிருப்பதைப் பார்க்கலாம். இப்படிப் பாடிக்கொண்டு வந்ததினாலேதான் வைஷ்ணவ அர்ச்சகர்கள் ஏமாந்திருக்கிறார்கள். இப்படி ஆதியில், விஷ்ணுவாகவும், பின்னர் சிவனாகவும் மாறிய இறைவனே திருக்குற்றால நாதன். நாமும் இரண்டு பெருமான்களையும் நினைத்தே வணங்கித் திரும்பலாம். குற்றால நாதருக்கு வலப்பக்கத்தில் தனிக்கோயிலில் குழல்வாய் மொழி அம்மை கோயில் கொண்டிருக்கிறாள். நின்ற கோலத்தில் அங்கிருந்து காட்சி தருகிறாள். அம்மையின் கோயிலுக்குத் தென்புறத்தில்தான் தலவிருட்சமான குறும்பலா. நான்கு வேதங்களுமே தவம் செய்து இப்படிப் புலாமரம் ஆயிற்று என்பர். இப்பலா மரத்தடியிலே ஒரு லிங்கம். இம்மரத்தில் பழுக்கிற பலாப்பழத்தை எவரும் பறிப்பதில்லை. குற்றாலத்திலே உள்ள குரங்குகளே கீறித் தின்னும் என்பர். இவ்விரு கோயில்களையும்

சுற்றியுள்ள மேலப் பிராகாரத்திலேதான் நன்னகரப் பெருமாள், நெல்லையப்பர், மணக்கோலநாதர், நாறும்பூநாதர் முதலியோர் கோயில் கொண்டிருக்கின்றனர்.

குற்றாலத்தில் இறைவன், குற்றாலம், கோவிதாஸ், சமருகம் என்ற பெயருடைய ஆத்தி மர நிழலிலே எழுந்தருளியிருத்தலால் அம்மரத்தின் பெயரே தலத்தின் பெயர் ஆயிற்று என்பர். கு என்றால் பூமியாகிய பிறவிப் பிணி, தாலம் என்றால் தீர்ப்பது. ஆகவே பிறவிப்பிணி தீர்க்கும் தலம் ஆனதால் குத்தாலம் ஆகி குற்றாலம் என்று திரிந்தது என்றும் கூறுவர். ஆதி சக்தி மூவரைப் பயந்த தலமாதலால் இத்தலத்துக்குத் திரிகூடம் என்ற பெயர் வந்தது என்றும் தலபுராணம் கூறும். அதற்கேற்பவே, கோயிலுள் வடப்பக்கத்தில் பராசக்திக்கு ஒரு சிறு கோயில் இருக்கிறது. இங்கே பராசக்தி யோகத்தில் இருப்பதால் இதனை யோகபீடம் என்றும், உலகம் எல்லாம் தோன்றுவதற்கு மூலமாயிருத்தலால் தரணி பீடம் என்றும் அழைக்கப்படுகிறது. இப்பராசக்தியே அரி, அயன், அரன் என்னும் மூவரையும் ஒவ்வொரு கர்ப்பத்தில் பயந்தாள் என்பதைக் குறிக்கத் தாணு மாலயன் பூந்தொட்டில் இச்சந்நிதியில் ஆடிக் கொண்டிருக்கிறது.

இத்தலத்துக்கு ஞானசம்பந்தர் வந்திருக்கிறார். குற்றாலத்துக்கு ஒரு பதிகமும், குறும்பலாவுக்கு ஒரு பதிகமும் பாடியிருக்கிறார்.

**வம்பார் குன்றும் நீடு உயர்**<br>
**சாரல் வளர் வேங்கை**<br>
**கொம்பார் சோலைக் கோல வண்டு**<br>
**யாழ் செய் குற்றாலம்**

என்றும்

**மலையார் சாரல் மகவுடன்**<br>
**வந்த மடமந்தி**<br>
**குலையார் வாழைத் தீங்கனி**<br>
**மாந்தும் குற்றாலம்**

என்றும் குற்றாலத்தைப் பாடிப் பரவியவர்

**அரவின் அணையானும் நான்முகனும்**<br>
**காண்பரிய அண்ணல் சென்னி**<br>
**விரவிமதி அணிந்த விகிர்தருக்கு**<br>
**இடம்போலும் விரிபூஞ் சாரல்**

**மரவம் இருக்கையும் மல்லிகையும்**
**சண்பகமும் மலர்ந்து மாந்தக்**
**குரவமுறுவல் செய்யும் குன்றிடம்**
**சூழ்தண் சாரல் குறும்பலாவே.**

என்று குறும்பலாவையும் பாடியிருக்கிறார். நாவுக்கரசர், குற்றாலத்துறை கூத்தன் அல்லால் நமக்கு உற்றார் யாருளர்? என்றே கேட்கிறார்.

மணிவாசகரோ,

**உற்றாரை யான் வேண்டேன்**
**ஊர்வேண்டேன் பேர் வேண்டேன்**
**கற்றாரை யான் வேண்டேன்**
**கற்பனவும் இனியமையும்**
**குற்றாலத்தமர்ந்து உறையும்**
**கூத்தா உன்குரை கழற்கே**
**கற்றாவின் மனம் போலக்**
**கசிந்துருக வேண்டுவனே**

என்ற கசிந்து கசிந்து பாடியிருக்கிறார். கபிலரும் பட்டினத்தடிகளும் குற்றாலத்தானை நினைந்து பாடிய பாடல்களும் உண்டு.

இத்தலத்தில் நிறைய கல்வெட்டுக்கள் உண்டு. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் சோழ நாட்டை ஆண்ட பரகேசிவர்மன் என்னும் முதல் பராந்தகன் காலத்தில் பாண்டிய நாடு சோழ நாட்டுடன் இணைந்திருக்கிறது. இன்னும் மாறவர்மன் சுந்தரபாண்டியன், மாறவர்மன் விக்கிரம பாண்டியன் முதலிய மன்னர்கள் காலத்தில் ஏற்படுத்திய நிபந்தங்களையெல்லாம் குறிக்கும் கல்வெட்டுகள் உண்டு. ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் பல திருப்பணிகள் செய்திருக்கிறான். இப்படிச் சோழரும் பாண்டியருமாகக் கட்டிய கோயிலை, சொக்கம்பட்டி குறுநில மன்னர்களும் விரிவுபடுத்திப் பல திருப்பணிகள் செய்திருக்கிறார்கள். குழல்வாய் மொழி அம்மை கோயிலைத் தேவகோட்டை காசி விசுவநாதன் செட்டியார் குடும்பத்தினர் திருப்பணி செய்திருக்கின்றனர். கோயிலில் திருப்பணி வேலைகளை இப்போதும் செவ்வனே செய்து வருகின்றனர்.

இக்கோயிலை விட்டு வெளியே வந்ததும் நேரே ஊர் திரும்ப முடியாது. கோயிலுக்கு வடபுறம்தான் இத்தலத்தில் பிரசித்தி பெற்ற

சித்திர சபை இருக்கிறது. அம்பலக் கூத்தன் ஐந்து திருச்சபையில் அவன் கூத்தை ஆடியிருக்கிறான். திருவாலங்காட்டில் ரத்ன சபையிலும், சிதம்பரத்தில் பொன்னம்பலத்திலும், மதுரையில் வெள்ளியம்பலத்திலும், திருநெல்வேலியில் தாமிர சபையிலும் ஆடிய பெருமான் இத்தலத்தில் சித்திர சபையில் நின்று நிருத்தம் ஆடியிருக்கிறார். ஐந்தருவிக்குச் செல்லும் ரோட்டில், ரசிகமணி டி.கே.சி நினைவு இல்லத்துக்குக் கீழ்ப்புறமாகச் செல்லும் பாதையில் சென்றால் சித்திர சபை சென்று சேரலாம். இச்சபையே தெப்பக்குளத்துடன் கூடிய ஒரு பெரிய கோயில். கோயில் முழுதும் சித்திரங்களால் நிறைந்திருக்கின்றன. பெருமானும் இங்கே சித்திர உருவிலேயே அமைந்து ஆடும் காட்சி தருகிறார். ஆதலால் சித்திர சபையைக் காணாது திரும்பினால் திருக்குற்றாலத்தைப் பூரணமாகக் கண்டதாகக் கூறமுடியாது.

குற்றாலநாதர், குழல்வாய் மொழி, குற்றாலத்துக் கூத்தர் எல்லோரையும் பார்த்தபின் அவகாசமிருந்தால் வடக்கே ஒன்றரை மைல் தூரத்தில் உள்ள இலஞ்சிக் குமரனையும் காணலாம். இன்னும் நாலு மைல்கள் வடக்கே சென்று திருமலை சென்று மலை ஏறி அங்கே கோயில் கொண்டிருக்கும் முருகனையும் வணங்கலாம்.

குற்றாலம் செல்லும் இலக்கிய ரசிகர்கள், கையோட கையாகக் குற்றாலக் குறவஞ்சியை எடுத்துப் போக மறக்க வேண்டாம். அத்தலத்தில் இருந்து கொண்டு,

**வானரங்கள் கனிகொடுத்து**
**மந்தியோடு கொஞ்சும்**
**மந்திசிந்து கனிகளுக்கு**
**வான்கவிகள் கெஞ்சும்**
**தேனருவித் திரை எழும்பி**
**வானின் வழி ஒழுகும்**
**செங்கதிரோன் பரிக்காலும்**
**தேர்க்காலும் வழுகும்**

என்றெல்லாம் பாடல்களைப் படித்துப் பாருங்களேன். ஒரு புதிய உலகமே உங்கள் கண்முன் வராதா என்ன?

### செந்தில் ஆண்டவன்

ஒரு கவிஞன் தமிழ்க் கடவுள் முருகனிடத்து அளவுகடந்த பக்தி உடையவனாக வாழ்கிறான். முருகன் என்றால் அழகன்,

இளைஞன் என்பதை அறிகிறான். ஆம், 'என்றும் இளையாய் அழகியாய்' என்றெல்லாம் பாடிய கவிஞர் பரம்பரையில் வந்தவனல்லவா? கவிஞன் என்றால்தான் அவனோடு வறுமையும் உடன் பிறந்து வளருமே. வறுமையால் நலிகின்றான். வீட்டிலோ மனைவி மக்கள் எல்லாம் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, வாடுகிறார்கள். இந்த வறுமையையெல்லாம் துடைக்க அந்தக் கலியுக வரதன் முருகனிடம் முறையிடச் சொல்லி அவன் மனைவி வேண்டுகிறாள். 'தேவர் துயரையெல்லாம் துடைத்தவனுக்கு உங்கள் துயர் துடைப்பதுதானா பிரமாதம்?' என்றெல்லாம் கேட்கிறாள். ஆனால் கவிஞனோ மெத்தப் படித்தவன். இந்த முருகனோ சின்னஞ்சிறு பிள்ளைதானே. அன்னை மடிமீதிருந்து இந்த இளவயதில் அன்னை அமுதூட்டினால் தானே உணவருந்தத் தெரியும், அவனோ தாய்க்கு அருமையான பிள்ளை. அதனால் அவளோ அவன் கண்ணுக்கு மையிட்டு, நெற்றிக்குப் பொட்டிட்டு, அடிக்கடி எடுத் தணைத்து முத்தம் கொடுத்துக் கொண்டிருப்பாள். இப்படியெல்லாம் தாயோடு விளையாடும் இந்த வயதில், பக்தர்கள் துயரையெல்லாம் அவன் அறிதல் சாத்தியமா? இல்லை, நாமே சென்று சொன்னாலும் அதைத் துடைக்கும் ஆற்றல்தான் இருக்குமா? பிள்ளைக் கொஞ்சம் வளர்ந்து பெரியவனாகட்டும், நல்ல கட்டிளங்காளையாக, வீர புருஷனாக வளர்ந்த பின்னால் அன்றோ அவனால் தன் துயர் துடைத்தல் கூடும் என்றெல்லாம் எண்ணி எண்ணி, முருகனிடம் விண்ணப்பம் செய்வதை ஒத்திப்போட்டுக் கொண்டு வருகிறான் ஒன்றிரண்டு வருஷங்களாக. ஆனால் ஒருநாள் அவனது நண்பர் ஒருவர், திருச்செந்தூர் செல்பவர், அவனையும் உடன் கூட்டிச் செல்கிறார். அங்கே முருகன் கோயில் கொண்டிருக்கிறான் என்பது தெரிந்தவன்தான் அவன். ஆகவே நண்பருடன் கடற்கரையிலே உள்ள அந்த முருகன் கோயிலுக்கு செல்கிறான்.

அலை வந்து மோதும் அத்திருச் சீரலை வாயிலின் கோயிலைச் சுற்றி வந்து தென் பக்கத்திலுள்ள சண்முக விலாசத்தைக் கடந்து கோயிலுக்குள் நுழைகிறான். அத்தனை நேரமும் கூனிக் குறுகி நடந்த கவிஞன் நிமிர்ந்து நோக்குகிறான். அப்போது அவனுக்கு நேர் எதிரே சண்முகன் காட்சி கொடுக்கிறான். அங்கே செப்புச் சிலை வடிவில் நிற்கும் சண்முகன் பாலனும் அல்ல. பால சந்நியாசியும் அல்ல. ஓராறு முகங்களும், ஈராறு கரங்களும் கொண்ட சண்முக நாதனே வேலேந்திய கையுடன் வீறுடன் நிற்கிறான். ஒரே தங்க மயமான பொன்னாடை புனைந்து ரத்ன சகிதமான அணிகளையும் அணிந்து நிற்கிறான். தலையில் அணிந்திருக்கும் கிரீடம் ஒன்றே

ஒரு லட்சம் ரூபாய் பெறும். கையில் ஏந்தியிருக்கும் வைர வேலோ எளிதாக இரண்டு லட்சம் ரூபாய் பெறும். ஆளுக்கே கொடுக்கலாம் ஐந்து லட்சத்துக்கு ஜாமீன். அத்தனை சௌகரியத்துடன் செல்வந்தனாகக் கம்பீரமாக நிற்கிறான். இவ்வளவுதானா? இந்த அழகனுக்கோ ஒன்றுக்கு இரண்டு மனைவியர். அழகனுக்கு ஏற்ற அழகிகளாக, அன்னம் போலவும் மயில் போலவும் விளங்குகிறார்கள். வஞ்சனை இல்லாமல் மனைவியர் இருவருக்கும் அழகான ஆடைகளையும் அளவற்ற ஆபரணாதிகளையும் அணிவித்து, அழகு செய்திருக்கிறான்.

இதையெல்லாம் பார்த்த கவிஞனுக்கோ ஒரே கோபம். இன்னுமா இவன் சின்னப் பிள்ளை? என் குறைகளையெல்லாம் நான் முறையிடாமலேயே அறிந்துகொள்ளும் வயது இல்லையா? இல்லை, ஆற்றல்தான் இல்லையா? ஏன் இவன் நம் துயர் துடைத்திருக்கக் கூடாது? என்றெல்லாம் குமுறுகிறான். குமுறல் எல்லாம் ஒரு பாட்டாகவே வெளிவருகிறது.

**முன்னம் நின் அன்னை அமுதூட்டி**
**மையிட்டு முத்தமிட்டுக்**
**கன்னமும் கிள்ளிய நாளல்லவே,**
**என்னைக் காத்தளிக்க**
**அன்னமும் மஞ்ஞையும் போல் இரு**
**பெண்கொண்ட ஆண்பிள்ளை நீ**
**இன்னமும் சின்னவன் தானோ**
**செந்தூரில் இருப்பவனே**

என்பதுதான் பாட்டு. "அன்னமும் மஞ்ஞையும் போல் இரு" "பெண் கொண்ட ஆண்பிள்ளை அல்லவோ நீ" என்று ஆங்காரத் துடனேயே கேட்கிறான் ஆறுமுகனை. இன்மும் சின்னவன்தானோ என்று முடிக்கும்போது கவிஞனின் ஆத்திரம் அளவுகடந்தே போய் விடுகிறது. இப்படிப் படிக்காசுப் புலவன் நேருக்கு நேரே சண்முகனைக் கேட்ட தலம்தான் திருச்செந்தூர் என்னும் திருச்சீரலைவாய். அந்தத் திருச்செந்தூருக்கே செல்கிறோம் நாம் இன்று.

திருச்செந்தூர் திருநெல்வேலி ஜில்லாவில் திருநெல்வேலிக்குக் கிழக்கே முப்பத்தைந்து மைல் தொலைவில் இருக்கிறது. கடற்கரை ஆண்டியான செந்தில் ஆண்டவனைத் தரிசிப்பதற்குமுன் கடலாடிவிட வேண்டும் என்பர். கோயிலின் தென்புறத்தில் நல்ல வசதியாகக் கடலில் இறங்கி ஒரு முழுக்குப்போடலாம். அந்த முழுக்கால் உடலில் ஏறியுள்ள உப்பை, இன்னும் கொஞ்சம் தெற்கே நடந்து அங்குள்ள

நாழிக் கிணற்றில் ஆம், நல்ல தண்ணீர் கிணற்றில்தான் குளித்துக் கழுவிக் கொள்ளலாம். திரும்பித் தென்பக்கம் வாயிலுக்கு வந்து சண்முக விலாசத்துக்குள் நுழைந்து கோயிலுள் செல்லலாம். முக்காணியர் என்ற அர்ச்சகர்கள் உங்களை முதலில் சுப்பிரமணியன் சந்நிதிக்கே அழைத்துச் செல்வர். அவன்தானே அங்குள்ள மூலமூர்த்தி. இந்தத் திருச்செந்தூர்தான் நக்கீரரது திருமுருகாற்றுப்படையில் கூறப்பட்ட ஆறுபடை வீடுகளில் இரண்டாவது படை வீடு. மிகவும் பழமையான தலம் அல்லவா? பழைய சங்க இலக்கியமான புறநானூற்றிலேயே,

**வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்**
**நெடுவேள் நிலை இய காமர் வியன்துறை**

என்று குறிப்பிடப்பட்ட பதி. 'சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன்' என்றே முருகன் சிலப்பதிகாரத்தில பாடப்பட்டிருக்கிறானே. இங்குள்ள பாலசுப்பிரமணியன் பெருமையெல்லாம் அவன் சூரசம்ஹாரம் செய்து தேவர் இடுக்கண் தீர்த்ததுான். ஆதலால் அந்த வரலாற்றை முதலில் தெரிந்து கொள்ளலாம்.

சூரபதுமன், சிங்கமுகன், பானுகோபன் என்ற அசுரர்கள் தேவர்களுக்கெல்லாம் இடுக்கண் செய்கிறார்கள். அதனால் தேவர்கள் எல்லாம் சென்று சிவபெருமானிடம் முறையிடுகிறார்கள். அவரும், அவர்கள் துன்பத்தைத் தீர்க்க ஒரு குமாரனைத் தருவதாக வாக்களிக்கிறார். அதன்படியே தன்னுடைய ஐந்து திருமுகங்களோடு ஆறாவது முகமும் கொள்கிறார். ஆறு திருமுகத்தில் உள்ள ஆறு நெற்றிக் கண்களிலிருந்தும் ஆறு பொறிகள் கிளம்புகின்றன. அந்தப் பொறிகளை வாயு ஏந்திச்சென்று, அக்னியிடம் கொடுக்க அக்னியும் அந்தப் பொறிகளது வெம்மையைத் தாங்காது கங்கையிலே விட்டு விடுகிறான். கங்கை அந்தப் பொறிகளை சரவணப் பொய்கையில் கொண்டு சேர்க்கிறாள். அங்கு ஆறு பொறிகளும் ஆறு திருக் குழந்தைகளாக மாறுகின்றன. இப்படித்தான் வைகாசி மாதத்தில் விசாக நாளில் விசாகன் பிறக்கிறான்.

இந்த ஆறு குழந்தைகளையும் கார்த்திகைப் பெண்கள் அறுவர் பாலூட்டி வளர்க்கின்றார்கள். இந்தக் கார்த்திகேயனைப் பார்க்கச் சிவபெருமான் உமையம்மையோடு சரவணப் பொய்கைக்கு வருகிறார். அங்கு அம்மை குழந்தைகள் அறுவரையும் சேர்த்து ஆறுமுகத்தோடு கூடிய ஒரே பிள்ளையாக மாறுகிறார்கள். அவனே கந்தன் எனப் பெயர் பெறுகிறான். ஆறுமுகன் என்றே எல்லோராலும் அழைக்கப்

படுகிறான். இவன் வளர்கிறபோதே சூரபதுமனது கொடுமைகள் அதிகம் ஆகின்றன. உடனே தந்தையின் வாக்கைப் பரிபாலிக்க நவ வீரர்களை உடன் அழைத்துக் கொண்டு போருக்குப் புறப்படுகிறான். அன்னையும் பாலகனுக்கு நல்லதொரு வேல் கொடுத்து அனுப்புகிறாள்.

இந்தப் படையெடுப்பில் முதலில் இலக்கு ஆனவர்கள் தாராகாசுரனும் கிரௌஞ்சமலையும்தான். மண்ணியாற்றங்கரையில் உள்ள சேய்ஞ்ஞலூரில் சிவபிரானை வணங்கி, சூரபதுமன் இருக்கும் விரமகேந்திரத் தீவை நோக்கி வருகிறான். திருச்செந்தூரில் முகாம் செய்துகொண்டு வீரபாகுவைத் தூதனுப்புகிறான். சூரபதுமன் சமாதானத்துக்கு இணங்கவில்லை. அவனும் போருக்குப் புறப்படுகிறான். குமரனும் குமறி எழுந்து தன்னை எதிர்த்த வீரர்களையும், சிங்கமுகாசுரனையும் கொன்று குவிக்கிறான். ஆறு நாட்கள் நடக்கிறது போர். கடைசியில் போர் சூரபதுமனுக்கும் முருகனுக்குமே நேருக்கு நேர் ஏற்படுகிறது. அந்தப் போரில் அன்னை தந்த வேலைப் பிரயோகித்து சூரனைச் சம்ஹாரம் செய்கிறான். திருச்செந்தூர் உற்சவங்களில் சிறப்பான உற்சவம் கந்தசஷ்டி உற்சவம்தான். வேற்படையால் இரு கூறாகிறான் சூரபதுமன். மயிலாகி வந்த கூறைத் தன் வாகனமாகவும் சேவலாகி வந்த கூறைத் தன் கொடியாகவும் அமைத்துக்கொள்கிறான் முருகன். இப்படி சூரபதுமனைத் தன் வாகனமாகவும் கொடியாகவும் அமைத்துக் கொண்டு தன்னுடைய உண்மையான உருவத்தைக் காட்டுகிறான் கார்த்திகேயன். அந்த விசுவரூப தரிசனம் கண்ட சூரபதுமனோ

**கோலமா மஞ்ஞை தன்னில்**
**குலவிய குமரன் தன்னைப்**
**பாலன் என்றிருந்தேன் அந்நாள்**
**பரிசு இவை உணர்ந்திலேன் யான்**
**மால் அயன் தனக்கும், ஏனை**
**வானவர் தமக்கும், யார்க்கும்**
**மூல காரணமாய் நின்ற**
**மூர்த்தி இம் மூர்த்தி அன்றோ.**

என்று துதிக்கிறான். இந்த மூர்த்திதான் திருச்செந்தூரில் செந்தில் ஆண்டவனாக எழுந்தருளியிருக்கிறான். நல்ல அழகொழுகும் வடிவம். விபூதி அபிஷேகம் செய்ய கோயில் நிர்வாகிகள் மூன்று ரூபாய்தான் கட்டணம் விதிக்கிறார்கள். விபூதிக் காப்பிட்டுக் கண் குளிரக் கண்டால் நம் வினைகளெல்லாம் எளிதாகவே தீரும். உள்ளத்திலும் ஒரு சாந்தி பிறக்கும், இந்த ஆண்டவனை, பால

சுப்பிரமணியனைத் தரிசித்துவிட்டு வெளியே வந்து வடக்கு நோக்கித் திரும்பினால் அங்கு சண்முகன் நின்று கொண்டிருப்பார் அன்று படிக்காசுப் புலவர் கண்ட கோலத்திலேயே. ஆம், அன்னமும் மஞ்ஞையும் போல் இரு பெண்களுடன் நிற்கும் ஆண் அழகனையே காணலாம். அவனையும் வணங்கிவிட்டு அவன் பிராகாரத்தை ஒரு சுற்று சுற்றி, துவஜஸ்தம்ப மண்டபத்துக்கு வந்து அந்தப் பிராகாரத்தையும் சுற்றலாம். அங்குதான் மேலப் பிராகாரத்தின் இரு கோடியிலும் வள்ளியும் தெய்வயானையும் தனித்தனிக் கோயிலில் இருப்பர். இதற்கடுத்த பெரிய பிராகாரத்திலே சூரசம்ஹாரக் காட்சி சிலை வடிவில் (உப்புச உருவில்) அர்த்த சித்திரமாக இருக்கும். இந்தக்கோயிலின் வடக்குப் பிரகாரத்திலே வேங்கடவன் கொலு வீற்றிருக்கிறான். அங்கு மணல் மேட்டைக் குடைந்து அமைத்த அனந்தசயனனையும் கஜலட்சுமியையும் தரிசிக்கலாம்.

இக்கோயிலில் உள்ள ஆறுமுகனைப் பற்றிய ரசமான வரலாறு ஒன்று உண்டு. *1648* ஆம் வருஷம் மேல்நாட்டிலிருந்து வந்த டச்சு வர்த்தகர்கள் இங்கு வந்மு தங்கியிருக்கிறார்கள். அவர்கள் பொன் வண்ணத்தில் இருக்கும் ஆறுமுகனைக் கண்டு களித்திருக்கிறார்கள். அந்த மூர்த்தியை எடுத்துச் சென்றால் அத்தனை பொன்னும் தங்களுக்கு உதவுமே என்று கருதி, அந்த மூர்த்தியைக் களவாடிக் கப்பலில் ஏற்றிச் சென்றிருக்கிறார்கள். ஆனால் ஆறுமுகனோ அவர்களுடன் நெடுந்தூரம் செல்ல விரும்பவில்லை. ஒரு புயலைக் கிளப்பியிருக்கிறான். கொந்தளிக்கும் கடலிலே டச்சுக்காரர் கப்பல் ஆடியிருக்கிறது. இனியும் ஆறுமுகனைத் தங்கள் கப்பலில் வைத்திருத்தல் தகாது என நினைத்து அவனை அலக்காய்த் தூக்கிக் கடலிலேயே எறிந்திருக்கிறார்கள்.

கோயிலில் இருந்த ஆறுமுகன் காணாமல் போன செய்தியை நாயக்க மன்னரின் பிரதிநிதியான வடமலையப்ப பிள்ளையன் அறிந்திருக்கிறார் வருந்தியிருக்கிறார். பஞ்சலோகத்தில் இன்னொரு ஆறுமுகனை வார்த்தெடுத்து நிறுத்த முனைந்திருக்கிறார். ஆனால் கடலுள் கிடந்த ஆறுமுகனே அவரது கனவில் தோன்றி, தான் இருக்கும் இடத்தை அறிவித்திருக்கிறான். அவன் தெரிவித்தபடியே அவர்கள் கடலில் ஆறு காத தூரம் சென்றதும் அங்கு ஓர் எலுமிச்சம் பழம் மிதந்து கொண்டிருக்கிறது. அந்த இடத்தில் கருடன் வேறே வட்டமிட்டுக் கொண்டிருக்கிறான். அங்கு மூழ்கிப் பார்த்ததில், கடலின் அடித்தளத்தில் டச்சுக்காரர்கள் களவாடிய ஆறுமுகமனானவன் இருந்திருக்கிறான். இதனை எடுத்துவந்து ஒரு நல்ல மண்டபம் கட்டி

அதில் இருத்தியிருக்கிறார் வடமலையப்பர். அதனாலேயே இன்னும் ஆறுமுகவன் கோயில் கொண்டிருக்கும் மண்டபம் வடமலையப்பன் மண்டபம் என்று வழங்கப்படுகிறது.

இது ஏதோ கற்பனை கதை அல்ல. 1785 இல் பெர்லின் நகரிலிருந்து எம். ரென்னல் எழுதிய சரித்திர இந்தியா என்ற புத்தகத்தில் இத்தகவலைத் தாம் ஒரு டச்சு மாலுமியிடமிருந்து தெரிந்து கொண்டதாக அவர் எழுதியிருக்கிறார். 1648 இல் இது நடந்தது என்று உறுதியாகக் கூறியிருக்கிறார். 1648 இல் கடலுள் சென்ற ஆண்டவன் 1653 இல் தான் வடமலையப்ப பிள்ளையின் மூலம் வெளிவந்திருக்கிறான். அன்றிலிருந்து அவன் புகழ் பிரசித்தி பெற்றிருக்கிறது. இந்தச் செந்தில் ஆண்டவனிடத்திலே பாஞ்சாலங் குறிச்சி பாளையக்காரரான கட்டபொம்மன் மிகுந்த பக்தி சிரத்தையோடு வாழ்ந்திருக்கிறான். திருநெல்வேலியில் கலெக்டராக இருந்த லஷிங்டன் என்ற துரை மகனும் இந்த ஆண்டவனிடம் ஈடுபட்டு 1803 இல் பல வெள்ளிப் பாத்திரங்களைக் காணிக்கையாகக் கொடுத்திருக்கின்றார்.

இக்கோயில் கட்டியிருக்கும் இடம் ஆதியில் கந்தமாதன பர்வதம் என்ற மணல் குன்றாக இருந்திருக்கிறது. தேவர்கள் வேண்டிய படி தேவதச்சனான மயனே முதலில் கோயில் கட்டினான் என்பது வரலாறு. மயன் கட்டிய கோயில் நாளும் விரிவடைந்திருக்கிறது. பாண்டிய மன்னர்களும் சேர மன்னர்களும் இக்கோயில் கட்டுவதில் முனைந்திருக்கிறார்கள். வரகுணமாறன், மாறவர்மன், விக்கிரம பாண்டியன் முதலியோர் கோயிலுக்கு வேண்டிய நிபந்தங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இவை பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஏற்பட்டிருக்கின்றன. கிபி 1729 முதல் 1758 வரை திருவிதாங்கூரை ஆண்ட மாத்தாண்டவர்ம மகாராஜா இக்கோயிலில் உதய மாத்தாண்டக் கட்டளையை ஏற்படுத்தியிருக்கிறார்.

இந்த இருபதாம் நூற்றாண்டிலும் மௌனசுவாமி என்பவர் கோயில் திருப்பணியை மேற்கொண்டிருக்கிறார். அவருக்குப் பின் திருப்பணியைத் தொடர்ந்து நடத்தியவர் வள்ளிநாயக சுவாமிகள். இன்று விரிவடைந்திருக்கும் கற்கோயில் ராஜகோபுரம், பிராகாரங்கள் எல்லாம் இவர்களது திருப்பணி வேலைகளே. முருகன் கோயில்களில் எல்லாம் சிறப்பான கோயிலாக இருப்பது இந்தச் செந்திலாண்டவன் கோயிலே.

# கலா மண்டபம்
## ஒரு விமர்சனம்

"உள்ளே என்ன இருக்கிறது?"

"ஒன்றுமில்லே, வெறும் படங்கள்தான் இருக்கிறது" என்று இரண்டு பேர் பேசிக் கொள்கிறார்கள். சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியார் அகில இந்திய சுதேசிப் பொருட் காட்சி ஒன்றை நடத்துகிறார்கள். அந்தக் காட்சி சாலையின் ஒரு பகுதியில் உள்ள கலா மண்டபத்தின் வாசலில்தான் இந்தப் பேச்சு நடந்தது. கேள்வி கேட்டவர் கலா மண்டபத்துக்குள் போக விரும்பியவர். பதில் சொன்னவர் கலா மண்டபத்திலுள்ள கலைப் பொருள்களைப் பார்த்து விட்டு வெளியே வருபவர். உண்மையிலே அங்கே வெறும் படங்கள்தானா வைத்திருக்கிறது? இதைப் பார்க்கத்தானா தினசரி பதினாயிரக் கணக்கான மக்கள் உள்ளே போய் வருகிறார்கள்? இப்படி வெறும் படங்களை வைத்துக் காட்சி நடத்துவதற்குத்தானா இதன் நிர்வாகிகள் இத்தனை சிரமம் எடுத்துக் கொள்கிறார்கள்? என்றெல்லாம் எண்ணங்கள் எழுவது இயற்கை. நல்ல கலா ரசிகர்கள் நமது கண்களுக்கு அளிக்கும் ஒரு விருந்தல்லவா அங்கே தயாராகியிருக்கிறது? அருங்கலைகளில் சிறப்பாக உள்ள சித்திரம் சிற்பம் இரண்டும் அக்கலாமண்டபத்திலே கோயில் கொண்டிருக்க, அதைத்தானா வெறும் படங்கள் என்று விமரிசனம் செய்துவிட்டார் சென்று திரும்பிய நண்பர்?

ஆனால் இவருடைய கூற்றிலும் ஒரு உண்மை புதைந்து கிடக்கத்தான் செய்கிறது. சித்திரத்தையும் சிற்பத்தையும் அனுபவிக்க நாம் நமது தமிழ் மக்களைப் பழக்கியா வைத்திருக்கிறோம்? ஏதோ ஒன்றிரண்டு பேர் கலை நுணுக்கங்களை அறிந்துகொண்டு "ஆ! ஓ!" என்று சொல்லிவிட்டால் போதுமா? சாதாரண மக்கள் ஆண்களும் பெண்களுமே கலைப் பொருள்களைக் கண்டு அதன் ரசனையை அறிந்து, உணர்ந்து, அனுபவிக்க அவர்களைத் தயாராக்க வேண்டாமா?

"கலை என்றால் என்ன?" இந்தக் கேள்விக்கு விடை சொல்லி விடுவது அவ்வளவு எளிதல்லதான். அழகு நிறைந்திருப்பதெல்லாம் கலை என்பார் ஒருவர். இல்லை மனிதனது அழகுணர்ச்சியைத் தூண்டி அவனுக்கு ஒரு ஆனந்தத்தைக் கொடுப்பதுதான் கலை என்பார் மற்றொருவர். இந்தக் கூற்றுக்களில் கொஞ்சம் உண்மை இருந்தாலும் அவை கலை என்றால் என்ன என்பதைப் பூர்ணமாக விளக்க உதவவில்லை. மாலைச் சூரியன் மயங்கும் அந்தி தரு சித்திரம், நறுமணத்தை அள்ளி வீசும் வண்ணமலர், அழகே உருவெடுத்த பெண், இன்னும் இவைபோன்ற பலவும் மனிதனது அழகுணர்ச்சியைத் தூண்டத்தான் செய்கின்றன. அவனுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கத்தான் செய்கின்றன. என்றாலும் இவையெல்லாம் இனிய கலைப் பொருளாகிவிடுமா என்ன? இதே பொருள்களைப் பார்க்கின்றார்கள் பலர். அதில் ஒரு சிலர் இவைகளி லிருந்து ஒரு அனுபவத்தைப் பெறுகிறார்கள். அப்படி அவர்கள் அடைந்த அனுபவத்தைப் பிறருக்கு எடுத்துக்காட்ட முயற்சிக் கிறார்கள். அதில் வெகு சிலரே வெற்றி பெறுகிறார்கள். அப்படி வெற்றி பெறுகிறவர்களே கலைஞர்கள். அவர்களது சிருஷ்டியே கலை. தான் கண்ட மாலைக் காட்சியைப் படமாகத் தீட்டி விடுகிறான் ஒருவன். மலரின் வண்ணத்தை மனத்திலிருந்து புனைகிறான் ஒருவன். கட்டழகியின் கவின் உருவைக் கல்லில் செதுக்கி விடுகிறான் ஒருவன். இப்படியே ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் அனுபவத்தையே நீங்களும் நானும் மற்றெல்லோரும் பெற உதவி புரிகிறார்கள். இவர்களே கலைஞர்கள், இவர்களே கவிஞர்கள், இவர்களே சித்ரீகர்கள், இவர்களே சிற்பிகள், இதைத்தான் எரிக் நியூடன் (Eric Newton) என்ற மேலை நாட்டு அறிஞன் சொன்னான். "Art is to be conceived first in the mind of a man, and then made communicable to other man by the skill of a designer working on some medium that could be perceived by the senses of other man, the eye, he ear, the nose and the palate. என்று... இதையே சொன்னான் தமிழன் ஒருவன்,

> **'காணுகின்ற காட்சி யிலே**
> **கவிந்து மனம் தான் லயித்து**
> **பேணுகின்ற அனுபவத்தைப்**
> **பிற ரெல்லாம் அறியும் வண்ணம்**
> **சொல்லாலோ இசையாலோ**
> **சொலற் கரிய ஜதியாலோ**
> **கல்லாலோ வணத்தாலோ**
> **காட்டுவதே கலையாகும்'** – என்று.

கலை என்றால் என்ன என்று தெரிகிறது. நல்ல கலைப் பொருள்களைக் கண்டு ரசிப்பது எப்படி? அது தெரியாதவர்கள் கலைக்கூடத்தின் முன் போய்த் திரும்பினால் என்ன பிரயோஜனம்?

"கலையை அனுபவிக்க முதலில் கண் வேண்டும். ஆம் நல்ல கண் படைத்திருக்க வேண்டும். அந்தக் கண்களை அதற்கென நன்றாகப் பழக்கியும் இருக்கவேண்டும்" என்று மிஸ் அன்னா பெர்ரி என்ற மேல் நாட்டுக் கலா ரசிகை மிக எளிதாகச் சொல்லி விடுகிறார்.

நாம் பார்க்கின்ற கலைப் பொருள்களில், அதாவது சித்திரம், சிற்பம் முதலிய அருங்கலைப் பொருள்களில் உள்ள நயங்களைத் தெரிய மூன்று விஷயங்களைக் கவனிக்க வேண்டும். அவை கலா சிருஷ்டியில் உள்ள இசை (இழுமை) (Rhythm) அந்தப் பொருளில் ஒளிந்து கிடக்கும் உணர்ச்சி (Emotion) இந்த இசையும் உணர்ச்சியும் நிறைந்த அதன் முழுத் தோற்றப்பொலிவு (Form). இசையைக் கவிதையில் எளிதாகக் கண்டுவிடலாம். ஓசை நயம் இருப்பது காரணமாக. ஆனால் சித்திரத்திலும் சிற்பத்திலும் எப்படிக் காண்பது? தண்ணீர் எப்போதும் ஒரே மட்டமாகத்தானே இருக்கும். ஆனால் தண்ணீரைச் சித்திரத்தில் தீட்டிக்காட்ட விரும்புகிறார்கள் என்று கோடிட்டுக் காட்டி விடுவார்கள். குயவன் செய்யும் மண்பாண்டம் சதுரமாக இல்லாமல் ஏன் வளைவுகளும் நெளிவு சுழிவுகளோடும் கூடியிருக்கிறது. எல்லாம் ஒரு இசைவினை உருவாக்கத்தான். வளைவுகளும் அசைவுகளும் இசை நடத்தைக் காட்டிவிடும் லேசாக. இதைப் போலவே, பாவம் உணர்ச்சி என்றெல்லாம் பேசுகிறோம் கவிதையிலே. அதே பாவத்தையும் உணர்ச்சியையும் சித்திரத்திலும் சிற்பத்திலுமே பார்க்கலாம். உவகை, வீரம், சோகம் முதலிய உள்ள உணர்ச்சிகளை உருவாக்கிக்காட்டாத சித்திரமும் சிற்பமும் நல்ல கலைப் பொருள்கள் ஆகா. இந்த உணர்ச்சிகளைக் காட்ட மனித உருவம்தான் வேண்டுமென்பதில்லை. மலரத் தயாராகிக் கொண்டிருக்கும் ரோஜா மொட்டைக் கொஞ்சம் கூர்ந்து நோக்கினால் அதனுள் துடித்துக்கொண்டிருக்கும் உணர்ச்சி தெரியும். அந்தத் துடிதுடிப்பை ஒரு படத்திலோ அல்லது சிற்பத்திலோ, காட்டிவிடவும் முடியும். இத்துடன் சித்திரத்தின் அல்லது சிற்ப உருவின் முழுத் தோற்றப் பொலிவையும் தெரிந்துகொள்ள வேண்டும். குயவன் பண்ணுகின்ற மண்பானையை விட சித்திரக் கலாசாலை மாணவர்கள் பண்ணும் அலங்காரச் சட்டிகள் அழகாயிருப்பதேன்? எல்லாம் அதன் உருவ அமைப்பு, அதன் தோற்றப் பொலிவினால்தான். மேலும் சித்திரத்தில் அல்லது சிற்பத்தில் ஒரு பகுதிக்கும் மற்றொரு பகுதிக்கும்

உள்ள பொருத்தம், கண்களை உறுத்தும் வேறுபாடுகள் இல்லாதிருத்தல், முதலியவைகளையும் நோக்கும் திறம் படைத்து விட்டால் கலாரசனை கைவந்துவிடும். இப்படியெல்லாம் கலைப் பொருளை அனுபவிக்க கண்களைப் பழக்கிக் கொண்டு கலைக் கூடத்தினுள் நுழைந்தால் அங்கு கலைஞர்கள் தீட்டி வைத்திருக்கும் சித்திரத்தையும் செதுக்கி நிறுத்தியிருக்கும் சிற்பத்தையும் கண்டு களிக்கலாம். சப்பென்ற முறையில் எல்லாம் வெறும் கற்சிலைகள்தான் என்று முடிவு கட்டாமலும் இருக்கலாம்.

இனி கலா மண்டபத்திற்குள் நுழைவோம். கலா மண்டப சிருஷ்டி கர்த்தாக்கள் நல்ல ரசிகர்கள் என்று தெரிகிறது. மண்டபத்திற்கு வாயில் அமைத்திருக்கிறார்களே, அந்த வாயில் ஒன்றே அவர்களது ரசனைக்குச் சான்று பகரும்.

**விண் மறைக்கும் கோபுரங்களும்**
**வினை மறைக்கும் கோயில்களும்**

நிறைந்த தமிழ்நாட்டில், தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியார் நடத்தும் கலைப் பொருள் காட்சியில் நிர்மாணிக்கப்படும் கலா மண்டபத்தின் வாயில், அந்தக் கோயிலின் வாயில் போன்றே அமைந்திருக்கிறது. நூற்றுக்கணக்கான மணிகள் வாயிலைத் திறக்கும்போது ஒலிக்கும் ஒலி ஒன்றைக் கேட்பதற்கே அக்கலைக் கோயிலின் முன் தவம் கிடக்கலாம் போல் தோன்றுகிறது. மண்டபத்துக்குள் நுழைந்ததும், உங்களுக்கு முன் நிற்பவர் நடன ராஜன் தான். கலை, சமயம், சாஸ்திரம் எல்லாம் ஒன்று சேரும் இடம் நடன ராஜனது திருஉருவம் என்றார் டாக்டர் ஆனந்த குமாரசாமி. (nataraja is the synesis of Religion, Science and Art) இனி இந்த நடன ராஜனை வலம் வந்து கலா மண்டபத்தின் முற்றத்திற்கே போகலாம். அங்கிருந்து இடப்புறமாக ஒரு சுற்றுச் சுற்றி வரலாம். அங்கே இருக்கும் அதி அற்புதமான சித்திரங்களையும், சில உருவங்களையும் பார்க்கலாம்.

முதல் முதலில் உங்கள் கண்ணில் படுகின்ற படம் இளமை (Youth) என்ற மகுடமிட்ட எண்ணெய் வர்ணம் படந்தான் (No. 586). இளமையின் வளத்தையும் துடிப்பையும் சித்ரீகர் ஸ்ரீ K.C. ராஜேஸ்வரன் காட்டியிருக்கிறார். படத்தைப் பார்த்து,

**"மங்கைப் பருவமுன் மேனி முழுவதும்**
**பொங்கி வழியுதடி – பெண்ணே**
**பொங்கி வழியுதடி."**

என்று நீங்கள் பாட ஆரம்பித்துவிட்டால் அதிசயமில்லைதான். இந்தப் படத்தின் அடியிலே இரண்டு அபூர்வமான சிற்பங்கள். புத்தர் பெருமானின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் சிற்பம் ஒன்று (No. 568). சாகக் கிடக்கும் மாடு (The Duying Bull) என்னும் சிற்பம் (No. 552) மற்றொன்று. இதில் முன்னையதை உருவாக்கியவர், ஸ்ரீ சி. கோபால் என்பவர். பிந்தியதை அமைத்தவர் ஸ்ரீ ஏ.ஜி. சுந்தரமூர்த்தி என்று அறிகிறோம். புத்தர் பெருமானின் வாழ்க்கையில் புத்தர் யசோதரையைப் பிரிந்து உலகத்தையே துறந்து வெளியேறும் நிலை, புத்தர் தியான நிலை, புத்தர் மான், அணில் முதலிய வாயில்லா ஜந்துக்களிடமும் கருணை காட்டும் நிலை, மூன்றையும் உருவாக்கி யிருக்கிறார் சிற்பி. இந்தச் சில உருவங்களில் மான், புத்தர் பெருமானை உணர்ச்சியோடு நோக்குகின்ற அதி அற்புதமான பாவத்தைக் காணத் தவறிவிடாதீர்கள். அதையே பார்த்துக்கொண்டு நின்றும் விடாதீர்கள். ஆனால் சாகக் கிடக்கும் மாடு என்பது சிறப்பான ஒரு சிருஷ்டி. அளவில் மிகவும் சிறியதாகவே செய்யப்பட்டிருக்கிறது. ஆனாலும் பரிசு ஒன்றைத் தட்டிக்கொண்டு போய்விடுகிறது. நாட்டிலே தாண்டவமாடும் வறுமை, அதனால் ஏற்படும் கோர மரணங்கள் (மாக்கள் உலகத்தில் மட்டுமல்ல மக்கள் உலகத்திலுமே தான்) இதையெல்லாம் இச்சிற்பம் உருவகப்படுத்துகிறது என்று சொன்னால் அதை மறுக்க முடியாது. செத்துக்கொண்டு வரும் எலும்பையும் தோலையும் இந்தச் சின்னஞ்சிறு சிற்பத்தில் காட்டுகிறார் சிற்பி. இத்துடன் முதல் பரிசு பெற்ற தாமரைப் பெண் (No. 542) என்ற சிற்பத்தையும் உடனே பார்த்து விடுவது நல்லது. இதை உருவாக்கியவர் சென்னை சித்திரக் கலாசாலை ஆசிரியர், சிறந்த நடிகர் ஸ்ரீ எஸ். தனபால் என்பவர். தாமரை இலை, மொட்டுக் களுக்கிடையே பூத்த ஒரு மலராக நிற்கிறாள் இந்தத் தாமரைப் பெண். அங்கங்களில் எல்லாம் ஒரு குழைவு, ஒரு லளிதம் இருக்கிறது. நடனத்திற்கே தயாராகும் ஒரு நிலையில், முகத்திலே ஒரு உவகையை நிலவ வைத்திருக்கிறார். இதழ் விரியும் தருணத்தில் உள்ள ஒரு தாமரை மொட்டெனவே இவள் காட்சி கொடுக்கிறாள். இந்த அழகான சிலை, சிற்பப் பகுதியில் முதல் பரிசைப் பெற்றிருக்கிறது. பரிசு பெறுவதற்கு இந்தச் சிலைக்கு உள்ள தகுதியை விட, பரிசு அளித்த நீதிபதிகளின் ரசிகத் தன்மை பாராட்டிற்குரியது. இந்தச் சிற்பங்களை நோக்கிய கண்களுடனே தமிழனின் பழங்காலத்து வெண்கலச் சிற்பங்களையும் பார்த்து விடுங்கள். இரண்டு அம்பிகையின் உருவங்கள். அதில் ஒன்றில் அம்பிகையின் இடது கையை வார்த்து வடித்திருக்கிறானே சிற்பி அதையே பார்த்துக்கொண்டு நிற்கலாம் பல மணி நேரம். அந்தக்

கையிலுள்ள லளிதம் வெகு அற்புதம். பிக்ஷாடனர் சிலையும் ஒரு அபூர்வ வேலைப்பாடு. இவற்றையெல்லாம் சேகரித்து வைத்து நமக்கு கல் விருந்தளிக்கும் ரசிக நண்பர்களுக்கு நமது நன்றி.

இனி இப்படியே உங்களை ஒவ்வொரு சித்திரத்தின் முன்னும் சிற்ப உருவின் முன்னும் நிறுத்தி, அதைப் பற்றிப் பேச நான் விரும்ப வில்லை. சில முக்கிய சித்திரங்களைப் பற்றி மட்டும் சொல்லிவிட்டு அவைகளையும் மற்றவைகளையும் கண்டுகளிக்க உங்கள் கண்களையே உபயோகியுங்கள் என்றுதான் சொல்லப் போகிறேன்.

எண்ணெய் வர்ணப் படங்களில் (Oil Painting) ஸ்ரீ எம்.எஸ். தேவசகாயம் தீட்டிய போலீஸ்காரனும் (Portrait of a Constable No. 519) ஸ்ரீ பாகேஸ்வர சர்மா தீட்டிய நீராம்பலும் (Water Lily No. 505) பரிசுக்குரியவை என்று தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன. இத்துடன் ஸ்ரீ கே.சி.எஸ். பணிக்கர் தீட்டியிருக்கும் மலபார் மார்க்கெட் பாலம் (No. 515) பார்க்க வேண்டிய ஒரு படம். எண்ணெய் வர்ணப் படங்களில் மேல் நாட்டுப் பாணி கொஞ்சம் அதிகமாகவே தான் காணப்படுகிறது என்றாலும் பரவாயில்லை என்றே சொல்லத் தோன்றுகிறது.

எண்ணெய் வர்ணத்தை விட்டுத் தண்ணீர் வர்ணத்துக்கு வந்தால் எண்ணிறந்த படங்களைப் பார்ப்பீர்கள். இவைகளை மேல்நாட்டுப் பாணி கீழ் நாட்டுப் பாணி என்ற இரண்டு பகுதிகளாகப் பிரித்து வைத்திருக்கிறார்கள். மக்கள் (Portraits), மற்ற இசைவுகள் (Compositions) என்றும் பிரித்துப் பரிசுகள் வழங்கியிருக்கிறார்கள். ஸ்ரீ எச். வி. ராம்கோபால், ஸ்ரீ பேபி பொன்னம்மாள் இவர்கள் எழுதிய படங்கள் (Nos. 2 & 4) பரிசு பெற்றவை. ஸ்ரீ நரசிம்மாச்சாரியர் என்பவர் ஒரு சர்வ சாதாரணமான வாழ்க்கையைப் படம்பிடித்துவிடுகிறார். அவருடைய பகல் தூக்கம் (Nap. No. 5) என்ற சித்திரத்திலே, கையால் தலையணைத்து பாயலில் படுத்துறங்கும் பெண்ணின் பின்புறந்தான் காட்டப்படுகிறது என்றாலும் பெண் தூங்குகிறாள் என்ற உணர்ச்சி நமக்கு வருகிறது. இத்துடன் ஸ்ரீ ஜி. டி. பால்ராஜ் என்பவர் எழுதியிருக்கும் ஆலமரத்தடி (Under the Banyan No. 500) பார்த்து அனுபவிக்க வேண்டிய ஒரு படம். ஆலமரம், அதன் விழுதுகள் மரத்தடியில் இளைப்பாறும் மாடுகள், மாட்டு மந்தை, பழைய மண்டபம் எல்லாம் உயிர் ஓவியங்களாக நமக்குக் காட்சி கொடுக்கின்றன. ஏதோ சில வர்ண வீச்சுகள்தான். ஆனால் அதில் மாடுகள் ஒவ்வொன்றின் நிலையையும் கூட நாம் உணர்ந்து அனுபவிக்கும்படி சித்ரீகர் செய்து முடித்திருக்கிறார். இவர் பாராட்டப்பட வேண்டியவர்தானே?

இதுபோலவே, வர்ண விஸ்தாரம் இல்லாமல் வெறும் கருப்பு மையை வைத்து வெள்ளைப் பேப்பரில் உருவாக்கியிருக்கிறார்களே சில சித்திரங்கள் (Black & White Pictures) அவைகளும் நமது கவனத்துக்குரியனவே. ஸ்ரீ எஸ். தனபால், ஸ்ரீ எச்.வி. ராம்கோபால், ஸ்ரீ பி.எல்.என். மூர்த்தி முதலிய பிரபல சித்ரீகர்கள் தீட்டிய சில நல்ல படங்கள், இந்தப் பகுதியில் வைக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் போட்டோ படங்கள் (Photographs) விளம்பரப் படங்கள் (Commercial Arts) முதலிய பலவும் இக்கலாமண்டபத்தில் இடம்பெற்றிருக்கின்றன. சிறந்த அம்சங்கள் பலவற்றையும் தாங்கி நிற்கின்றன.

இந்தக் கலா மண்டபத்தில் அதி முக்கியமான பகுதி உலகம் புகழும் உத்தமன் மகாத்மா காந்தியின் வாழ்க்கையையும், உபதேசங்களையும் சித்திரங்களாக உருவாக்கி அமைத்திருக்கும் பகுதிதான். பிரார்த்தனைக்குப் போகும் வழியில் (On this way to the prayer meeting) என்னும் படம் ஸ்ரீ எல். முனிசாமி என்ற ஒரு இளைஞர் எழுதிய படம் என்று தெரிகிறது. "பொன்னுருக்கி வார்த்து விட்ட பொற்குழம்பு தானெடுத்த விண்ணை வியப்பாக்கும்" அந்த மாலை நேரத்தையே கொண்டு வந்து விடுகிறார் சித்ரீகர், இந்தப் படத்தில். காந்திஜியைக் கூட்டிச்செல்லும் பெண்கள், பிரார்த்தனைக்காகக் காத்து நிற்கும் ஒரு முகம்மதிய இளைஞர், காந்திஜியின் முகத்தில் ஒரு சாந்தம் அமைதி எல்லாவற்றையும் அல்லவா இவர் காட்டி விட்டார் இந்தச் சித்திரத்தில். சரிதான், இதற்குப் பரிசு கொடாமல் வேறு எதற்குக் கொடுப்பது? இதே சித்ரீகர் ஸ்ரீ எல். முனிசாமி, இன்னும் பல படங்கள் காந்திஜியின் வாழ்க்கையில் சில சம்பவங்களைச் சித்திரித்திருக்கிறார். இவைகளைத் தவிர ஸ்ரீ ஆர்யா, ஸ்ரீ திரிவிக்ரம் நாராயணன் முதலியவர்களது சித்திரங்களும் பார்த்து அனுபவிக்க வேண்டியவையே.

இத்துடன் சலவைக் கல்லில் செதுக்கியிருக்கும் காந்திஜியின் உருவமும் இந்தப் பகுதிக்கு ஒரு அழகைக் கொடுக்கிறது. இந்தப் பகுதியிலே நிற்கும்போது உங்கள் உள்ளங்களில் புனிதமான எண்ணங்கள் உதயமானால் எல்லாம் கலை செய்யும் வேலை என்று தெரிந்து கொள்ளுங்கள். "கலைதான் இறைவனிடத்துச் செல்லுவதற்குக் குறுக்கு வழி" (The Nearest approach to God is through Art) என்று தெரியாமலா சொன்னார் கவிஞர் ரவீந்தரர்.

இதையெல்லாம் பார்த்தபின் சிறு குழந்தைகளை மறந்து விடலாமா? குழந்தைகள் பகுதிக்கும் (Childrens Section) போங்கள். குழந்தைகள் உள்ளம் எப்படி எப்படியெல்லாம் உலகத்தை நோக்கு

கிறது என்று பாருங்கள். இப்படி எல்லா சித்திரங்களையும் சிற்ப உருவங்களையும் பார்த்தபின் நிறைந்த மனத்துடன் நீங்கள் வீடு திரும்பினால், அது போதும் இந்தக் கலா மண்டப நிர்வாகிகளுக்கு. இந்தக் கலா மண்டப நிர்வாகத்தில் நண்பர்கள் ஸ்ரீ ஏ. கே. சேகர், ஸ்ரீ என். கே. விநாயகம் இவர்கள் காட்டியிருக்கும் சிரத்தையை நாம் மதித்துப் போற்றினால் அடுத்த வருஷம் இதைவிட இன்னும் அதி அற்புதக் கலைக் கோயிலையே நிர்மாணிக்க அவர்களுக்கு உத்சாகம் ஏற்படும் அல்லவா?

ஆம் கலா மண்டபத்தில் உங்கள் கண்களை உபயோகியுங்கள். அடுத்த வருஷம் காணப்போகும் காட்சிக்கு இப்பொழுதே உங்கள் கண்களைப் பழக்கப்படுத்திக் கொள்ளுங்கள்.



சிவகாமியம்மை

## தஞ்சை கலைக்கூடம்

### *சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்*

நான் மதறாஸ் மியூசியத்தைப் போய்ப் பார்த்திருக்கிறேன். அங்கெல்லாம், சிலைகளை, பலசரக்குக் கடைகளில், உப்பு, புளி, மிளகாய், வற்றல் மூட்டைகளை அடுக்கி வைத்தாற்போல அமுக்கி வைத்திருக்கிறார்கள். அங்குள்ளவர் களுக்கு, சிவனது மூர்த்தங்கள் என்ன என்ன வென்றோ, விஷ்ணுவின் அவதார வடிவங்கள் என்ன என்னவென்றோ தெரியவில்லை. ஆதலால் Siva Another form of Siva என்றே எழுதத் தெரிந்திருக்கிறார்கள். இக்கலைக்கூடத்தை உருவாக்கியவர்களோ, மிக்க பக்தி சிரத்தையோடு காரியங்களைச் செய்திருக்கிறார்கள். ஒவ்வொரு மூர்த்திக்கும் தனித்தனியாய்ப் பீடம் அமைத்திருக்கிறார்கள். தேவார திருவாசகப் பாடல்களை எல்லாம் சேகரித்திருக்கிறார்கள். ஒவ்வொரு மூர்த்திக்கும் தனித்தனியாய் பீடம் அமைத்திருக்கிறார்கள். தேவார திருவாசகப் பாடல்களை எல்லாம் சேகரித்திருக்கிறார்கள். என்னைப் போல் பாமரர்கள் வருவார்கள் என்று தமிழில் விளக்கங்கள் எழுதி வைத்திருப்பதோடு, என்னை விடப் பாமரர்களும் வருவார்கள் என்று தெரிந்து, ஆங்கிலத்திலும் விளக்கங்கள் எழுதி வைத்திருக்கிறார்கள். இவர்களது முயற்சியைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

# தஞ்சை கலைக்கூடம்

## *பேராசிரியர் வெங்கடாச்சலம்*

சின்னஞ்சிறிய, மிக நுண்ணிய விதைக்குள் ஒரு பெரிய ஆலமரமே அடங்கிக் கிடப்பது போல, பின்னால் நிகழப்போகும் ஒரு பெரிய காரியத்தின் தோற்றுவாயாக ஓர் அற்ப சம்பவம் அமைந்து கிடக்கக்கூடும் என்பதற்கு தஞ்சைக் கலைக்கூடம் அழியாத சான்று.

1951 ஆம் ஆண்டு ஆரம்பத்தில் ஒரு சிறு சம்பவம் நிகழ்ந்தது தஞ்சாவூரிலே. கல்கத்தாவைச் சேர்ந்த ஒரு புதைபொருள் ஆராய்ச்சியாளர் ஒரு சிலையைத் தம்மூருக்கு எடுத்துப்போக விரும்பினார். தஞ்சைக் கலெக்டரின் உதவியை நாடினார். அந்தச் சிலை தஞ்சாவூரின் வடபகுதியில் கருந்திட்டைக் குடியில் ஒரு வாய்க்காலில் விழுந்து கிடந்தது. அதனைப் பார்ப்பாரும் இல்லை, கேட்பாரும் இல்லை. அதனால் கலெக்டரும் "அது எப்படியாவது போனால் சரி" என்ற பாவனையில் இசைந்தார். எல்லாரும் அதனை அனுப்பிவைக்க ஒருநாள் அங்கே போய்ச் சேர்ந்தார்கள். கலெக்டரும் அவரது பரிவாரங்களும் அவர்களோடு ஒரு புதுமுகமும் அங்கே செய்த ஆர்ப்பாட்டத்தைக் கண்ட மக்கள் வேடிக்கைப் பார்க்கக் கூடினார்கள். மெல்ல மெல்ல என்ன நடக்கிறது என்பதைக் கவனிக்கத் தொடங்கினார்கள். அந்த ஜனக் கூட்டத்துள் திடீரென்று ஒரு புண்ணியவானுக்கு ஓர் ஆவேச உணர்ச்சி தோன்றியது போலும். உலகத்தைப் படைத்துக் கோடிகோடியாக மக்களையும் படைத்து, சலித்து எல்லாராலும் கைவிடப்பட்டு "சே! இந்த உலகமே வேண்டாம்" என்ற வெறுப்போடு வாய்க்காலில் விழுந்து கிடந்த அந்தச் சிலையை ஆம்; அது படைத்தற்கடவுள் பிரம்மாவைப் பார்த்ததும் மங்கிக் கிடந்த பாச உணர்ச்சி பீறி எழுந்துவிட்டது போலும். அவ்வளவுதான்! கரந்தை மக்கள் சிலையை எடுத்துப்போகக் கூடாது என்று கரந்தை மக்களாக அடம் பிடித்தார்கள். இருந்த நிலைமை இப்படி ஆச்சரியகரமாக மாறிப் போனதும், அதிகாரிகளுக்கு வேறு ஒன்றும் செய்ய

முடியவில்லை. "இப்படி வாய்க்காலில் கிடந்தால் சிலை அழிந்து போகுமே" என்று விவாதம் செய்து ஒரு வழியாக அவர்களுடைய சம்மதத்தைப் பெற்று, பிரும்மாவை அழைத்துக்கொண்டு தஞ்சை அரண்மனையில் சரஸ்வதி மகாலுக்கு அருகில் பாழடைந்து கிடந்த மண்டபத்தில் பத்திரமாக ஓர் ஒதுக்கான இடத்தில் அவரை அமர்த்தி வைத்தார்கள். இந்த வரலாற்று வேடிக்கை நிறைந்த சம்பவம் அப்படியே காலப்போக்கில் மங்கி மறைந்து போயிருக்க வேண்டும்.

ஆனால், அன்றைய அதிகாரக் கூட்டத்துக்குள் அரசாங்க அதிகாரி என்ற போர்வைக்குள் ஒரு கலைஞன் ஒளிந்திருந்தான். சிற்பியின் உளி பட்டதும் கல்லுக்குள் கிடந்த உருவம் வெளி வருவதுபோல, இந்தச் சம்பவம் அதிகாரப் போர்வைக்குள்ளே கிடந்த கலைஞனை வெளிக் கொணர்ந்தது. இந்தத் தமிழகத்தில்தான் எத்தனை எத்தனை அழகிய சிலைகள் கேட்பாரற்றுப் பார்ப்பாரற்று தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் சிந்திச் சிதறிக் கிடக்கின்றன. அவற்றையெல்லாம் பக்குவமாகக் கொண்டு வந்து இந்த அரண்மனைக்குள்ளே சேர்த்துவிட்டால்...! இப்படி இழையோடியது அந்தக் கலையுள்ளம். கலையும் அதிகாரமும் கலந்தன. எங்கெங்கோ கிடந்த சிற்பக் கலை வடிவான சிலைகள் எல்லாம் அங்கங்கு இருந்து வந்து சேர்ந்தன. ஒவ்வொன்றையும் அன்புடன் வரவேற்று அன்னை போல் நெய் நீராட்டி, இங்குத் தங்கு தங்கு என்று உபசரித்து, மணியான பீடத்தில் அமர்த்தி வைத்தார் அந்தக் கலைஞர். அவர்தான் கலைமணி தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள். கலைகளைப் பற்றியும், சிறப்பாக தஞ்சைக் கலைக்கூடச் சிற்பங்களைப் பற்றியும் பேசாத நாளெல்லாம் பிறவாத நாளே என்ற எண்ணமுடையவர். அத்தகைய கலைமணியின் கைவண்ணம் தோய்ந்து அங்கு வந்தெய்திய சிலைகளெல்லாம் புதிய பொலிவு பெற்றன. புதிய விளக்கம் பெற்றன. புதிய வாழ்வு பெற்றன. சிலைத் தெய்வம் எல்லாம் கலைத் தெய்வமாயின. எல்லாரும் கண்டு களித்துக் கண் பெற்ற பயன் பெறுதற்குத் தக்க முறையில், அத்தெய்வங்கள் எல்லாம் வெளிவந்து காட்சி கொடுக்கிறார்கள். ஆனால் அன்று 1951 ஆம் ஆண்டிற்கு முன்னால் ஆயிரக்கணக்கில் செலவு செய்து காடு மேடெல்லாம் இரவு பகலாக அலைந்தாலும் அவர்கள் தரிசனம் சித்திக்குமா? நாம் அலைந்துபட வேண்டிய அத்தனைத் துன்பத்தையும் கலைமணி அவர்கள் அன்றே நமக்காக அனுபவித்துவிட்டார்கள். கலைக்கூடத்தில் காட்சி தருகின்ற தெய்வங்கள் என்ன சாமானியமாக வருகிறோம் என்றா சொன்னார்கள்? எத்தனை பேர் வருந்தி அழைக்க வேண்டியிருந்தது.

அவர்கள் ஏறி வருவதற்கு எத்தனை எத்தனை பெரிய வாகனங்கள் வேண்டியிருந்தது? அவர்களுக்கு எடுபிடி வேலைசெய்ய எத்தனை எத்தனை பணியாட்கள் வேண்டியிருந்தது. தாராசுரத்தில் இருந்த அந்தப் பிட்சாடணரையும் முனிவர் மனைவியரையும் அழைத்து வர எவ்வாறு பாடுபட்டிருப்பார்கள்.

இருளிலே நெடுநேரம் கண்விழித்து இருந்து அவர்களையெல்லாம் வாகனத்தில் ஏற்றிய பின்னர்தான் கலைமணி அவர்கள் அந்த இடத்தை விட்டு நகர்ந்தார்கள். இப்படி எத்தனை இரவுகள் கண் விழித்திருப்பார்கள். எத்தனை வேளைகள் உண்ண நேரம் இன்றிக் கடலையைத் தின்று தண்ணீர் குடித்திருப்பார்கள். ஓரிடத்திலே சிலைகளை வண்டிகளில் ஏற்றி விடுவார்கள். அவைகள் கலைக் கூடம் வருமுன்னர் தான் வந்திருந்து அவைகளை கலைக்கூட வாயிலில் நின்று வரவேற்பார்கள். இப்படியெல்லாம் கலைமணி அவர்களும் அவரது துணைவர்களும் பட்ட துன்பங்களை நினைக்கும் போது நெஞ்சம் உருகும். இப்படியெல்லாம் பாடுபட்டு உருவாக்கிய தஞ்சைக் கலைக்கூடத்தில், அந்தக் கலைஞரின் பெயர் கூட இல்லை. போராடிப் பார்த்தும் புண்ணியமில்லை. என் போன்றவர்கள் புலம்புவதோடு நிற்கிறது. மாநில அரசோ, மத்திய அரசோ, கண் திறந்து பார்த்து ஆவன செய்யவேண்டும் என்பதே என் போன்றோரின் கோரிக்கை.



## தஞ்சை கலைக்கூடம்



தோரணவாயில்

# நான்முகக் கடவுள்

நான்முகக் கடவுளான பிரம்மாவுக்கு கோயிலே கிடையாது இந்த நாட்டில் என்பர். மூன்று மூர்த்திகளும் இருப்பதாகக் கூறப்படும் அந்த உத்தமர் கோயிலிலே கூட பிரம்மாவுக்கு ஒதுக்கப்பட்டுள்ள இடம் ஒரு சிறிய இடம்தான். ஆனால் கலைக்கூடத்தாராகிய நாங்கள் அந்தப் பிரம்மாவிற்கு, அந்த சிருஷ்டிகர்த்தாவிற்கு அதிமுக்கியமான இடத்தைக் கொடுத்திருக்கிறோம். காரணம் அவர் செய்யும் சிருஷ்டித் தொழில் முக்கியம் என்பதற்காக அல்ல. எங்கள் கலைக் கூடத்தையே சிருஷ்டி செய்ய அவர்தான் காரண புருஷர் என்பதற்காகத்தான்.

கல்கத்தா புதைபொருள் இலாகா ஆராய்ச்சியாளர் தஞ்சை வந்து, கரந்தையில் ஆற்றங்கரையில் மண்ணில் அரைவாசி புதைந்துகிடந்த இவரைக் கல்கத்தாவிற்கே எடுத்துப்போக எண்ணினார். அதற்காக கலெக்டரை அணுகினர். ஆனால் கரந்தை மக்களோ எங்கள் பிரம்மாவை விடோம் என்றனர். மண்ணில் புதைந்து கிடந்தவர வெளியில் எடுத்து நீராட்டிப் பூமாலை புனைந்து ஏத்தத் துவங்கிவிட்டனர். இந்தக் கலையழகுடைய சிலை கிடந்த நிலையைக் கண்டுதான் இத்தகைய சிலைகளையெல்லாம் ஒன்றாக ஓரிடத்தில சேர்த்துவைத்தல ஆகாதோ என்று எண்ணினோம். கரந்தைவாசிகளும் ஒத்துக் கொண்டனர். அழகு நடை போட்டு அரண்மனைக்கு வந்தார் அவரும். வந்தது நல்ல முகூர்த்தத்தில்தான். அதனால்தான் இத்தனை சிற்ப உருவங்கள் சேர்ந்திருக்கின்றன இங்கே இன்று.

நல்ல கம்பீரமான தோற்றம். எத்தனையோ வருஷ காலமாக யோகம் செய்து சித்திபெற்ற வாய்ப்பான உடல். நிறைந்த சாந்தம் தவழும் நோக்கு எல்லாம் உடையவராய் இருக்கிறார் அவர். நான்கு முக்ததிலும் நான்கு பாவம். இதை நன்றாக எல்லோரும் உணர்வதற்காக அவரைச் சுற்றி வந்து கண்டுகளிக்க ஏற்பாடு செய்திருக்கிறோம் இப்போது. கலைக் கூடத்திலே நுழைந்ததும் உங்கள் கண்முன்னே அழகான பதுமபீடத்தில் இருப்பவர் இவர்தான். இவருக்கு வணக்கம் செலுத்திவிட்டுத்தான் மேற்செல்ல வேண்டும்.

**நாரணர் திருமகன் நான்முகனே**
**ஆரணக் கலைகளின் ஆதிகர்த்தா**

கலைகளின் கர்த்தாமாத்திரம் என்ன? கலைக்கூடத்தின் கர்த்தாவே அவர்தானே.

# கஜசம்ஹாரர்

கலை உலகிலே மிகப் பிரசித்திப்பெற்ற சிற்பம் மேலைநாட்டிலே உள்ள லாவக்கூன். ஒரு தந்தையையும் அவன் மக்கள் இருவரையும் இரண்டு மலைப்பாம்புகள் சுற்றிக்கொள்ள, அந்தப் பிடியிலிருந்து மீள தந்தையும் மக்களும் திருகிக்கொண்டு தவிக்கிறார்கள். உண்மையிலேயே அற்புதமான கிரேக்க நாட்டுச் சிற்பம் அது. அத்துடன் மைக்கேல் ஆஞ்சலோ உருவாக்கிய 'புதன்' (Mercury) என்ற சிலையில் உள்ள முறுக்கிய நிலையையும் பாராட்டாத மேல் நாட்டுக் கலைஞர்கள் இல்லை. ஆனால் இவர்கள் எல்லாம் இந்தக் கலைக்கூடத்திற்கு வந்து, இந்த கஜசம்ஹாரரை மட்டும் பார்த்துவிட்டால், தாங்கள் போற்றும் சிற்ப வடிவங்கள் எல்லாம் இதற்கு ஈடாகுமா என்று எண்ணமாட்டார்களா? ஒரே சிலையில், ஒரு மூர்த்தியின் முன் பாகத்தையும் பின் பாகத்தையும் முறுக்கிக் காட்டும் ஆற்றல் பெற்றிருந்த சிற்பிகளுக்குத் தலைவணங்காதிருப்பார்களா?

கதை தெரிந்ததுதான். அறிவால் மாட்சி பெற்றிருந்த தாருகாவனத்து ரிஷிகளின் கர்வத்தை அடக்கப் புறப்படுகிறார் சிவபெருமான். அவர்களோ தங்கள் யாக பலத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். அதனால் ஆபிசார ஹோமம் நடத்துகிறார்கள். அதிலிருந்து எழுகின்றன பாம்பும் புலியும். பாம்பை எடுத்து மாலையாகப் போட்டுக் கொள்கிறார். புலியை கிழித்து உடையாக அணிந்து கொள்கிறார். கடைசியில் பெரிய யானையையே ஏவுகிறார்கள் முனிவர்கள். யானையைச் சம்ஹரிப்பது என்பது எளிதான காரியமா? அதுவும் தன்னந்தனியனாக. ஆகவே ஆங்காரத்துடன் அந்த யானையின் உடலைக் கிழித்து, அதன் உடலுக்குள்ளேயே பாய்ந்து திருகிக்கொண்டு 'கஜசம்ஹாரத்தை நடத்தி முடிக்கிறார். இந்த நிலையை உருவாக்கிய சிற்பிகள் அநேகர். திருத்தருப்பூண்டி, பேரூர் சிவன் கோயில்களில் எல்லாம் இந்தச் சிற்பம் உண்டு. ஆனால் இவைகள் எல்லாம் தோன்றுவதற்கு முன்னாலேயே தாராசுரம் ஐராவதேஸ்வரர் கோயிலில் இந்தச் சிற்பம் மிகவும் அழகாக உருவாகி இருக்கிறது. உடலில் உள்ள திருகலும், முகத்தில் உள்ள ஆங்காரமும் அற்புதமாக இருக்கிறது. அஞ்சி ஒதுங்கும் பார்வதியையும், அவள் கையில் உள்ள முருகனையும் உருவாக்கியிருக்கிறான் சிற்பி. காணக்கண் கோடி வேண்டும். கோடி போதுமா, நேரம் எவ்வளவு யுகங்கள் வேண்டுமோ?

# தக்ஷிணாமூர்த்தி

முனிவர்கள் கூட்டத்தில் நால்வர். இவர்கள் வேதம், சாஸ்திரம், கலைகள் எல்லாம் கற்றுத் தேர்ந்தவர்கள். நான்மறை ஆறங்கம் முதல் கற்ற கேள்வியெல்லாம் வல்லார்கள் என்றாலும், மயக்கம் தீர்ந்தவர்கள் இல்லை. மயக்கம் தீர்வதற்கு, உபதேசம் பெற இறைவனை அணுகினார்கள். அவரும் சரியென்று கல்லால மரத்தடிக்கு எல்லோரையும் கூட்டிச் சென்றார். பக்கத்தில் இருத்தினார் எல்லோரையும். இவர் தம் நடுவிலே இருந்தார் அவரும் மௌனமாக. கையால் சின்முத்திரையை மட்டும் காட்டினார். அவ்வளவுதான் மயக்கம் தெளிந்துவிட்டது முனிவர்களுக்கு. இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச் சொல்லாமல் சொல்லிவிட்டார். சொல்ல வேண்டியது அத்தனையையும் அவ்வளவு பேரும் அப்படியே இருந்து விட்டார்கள், இல்லை இன்னும் இருந்து கொண்டிருக்கிறார்கள்.

அன்று ஆலின்கீழ் இருந்து அறம் சொன்னான் அவன் என்பார். என்னதான் சொன்னான் அவன்? இயல்பாகவே பாசங்களில் நின்று நீங்கிய பதியாகிய இறைவனை, உயிராகிய பசு சென்று சேர்ந்தால், ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமும் தானே அகன்று விடாதா? இதைத்தானே கூறுகிறது சின்முத்திரை. இந்த உண்மையைத்தானே விளக்குகிறார் திருமூலர்.

**பதிபசு பாசம் எனப் பகர் மூன்றில்**
**பதியினைப் போல் பாசம் அனாதி**
**பதியினைச் சென்றணுகாப் பசு பாசம்;**
**பதி அணுகில் பசு பாசம் நில்லாவே என்று.**

இந்த தக்ஷிணாமூர்த்தியை தென்முகக் கடவுளை தெற்கே பார்த்த மூர்த்தியாகவே வைத்திருக்கிறார்கள் கலைக்கூடத்தில். சின்முத்திரை காட்டும் கை கூட முறிந்து போய் இருக்கிறது. முத்திரை இல்லாமல் முகத்தாலேயே அருள்புரியும் ஆற்றல் பெற்றவர்தானே அவர். 'சொல்லரிய நெறியை ஒரு சொல்லால் உணர்த்தி சொருபானு பூதிகாட்டும் சின்மயானந்த குரு' அவர் என்று கண்டு தெளிவது நமக்கு எளிதுதான்.

# வீணாதர தக்ஷிணாமூர்த்தி

தக்ஷிணாமூர்த்தத்தில் எத்தனையோ வகை, யோக தக்ஷிணாமூர்த்தி, வீணாதர தக்ஷிணாமூர்த்தி என்றெல்லாம். கலைக் கூடத்தில் தக்ஷிணாமூர்த்தியும், யோக தக்ஷிணாமூர்த்தியும் கல்லுருவில் இருக்க, வீணாதரர் மட்டும் செப்பு உருவிலே உருவாகி இருக்கிறார்.

இறைவனே இசை வடிவினன். ஏழிசையாய் இசைப் பயனாய் இருப்பவன் அவன். தும்புரு நாரதர் சுகர் முதலியவர்களுக்குக் கூட இசையைக் கற்பித்தவன், சாமவேதத்தை வீணையில் ஏற்றிப் பாடி. இப்படி இறைவன் தன் கையில் வீணையேந்தி வாசித்ததைக் கற்பனை பண்ணியருக்கிறார் ஞானசம்பந்தர். 'வேயுறு தோளிபங்க னாகவும், விடமுண்ட கண்டனாகவும் உள்ளவரே மிக நல்ல வீணை தடவி இன்னிசை பொழிகிறார்' என்பார். ஓசை ஒலியெலாம் தானே ஆன அவன், வீணாதரனாக காட்சி கொடுப்பதும் பொருத்தம்தானே.

ஏன் இவன் வீணை வாசிக்கிறான்? சொல்லால், முத்திரையால் விளக்க முடியாததையும் விளக்கும் ஆற்றல் இந்த இசைக்கு உண்டு என்றுதானா? துடிமுழக்கி, தன்பக்கம் உயிர்களை சேர்க்க முயன்றிருக்கிறான். நடம் ஆடி உயிர்களுக்கு ஒரு ஆசை ஊட்டியிருக்கிறான். மேலும் வீணை வாசித்து அந்த நாத வெள்ளத்திலே மிதக்கப் பண்ணி பவமாகிய கடலைக் கடக்க உதவியிருக்கிறான், எல்லாம் உயிர்கள் மாட்டுக் கொண்ட அபரிமிதமான கருணையால்தான்.

கலைக்கூடத்தில் உள்ள செப்புச் சிலையை திரிபுராந்தகரோ என்று மயங்கியவர்கள் உண்டு. வீணையேந்தும் கரத்திற்கும், வில்லேந்தும் கரத்திற்கும் உள்ள வேற்றுமையை மட்டும் உணரும் ஆற்றல் பெற்றிருந்தால், இந்த மயக்கம் வேண்டியதில்லை. அத்துடன், இந்த முயலகன் இருக்கிறானே அவன், நடனராஜன் காலடியிலும் தென்முகக் கடவுள் காலடியிலும் மட்டுந்தான் கிடப்பான். திரிபுராந்தகரைக் கண்டு அஞ்சமாட்டான், அவர் காலடியில் அகப்படமாட்டான். இதை வைத்தும் இவர் விணாதரரே என்று அறுதியிட்டுவிடலாம்தானே. நல்ல சோழர் காலத்துச் செப்பு விக்ரஹம். மிக்க அழகோடு அமைந்தது.

# சிவ பார்வதி

கைலைக்கு இந்தப் பூத உடலோடேயே செல்ல வேண்டும் என்று ஆசைப்படுகிறார் அப்பர். அதற்காக, இறைவன் கட்டளைப்படி ஐயாறப்பன் கோயிலில் உள்ள குளத்தில் முழுகி எழுகிறார். கைலை காட்சியே கிடைக்கிறது. தான் பெற்ற அனுபவத்தைச் சொல்கிறார்.

**காதல் மடப்பிடியோடும்**
**களிறு வருவன கண்டேன்**
**கண்டேன் அவர்திருப்பாதம்**
**கண்டறியாதன கண்டேன்**

என்று. ஏதோ களிறும்பிடியும், குயிலும் பெடையும், சேர்ந்து வரும் தோற்றம் எல்லாம் சிவனும் சக்தியுமாகத் தோன்றுகிறது அவருக்கு.

சேர்ந்து வருவது என்றால், இருவரும் ஒருவரைவிட்டு ஒருவர் விலகி, அகல நடந்து, அமுத்தலாகவா வருகிறார்கள்? ஒருவரை ஒருவர் தழுவி, நெருக்கி உட்புகுந்தவர் போல் அல்லவா வருகிறார்கள். அவனை இடித்துக்கொண்டு அம்மை வருகிறதைக் கண்டால், இவள் அவன்றன் இடப்பாகத்தில் பாதியைப் பெறுவதற்கு முன்னிருந்த நிலையோ என்று கேட்கத் தோன்றுகிறது நமக்கு. இத்தனையும் தோன்றுகிறது சிவ பார்வதி சிலையிலே.

இந்தச் சிற்பம் உருவான கதை இதுதான். சிற்பி உண்மையில் முதலில், இருவரையும் சேர்த்து உருவாக்க எண்ண இல்லை. சந்திரசேகரரைத்தான் உருவாக்க எண்ணியிருக்கிறான். கல்லில் உருவை வரைந்து வலப்பக்கத்தைச் செதுக்கி வேண்டாத பகுதிகளை வெட்டியெடுத்திருக்கிறான். இடப்பக்கத்தில் வெட்டிச் செதுக்க வேண்டிய பகுதி அதிகம் இருப்பதைக் கண்டவுடனே, அந்தச் சிறு இடத்தில், ஏன் பார்வதியையும் சேர்த்து உருவாக்கி விடக்கூடாது என்று நினைத்திருக்கிறான். சிற்றுளி வேலை செய்திருக்கிறது. ஆனால் இருக்கும் இடத்திற்குள்ளேயே சமாளிக்க பார்வதியை நெருக்கியிருக்கிறான். சிவபெருமானைச் சுற்றித் தழுவும் ஒரு கொடியாக அவளை ஆக்கியிருக்கிறான். இப்படித் தழுவும் கொடியையும், கொடியை அணைத்துக் கொள்ளும் கொம்பையும் கண்டால்,

**மஞ்சிடை வயங்கித் தோன்றும்**
**பவளத்தின் வல்லி அன்ன**
**குஞ்சரம் அனைய வீரன்**
**குவவுத்தோள் தழுவிக் கொண்டாள்**

என்ற கம்பர் பாடல் ஞாபகத்திற்கு வராமல் போகுமா?

# ரிஷி பத்தினிகள்

கலைஞனுக்குத் தன் கற்பனையை வெளியிட இந்த இந்தப் பொருள்தான் வேண்டும் என்று இல்லை.

**வண்டி அற்புதப் பொருளாம் – வண்டி**
**மாடும் அற்புதப் பொருளாம்**
**வண்டி பூட்டும் கயிறும் – என்றன்**
**மனதிற்கு அற்புதப் பொருளாம்**

என்று அவன் சொல்வதில் வியப்பில்லைதான்.

என்றாலும், கலைஞன் வளர்த்தது காதலையும் வீரத்தையும், போற்றியது பெண்ணையும் அவள் அழகையும். பெண்களும் காதலும் இல்லாவிட்டால் இவர்கள் கற்பனையெல்லாம் சிறகடித்துப் பறக்க முடியுமா என்ன? இப்படிப்பட்ட கலைஞன் ஒருவனுக்கு ஒரு கதை கிடைக்கிறது ஒரு புராணத்திலே, தாருகாவனத்தில் அற்புத சுந்தரனாக வந்த அந்த பிக்ஷாடனரது அழகிலே அங்குள்ள ரிஷி பத்தினிகள் மயங்கி நிறையழிந்தனர் என்று.

வளை சுழன்றது சிலருக்கு. உடை நெகிழ்ந்தது பலருக்கு. நாணம் வந்தது நங்கைக்கு. மலர்ப்பாணம் தைத்தது மங்கைக்கு என்றெல்லாம் தோன்றிற்று இவனுக்கு. 'சொல்நலம் கடந்த காமச் சுவையைப் பல் உருவம் ஆக்கி, இந்நலம் தெரிய வல்லார் எழுதியது என்ன நிற்கும்.' இவர்தம் நிலையெல்லாம் கல்லிலே உருப்பெறுகிறது பின்னால். இவர்களில் ஒருத்தியின் உடை நெகிழ்கிறது; தன்னையும் தாங்கலாத அவள் துயில் ஒன்றும் தாங்கி நிற்க அரும்பாடு படுகிறாள். ஒசிந்த நோக்கோடும், முகிழ்த்த மூரலொடும் நாணி நிற்கிறாள் ஒருத்தி. தன் நாணத்தை மறைக்க, நாணிக் கோணும் இவள் பின்னால் மறைகிறாள் மற்றொருத்தி. இருவரையும் உருவாக்குகிறான் சிற்பி. இருவரது அழகையும், இவர்களைச் சேர்ந்த இன்னும் ஐந்து ரிஷி பத்தினிகளின் நிலையையும் காண்பதற்கு நேரே கலைக்கூடம் செல்லுங்கள் இன்றே, என்று சொல்லுவதைத் தவிர வேறு சொல்ல என்னால் இயலவில்லை.

# பிக்ஷாடனர் – கங்காளர்

பிறப்பு இறப்பு இல்லாத சிவபெருமான் தான் எத்தனை எத்தனை மூர்த்திகரமாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான்? அவனா வெளிப்படுத்திக் கொள்கிறான்? அவன் உருவைக் காணத் துடிக்கும் சிந்தனைச் சிற்பிகள் வெளிப்படுத்த முயலுகிறார்கள். அவ்வளவுதான்.

ஆடவல்லானாக, கயிலாயநாதனாக, பால்வண்ண மேனியனாக, பசுபதியாக, உமாமகேசுவரனாக, ஆபத்சகாயனாக எல்லாம் பாராட்டப்பெறும் பரமேஸ்வரனை, பிறைசூடும் சடை மேலோர் புனலும் சூடி, அனல்கொண்டு அந்திவாய் வண்ணங் கொண்டு பலியேற்கும் பெருமானாகவும் கற்பனை பண்ணியிருக்கிறார்கள். அவன் கேட்கும் பலி, அன்பும் ஆணவமும் என்றும் குறித்திருக்கிறார்கள். அதற்காக கதை கட்டியிருக்கிறார்கள்.

தாருகாவனத்து ரிஷிகளின் கர்வத்தை அடக்க சிவபெருமான் பிக்ஷாடனர் உருவில் வந்தார் என்பது கதை. அவர் தன் மேனி அழகில் மயங்கி ரிஷி பத்தினிகள் எல்லாம் நிறையழிந்தனர் என்பது கற்பனை. அந்தக் கதைக்கும் கற்பனைக்கும் வடிவம் கொடுத்திருக்கிறான் சிற்பி. வருகிறவன் உள்ளிருப்பவர்களையெல்லாம் வெளியில் இழுக்க தன் டமருகத்தை கொட்டி முழக்கி ஒலித்துக்கொண்டே வருகின்றான். அவன்றன் அழகிய உருவைக் கண்டு ரிஷிபத்தினிகள் மயங்கினார்களோ இல்லையோ. கவிஞன் மையலாகி நிற்கிறான். வருகின்றவன் வடிவழகை, அப்படியே சொல்லிச் சொல்லி மகிழ்கிறான், நல்ல பாட்டிலே.

**அடியில் தொடுத்த பாதுகையும்**
**அசைந்த நடையும் இசைமிடறும்**
**வடிவில் சிறப்ப நடந்தருளி**
**மூழை ஏந்தி மருங்கணைந்த**
**தொடியில் பொலிதோள் முனிமகளிர்**
**சுரமங்கையரை மயல்பூட்டி**
**படியிட்டு எழுதாப் பேரழகால்**
**பலிதேர் பகவன் திருஉருவம்.**

பாட்டிற்கு விளக்கம் தேவை இல்லை. கலைக்கூடத்தின் சிறப்பையெல்லாம் தன் புகழாக்கிக் கொள்ளும் இவனைக் கண்டால் அவனே விளக்கம் கூறுவான்.

# கலைமணி பாஸ்கர தொண்டைமான்

## பி. ஸ்ரீ

பெயரைச் சரியாக எழுதவும் மறந்தாய். இக்கலைவினோதரைப் பற்றி என்ன எழுதிவிடப் போகிறாய்?

பிபின் சந்திரபால் (பிபின் சந்திர பாலா) என்ற தீவிர தேசியத் தலைவரின் பிரபலமான பெயரைச் சந்திரபிபின் பால் என்று மாற்றி, முன்பின்னாக எழுதினானாம் ஒரு வெள்ளைக்காரன். அந்த நாளிலே, தலைப்பைப் பாத்ததும் இப்படியெல்லாம் வார்த்தைகளை அள்ளி வீசி நகையாடினார் நண்பர் அவசர மூர்த்தி.

அப்போதுதான் எனக்கும் அது புலப்பட்டது. ஆனால் சமாளித்துக் கொண்டேன். சங்ககாலத்தில் வாழ்ந்த தொண்டைமான் இளந்திரையன் வழிவந்தவர் இவர் என்றேன். 1964 ஆம் ஆண்டு ஜுலை மாதம் 12 ஆம் தேதியிட்ட கலைமணியின் மணிவிழா மலரில் எங்கள் பரம்பரை என்ற தலைப்பில் இவர் அருமைப்புதல்வி அன்புடன் தந்திருக்கும் அச்செய்தியை ஆதாரமாகக் காட்டினேன்.

உண்மை என்னவென்றால், கலை வளர்த்த தொண்டைமான்களில் எமக்குத் தெரிந்த அளவில் ஆதித்த தொண்டைமான் பெயர், தொண்டைமான் இளந்திரையன். அந்தக் காவலனையும் நாவலராகவும், பாவலராகவும் திகழ்ந்த கலைமணியின் தந்தையாரையும் தாத்தாவையும் நினைவூட்டிக் கொண்டேன்.

அவசர மூர்த்தியோ, வழிவழிச் சொத்தா இந்தக் கலைமணியின் கலையுள்ளம்? என்ற வியப்பில் மூழ்கி மேலே எழுதும்படி உத்தரவு போட்டுத் தாம் மௌனமாகிவிட்டார்.

எப்படியும் இது பரம்பரைச் சொத்து. ஆனால் இந்தச் சிற்பக் கலை ரசிக உள்ளம் பேசும் கல்சிலைகளுக்கும், செம்பு வெண்கல பொன் படிமங்களுக்குமிடையே பயிற்சியும், பல அனுபவங்களும்

பெற்றுப் பண்பட்டு வந்திருக்கிறது. இதே உள்ளத்தைக் குருவின் மேதை மேலும் பண்படுத்தியிருக்கிறது.

**குருமணியும் கலைமணியும்**

'பாஸ்கரனது உள்ளம் ஆனந்தப்படுகிற உள்ளம். குழந்தை உள்ளமே' என ரசிகமணி டி.கே.சி கூறியுள்ளார், ராஜாஜிக்கு எழுதிய கடிதம் ஒன்றிலே. எந்த விஷயத்திலும், மெய்யைக் கண்டு எடுத்துக்காட்டி வந்த டிகேசி இந்த உண்மையைக் கண்டார். குழந்தை உள்ளம் படைத்தவர்கள் வெகு சிலரே. அதில் ஒருவர் பாஸ்கரத் தொண்டைமான் என்று ராஜாஜி மேலும் விளக்கம் தந்து 9 ஆண்டுகளுக்கு முன் கொண்டாடப்பட்ட கலைமணியின் மணிவிழாவை முன்னிட்டு தம் ஆசிகளை அனுப்பி வைத்தார்.

குழந்தைக்கு அறுபதாம் ஆண்டு விழா நிறைவெய்தி அறுபத்தொன்றாம் வயது பிறக்கிறது.

இந்த ஆசைமுகம் தனக்கே உரிய இன்நகையுடன், அமுதமாகப் பருகுகிறது, அறிஞர் பிரானின் ஆசியையும் குருவின் அருளுரையையும் என்பதைச் சொல்லவா வேண்டும்?

குருமணி, கலைமணியை ஊடுருவிப் பார்த்துவிட்டார். தெள்ளத்தெளிந்தேறிய ஆசிரியபிரானின் கலைக் கொள்கையுடன் ஒட்டி ஒன்றிப் போய்விட்டது சீடருள்ளம்.

சிறு குழந்தைகளாக மாறிப் பிறந்தாலன்றி நீங்கள் பரமபிதாவின் பரமண்டல ராச்சியத்தில் புக முடியாது என்கிறது கிறிஸ்துவ வேதம். நம்முடைய கிழடு தட்டிய முகத்தோடு அகத்தையும், பார்த்துத்தான் அது அப்படிப் பேசுகிறது. எப்படியிருந்தாலும் கலையுள்ளத்திற்குக் குழந்தையுள்ளம்தான் திறவுகோல். வேறு கள்ளச் சாவி திறக்காது. இந்த உண்மையை அண்மையில் தமிழ்நாட்டில் நிலைநாட்டியது டி.கே.சி மேதாவிலாசம்.

**சீடரத்தினம்**

கவி ரவீந்திரரின் கீதம் ஒன்றில் துள்ளிக் குதித்துக் கூத்தாடி ஓடிப் போகிறாள் ஒரு பாப்பா, சடையும் தாடியுமாக இருந்த யோகியை நோக்கி.

தாத்தா நான், உன்னைப் போல எப்போது அவ்வளவு பெரியவள் ஆவேன்? என்று கேட்கிறாள். அதற்கு அவர் பாப்பா

உன்னைப் போல் ஆக வேண்டுமென்றுதானே நான் இத்தனைக் காலமாக தவம் கிடக்கிறேன் என்கிறார். கவிதையுலகில் டி.கே.சி நீண்ட காலம் மெய்யையும் பொய்யையும் சோதித்துப் பார்த்தார். தமிழ்த்தாயின் அருளாகிய தவசித்தி பெற்றுவிட்ட கலா யோகியானார். அவர் கண்டுபிடித்த ஒரு முதன்மையான சீடரத்தினம் நம் கலைமணி.

**புகழேணி**

காரிய உலகில் தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் எம்.ஏ., ஐ.ஏ.எஸ். பரீட்சைகளில் தேறி உத்தியோக ஏணியில் படிப்படியாக ஏறிடத் தண்டல் நாயகமும் (கலெக்டர்) ஆகிவிட்டார். குடும்பத்தை சரிவரக் காப்பாற்றிச் சில வாழ்க்கை வசதிகளும் செய்து கொண்ட சொந்தக் காரியம் இது. அந்தப் புகழ் மங்கி மறைந்து போகக் கூடியதுதானே?

ஆனால், ஓர் இலக்கிய சக்தியாக ஓங்கி, கலப்படமில்லாத கலையுணர்ச்சியை இதய அழகாகச் சேர்த்து, சிற்பக் கலையுலகம் புகுந்து, கல்லும் கதை சொல்லும். கவிபாடும், தத்துவம் பேசும் என்பதையெல்லாம் கண்டுகாட்டிய புகழ் கொஞ்சமோ, இந்தப் பாஸ்கரனுக்கு மறைவு ஏது, தமிழ்ச் சிற்பிகளின் அற்புதச் சாதனைகளை ஒரு சிற்றறையில் பெரும் பொக்கிஷம் பார்ப்பது போல் பார்த்து மக்கள் அனுபவிக்கும்படி நம் கலா பாஸ்கரன் உருவாக்கியிருந்த தஞ்சைக் கலைக்கூடத்தைப் பார்க்கும் பேறு பெற்றேன். அதுவும் அது பற்றிய இவரது விளக்கங்களும் கூட அற்புத சாதனைகளாகவே தோன்றின.

அந்தக் கலைக்கூடம் மூடி வைத்திருந்த அமுத கலசமொன்றை சற்றே திறந்து காட்டுவதுபோல காட்டியது. எங்களுக்குத் தொண்டைமான் பாஸ்கரனின் உள்ளமாகிய கலைக்கூடத்தையும்.

# சகோதரர் பாஸ்கரத் தொண்டைமான்

*கம்பன் அடிப்பொடி சா. கணேசன்*

திருநெல்வேலியில் ஒரு பாராட்டு விழா. ஒரு முதுபெரும் புலவர் எண்பதாண்டு முற்றிய மகிழ்ச்சியால் தமிழ் அன்பர்கள் கூடி விழா எடுக்கின்றார்கள். வெள்ளகால் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள்தாம் விழாவுக்குரிய பெருமகனார். எண்பதாண்டு நிறைந்த தமிழ்ப் பேரறிஞர் ஒருவரைப் போற்றி எடுக்கும் விழாவிற்கு, தக்க ஒருவர் கிடைக்க வேண்டுமே, தலைமை தாங்கி ஆசி அருள! தமிழர் செய்த தவமே மண்மிசை அவதரித்ததோ என்று வியந்து மகிழத் தமிழ் மொழிக்கும், தமிழ்க் கலைக்கும் ஒப்பற்ற பணியாற்றிய உ.வே.சா. அவர்களின் நினைவே பலருக்கும் வந்தது.

ரசிகமணி டிகேசி "வெள்ளகாலை வாழ்த்த உத்தமதான புரத்திற்குத்தான் தகுதியுண்டு" என்று தீர்ப்புக் கூறிவிட்டார்கள். பிறகு மறு பேச்சுக்கு ஏது இடம்? ரசிகமணியே ஐயரவர்களுக்கும் எழுதினார்கள். அவர்களும் இசைந்தார்கள்.

விழா இந்துக் கல்லூரியில் மாடியில் நடந்தது. விழா நேரத்திற்கு முன்பே தமிழ் அறிஞர்களும் அன்பர்களும் நிரம்பிவிட்டனர். விழா நேரத்தில் விழாத் தலைவர் தாட்சிணாத்திய கலாநிதி, மகாமகோபாத்தியாய, டாக்டர், உ.வே.சாமிநாதையர் அவர்கள் விழா மண்டபத்தை நோக்கி வருகிறார்கள். முதிர்ந்த பிராயம். தளர்ந்த உடல். விழா நடக்கும் இடமோ மேல்மாடி. எனவே தலைவரை அழைத்துக்கொண்டு, வழிகாட்டி, ஆங்காங்கே உள்ளனவற்றை எடுத்துரைத்துக் கொண்டு ஓர் இளைஞர் முன்னே செல்லுகிறார். தலைவர் மெல்ல மெல்ல மாடிப்படி ஏறி, விழா மண்டபத்தை அடைந்து தலைமைப் பீடத்தில் அமர்கின்ற வரையில் அந்த இளைஞர் கூடவே சென்று, பின்னர் ஐயரவர்களின் கண்ணுக்கு மறைந்துவிடுகிறார்.

விழா முறைப்படி தொடங்குகிறது. மாலைகள், வாழ்த்துமடல், வரவேற்பிதழ் முதலிய சடங்குகள் நிறைவேறி தலைவர் உரை தொடங்குகிறது. ஆம் ஐயரவர்கள் பேசத் தொடங்குகிறார்கள். தம்மை இப்பெரு விழாவிற்கு அழைத்தமைக்கு விழாக் குழுவினர்க்கு நன்றி கூறிய்தும் அவர்கள் மற்றொருவருக்கும் நன்றி கூறினார்கள்.

“என்னைப் பலகாலும் வற்புறுத்தி நீ மேலேற வேண்டும். எனவே நீ எப்பொழுதும் கற்பதில் ஊக்கம் உள்ளவனாயிருக்க வேண்டும் என்று கூறி ஒவ்வொரு நாளும் படி, படி” என்று தூண்டி வந்தவர்கள் என் ஆசிரியர் பெருமானாகிய பிள்ளையவர்கள். இப்பொழுது என்னை அப்படி ஊக்குவிப்பார் ஒருவரையும் காணேன். நான் நிரம்பக் கற்றவன் என்று நீங்களெல்லாம் என்னை மதித்து மரியாதை செய்யவும் தொடங்கிவிட்டீர்கள்.

“நெல்லைக்கு வந்தபின் நான் கற்க வேண்டியவை பல உள்ளன என்பதையும், அவற்றை எல்லாம் கற்றுத்தான் மேனிலை எய்த வேண்டும் என்பதையும் உணர்ந்தேன். மேலும் மேலும படி படி என்று சொல்ல ஆசிரியப் பெருமானாகிய பிள்ளையவர்கள் இல்லையே என்னும் குறையும் இன்று தீர்ந்தது. என்னை அழைத்து வந்தானே ஒரு பிள்ளையாண்டான், அவன் ஆண்டிலும் உருவத்திலும் சிறியவன்தான். ஆனால் அவன்தான் என் ஆசிரியப் பெருமானின் ஸ்தானத்தை இன்று வகித்தவன். ரெயிலடியில் இறங்கியது முதல் இங்கு வரும்வரை என் உடனேயே இருந்து கூடவே வந்து, படி படி என்று கூறி வழியும் காட்டி, மேலேற வேண்டும் என்று சொன்னதுடன் அமையாது, மேனிலைக்கே கொண்டு வந்து தலைமைப் பீடத்திலும் அமர்த்திச் சென்றுவிட்டான். ஆகவேதான், பிள்ளையவர்கள் ஸ்தானத்தை வகித்து, என்னை ஆண்டான் என்ற பொருள்பட இந்தத் தம்பியைப் பிள்ளையாண்டான் என்று குறிப்பிட்டேன்” என்று கூறியதுடன், “இந்தத் தம்பி பல்லாண்டு நல்வாழ்வு வாழ்க” என்றும் வாழ்த்தியருளினார்கள்.

சிலேடை நயம் தோன்றக் கூறிய அவ்வுரை மக்களைப் பெரிதும் மகிழ்வித்தது என்பதை, ஆங்கு ஒலித்த கைதட்டும் ஆரவாரமும் புலப்படுத்தின. அந்தத் தம்பியாகிய பிள்ளையாண்டான் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை என்னலாம். “தமிழ்த் தாயின் தவப்புதல்வர் திருவாயால் வாழ்த்துப் பெறவும், தம்பி என்று அமுதூர அழைக்கவும் என்ன பாக்கியம் செய்தேன்!” என்று எல்லையிலா இன்பத்தில் ஆழ்ந்த அவர் கண்களில் இரு சொட்டு நீரும் துளித்தன.

அந்தப் பிள்ளையாண்டான்தான் வெள்ளகால் எண்பதாண்டு விழாக் குழுவின் காரியதரிசியான திரு. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான். ஐயரவர்கள் வாய் மணக்கக் கூறிய தம்பி என்பதைப் பிற்காலத்தில் தமது புனைப்பெயராகக் கொண்டு எத்தனையோ கட்டுரைகள், கவிதைகளை தொ.மு.பா எழுதியுள்ளார்.

திரு. தொண்டைமான் வருமானத்துறையில் வருமானச் சோதனையாளராகச் சேர்ந்தார். படிப்படியாக மேலேறி, இந்திய நிர்வாகப் பணியாளர்களுள் ஒருவராகி மாவட்டக் கலெக்டர் வரை உயர்ந்து ஓய்வு பெற்றார்.

இவர் பாட்டனார் சுவையான சிறு பிரபந்தங்களையும் வண்ணக் கவிகள் பலவற்றையும் தந்தவர். இவர் தந்தையாரோ வண்ணக் கலவைகளால் மாந்தரை மகிழ்விக்கும் ஓவியம் பல படைத்தவர். இவருக்குக் குருவாகக் கிடைத்த ரசிகமணி டிகேசி ரஸாநுபவ மேதை என்பதை யாரே அறியாதார்? இந்த முப்பெருந் தொடர்பே பாஸ்கரத் தொண்டைமானை வளமாக்கியது என்று சொன்னால் அது மெய்யேதான்.

கலையும் தமிழும் தொ.மு.பாவுக்கு இரு கண்கள். தமிழ் வழியே கலையைக் காண்பார், துய்ப்பார், மனம் பறிகொடுத்து நிற்பார். தமிழை, தமிழ்க் கவியை ரசிப்பார், சுவைப்பார். இரண்டையும் பற்றித் தெளிவாகவும் கவர்ச்சியாகவும் பேசுவார், எழுதவும் எழுதுவார்.

இவருக்கு வாய்த்த பேறு இரண்டு. ஒன்று இவர் தமிழனாய்ப் பிறந்தது, மற்றொன்று இவர் முன்னோர்கள் நெல்லைக்குக் குடியேறியது. இல்லாவிட்டால் ரசிமகமணி என்று தமிழ் கூறும் நல்லுலகம் எல்லாம் ஒருமுகமாய்ப் பாராட்டும் டிகேசியின் உறவு இவருக்குக் கிட்டியிருக்குமா? அவர் உறவின்றி இவர் தமிழோடு ஒட்டி உறவாடி இப்படி எல்லாம் விளையாடத்தான் முடியுமா?

மகாத்மா காந்தியடிகளுக்குச் சத்தியமும் அஹிம்சையும்போல இவருக்குக் கலையும் தமிழும். காந்தியடிகள் கூறுவார், தமக்குச் சத்தியந்தான் லட்சியம், அகிம்சை அச்சத்தியத்தை அடைய வாய்த்த வழிதான் என்று. ஆனால் அத்துடன் விட்டுவிட மாட்டார். லட்சியம் எவ்வளவுக்கு விழுமியதோ அவ்வளவுக்கு, லட்சியத்தை அடைய மேற்கொள்ளும் வழியும் விழுமியதாக இருக்க வேண்டும் என்றும் தெளிவுபடுத்துவார். அப்படித்தான் தொண்டைமானுக்குக் கலையும் தமிழும். கலை இவர் லட்சியம். கலையைக் கண்டு துய்க்கவும்,


'கம்பன் அடிப்பொடி' சா. கணேசன்

காட்டித் துய்க்கச் செய்யவும் மேற்கொண்ட பெருவழியே தமிழ்.

பாஸ்கரத் தொண்டைமான் கலைப்பித்தர். தமிழறிஞர். தெய்வம் தெளிந்தவர். தெளிந்தாரைப் பேணும் பண்பினர். நல்லனவற்றை யெல்லாம் காணத் துடிப்பவர். கண்டதும் அருமையைப் பாராட்டக் கூசாதவர். அப்படியே குறைகளை எடுத்துரைக்க அஞ்சாதவர். இனிப்புப் பண்டத்திலும் காபியிலும் எவ்வளவு ஆசையோ அவ்வளவு ஆசை அவருக்குத் தலயாத்திரை செய்வதிலே. எண்ணற்ற தலங்களுக்குச் சென்றார், கண்டார், உள்ளம் பறிகொடுத்தார், தமிழ் மக்கள் பலரையும் உள்ளம் பறிகொடுக்கச் செய்தார்.

குமரி முதல் வேங்கடம் வரையுள்ள பன்னூறு ஆலயங்களையும் கண்டார், வணங்கினார். சிற்பங்களையெல்லாம் ஆய்ந்தார். அந்த அழகிலே தோய்ந்தார். அவற்றை எல்லாரும் காணாமலே கண்டு அநுபவிக்கச்செய்தார். இமயம் வரை சென்றார். எத்தனையோ படங்கள் எடுத்தார். அவற்றின் குறிப்புக்களை எழுதிக் குவித்தார். அவற்றில் சில வெளிவந்தன, பலப்பல கிடந்துவிட்டன.

கம்பன் அடியார்களிலே சிறந்த ஒருவர் இவர். ஆண்டு தவறாமல் கம்பன் திருநாளில் கலந்து கொள்வதையே பெரும் பேறாகக் கருதி மகிழ்பவர். இவ்வாண்டுதான் வர முடியாமல் போய்விட்டது. இனி எங்கே இவரைக் காண்போம்? இவர் உரையைக் கேட்போம்? கம்பன் திருக்கூட்டத்திலே ஒருவர் இல்லை என்பதை மறக்க முடியாமல் நிலைநாட்டி விட்டுச் சென்றவர் சகோதரர் பாஸ்கரன்.

இவருக்குத் தமிழகத்தில் நிரந்தரமான நினைவுச்சின்னம் ஒன்று உண்டு. அதுதான் இவர் எடுத்த தஞ்சைக் கலைக்கூடம். கலை உள்ளவரை, தமிழ் உள்ளவரை, இவர் புகழைப் பேசிக் கொண்டிருக்கும் அக்கலைக்கூடம்.

கம்பன் திருஅடியான்
　　கன்னித் தமிழத்தொண்டன்
செம்பு,சிலை, சிற்பத்
　　திறன்ஆய்வான் – நம்பன்மால்
வீற்றிருக்கும் ஆலயங்கள்
　　மேவி அவற்றின்சீர்
சாற்றியவன் பாஸ்கரனேதான்.

காடு, மலை, வாய்க்கால்,
　　கழனி, குளம், சாலை, இடி
பாடுகளும் சென்றடைந்து
　　பார்த்தெடுத்த கேடில்
சிலைக்கூட்டந் தன்னையவன்
　　சேமித்தான் தஞ்சைக்
கலைக்கூடம் கண்டதிலே காண்.

தேடிச் சிலைகளுடன்
　　செப்புப் படிமங்கள்
நாடிக் கொணர்ந்தங்கே
　　நாட்டினான் – கூடிநிதம்
மக்கள்பலர் நோக்கி
　　மகிழ்கின்றார், பாஸ்கரனுக்கு
எக்காலும் நன்றி இசைத்து.

கல்லில் மலரும்
　　கலையழகெல் லாம்திரட்டி
வெல்லத் தமிழால்
　　விருந்தளித்த நெல்லைநகர்
ஈந்தளங்கள் பாஸ்கரன்தான்
　　எம்பெருமான் பொன்னடிக்கிழ்
சாந்தியுடன் வாழ்வான் சமைந்து.

ஒத்த பல ஆலயங்கள் ஓங்கிவிட்டதென்றறிந்து
எத்தனையோ கோயிலவை ஏங்கி நிற்கும் இத்தரையில்
நின்றுவளர் தம்புகழும் நீளுதற்குப் பாஸ்கரன்தான்
என்று வருவான் இங்கே என்று.

# ஓர் இலக்கிய சகாப்தத்தின் நிறைவு

*நா. கிரிதாரி பிரசாத்*

மனித வாழ்க்கை எப்படி அமையவேண்டும் என்று ஆங்கிலப் பேராசிரியர் Bertrand Russal கூறுவது இது :

"கண்ணுக்குப் புலப்படாத மலை உச்சிகளில் பெய்யும் மழைத்துளிகள் சிறு அருவியாகத் திரண்டு, ஆறாகப் பெருகி, நீண்டு, அகன்று, சலனமற்று சமுத்திரத்துடன் கலந்து தன்னைக் கரைத்துக்கொள்வது போல். மனித வாழ்வு தொடக்கத்தில் சிறியதாய், ஆனால் செல்லச் செல்லப் பெரியதாய் அமைய வேண்டும். சமாதானமும் சாந்தியும் அதன் இலக்கியங்களாகும்."

எனது அருமை நண்பர் திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் என் மனத்தில் உதிக்கும் முதல் எண்ணம் இதுவே. அரசாங்க அலுவலகத்தில் ஒரு சிறு குமாஸ்தாவாக வாழ்க்கையைத் தொடங்கி தன் சலியா உழைப்பினாலும், நல் இயல்பாலும் ஒரு மாவட்ட கலெக்டராக உயர்ந்த அவருடைய வாழ்க்கை நம் அனைவருக்கும் ஒரு எடுத்துக்காட்டு. நல்வாழ்வு வாழ்வதற்கு நற்சிந்தனைகள் இன்றியமையாதவை. அத்தகைய நற் சிந்தனைகளில் தலையாய ஒன்று, தனக்கென வாழாமல் பிறருக்காகவும் வாழ வேண்டும் என்னும் சிறந்த எண்ணமே.

இப்பெருமகனாரைப் பற்றி அடியேன் கேட்டதுண்டு. ஆனால் நேரில் கண்டதில்லை. எங்கள் முதல் சந்திப்பு, பத்து ஆண்டுகளுக்கு முன் கரூர் பொது சமய சன்மார்க்கத்தில் நடைபெற்றது. அன்று அடியேன் 'பகவான் இராமகிருஷ்ணர்' என்னும் தலைப்பில் பேசியதாக நினைவு. திரு. தொண்டைமான் அவர்கள் "எவ்வுருவோ நின் உருவம்" என்னும் காரைக்கால் அம்மையாருடைய

சொற்றொடரைத் தலைப்பாக வைத்துப் பேசினார். சொற்பொழிவு களும் முடிந்தன. வள்ளுவன் சொன்ன வாக்கும் பலித்தது.

**"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்**
**நட்பாம் கிழமை தரும்."**

அன்று முதல் இன்று வரை, திரு. தொண்டைமான் அவர்கள் என் குடும்பத்தில் ஒருவராகவே ஆகிவிட்டார். என் இல்லத்தில் நடைபெற்ற என் புதல்வியின் திருமணத்திற்குத் தலைமை தாங்கி அதை ஒரு தமிழ்த் திருமணமாகவே நடத்தும் உறவினராகவே மாறிவிட்டார்.

திரு. தொண்டைமான் அவர்களை நன்கு அறியும் வாய்ப்பு 1962 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 5 ஆம் தேதி முதல் மே மாதம் 5 ஆம் தேதி வரை அமைந்தது. அடியேனும் என் உற்ற நண்பர் கோவை திரு. கே. ஆர். இராதாகிருஷ்ணனும், திரு. தொண்டைமான் அவர்களும், ஓர் அகில இந்திய சுற்றுப் பிரயாணத்தைக் காரிலேயே மேற்கொண்டோம். சுமார் 10,000 மைல்கள் சுற்றினோம். இந்திய நாட்டின் கலைச் செல்வங்களைப் பார்ப்பதும், சரித்திரப் பிரசித்தி பெற்ற நகரங்களைக் காண்பதும், தமிழ் மக்கள் குடியிருக்கும் இடங்களுக்குச் சென்று சொற்பொழிவு ஆற்றுவதுமே எங்கள் நோக்கமாக அமைந்தது. அந்த அறுபது நாட்களை எங்கள் வாழ்நாளில் என்றும் மறக்க முடியாத நாட்களாகச் செய்தவர் திரு. தொண்டைமான் அவர்களே. திருவாசகத்தின் ஒரு வாசகத்தை இங்கு குறிக்கிறேன்.

**"காட்டாதன எல்லாம் காட்டி, சிவம் காட்டி**
**தாள் தாமரை காட்டி, தன் கருணைத் தேன் காட்டி"**

என்பது போல காண்பதற்கு அரிய இந்திய நாட்டையே காட்டிவிட்டார். ஒன்றுக்கும் பற்றாத எங்களையும் உடன் அழைத்துப்போய், இந்திய நாட்டின் பழம்பெரும் செல்வங்களாகிய, அஜந்தா, எல்லோரா, கஜுராஹோ, கோனாரக், புவனேஸ்வர், தில்வாரா ஆலயங்கள் இவற்றைக் காட்டியபோது நாங்கள் பெறுதற்கு அரிய பெரும் பேற்றை பெற்றதாகவே கருதினோம். கலையின் வாசனையையே அறியாத எங்களையும் கலைஞர்களாக்கிய பெருமை அவர்களையே சாரும்.

மானிடம் பாட விரும்பாத கவிகள் உலகில் எத்தனையோ பேர். எனக்கும் அதேபோல் யாரையும் மிகைப்படுத்திப் பேச

விருப்பம் இல்லை என்றாலும் எங்கள் பிரயாணத்தில் நிகழ்ந்த ஒரு மறக்கமுடியாத நிகழ்ச்சியைக் குறிப்பிட விரும்புகிறேன். நாங்கள் பல நகரங்களில் சொற்பொழிவு ஆற்றினோம். பூனா, பம்பாய், நாசிக், இராஜ்கோட், டெல்லி, கல்கத்தா முதலிய பல இடங்களிலுள்ள தமிழ்ச் சங்கங்களில் பேசினோம். திரு. தொண்டைமான் அவர்கள் ஒரு அதிசய பேச்சாளர். அவர் என்ன பேசுவார் என்று அறிவது சுலபமல்ல. பேச்சு எந்தத் திசைகளிலும் செல்லும், அது ஒட்டியும் இருக்கும். சில சமயம் வெட்டியும் அமைந்துவிடும். அன்று சபையில் கூடியுள்ள மக்களைப் பொறுத்தே பேச்சு அமையும். இவர் ஒரு அசாதாரண சொற்பொழிவாளர். பேச்சுக்கள் யாவும் ஒரு புதிர் போலத்தான் இருக்கும். எங்கள் முதல் பேச்சு பூனா நகரத்தில். அன்று எங்களை வரவேற்ற பூனா தமிழ்ச் சங்க அமைச்சர் திரு. சபாபதி, தொண்டைமான் அவர்களை முன்பே நன்கு அறிந்தவர். கல்கி வாயிலாக வாரந்தோறும் கட்டுரைகளைப் படித்து எப்பொழுது காண்போம் என்று ஏங்கியிருந்தவர். அடியேனைப் பற்றி அங்கு ஒருவருக்கும் தெரியாது. ஆதலால் அறிமுகப்படுத்தும் பணியைத் தொண்டைமான் அவர்களே ஏற்றுப் பேசினார்கள்.

"திரு. பிரசாத் வடநாட்டிலிருந்து குடிபெயர்ந்து பல ஆண்டுகளுக்கு முன் தென்னாட்டுக்கு வந்த வடவர். வள்ளல் இராமலிங்கர்பால் பேரன்பு கொண்டவர். மனம் உருக திருவாசகத்தையும் திருஅருட்பாவையும் பேசுபவர். கேட்போருடைய உள்ளங்களைக் கரைத்து ஆனந்த மேலீட்டால் தானும் அழுது கேட்பவர்களையும் அழச் செய்பவர். ஒரு அதிசயம். அவர் ஆயிரம் ஆயிரம் அருட்பாக்களைப் படித்து அவற்றை மறவாமல் ஆற்று ஒழுக்கு போன்று பாடுவதுடன், ஒருமுறை படித்ததை மறக்காமல் நினைப்பில் வைக்கும் அதிசய மனிதர். நானும் அவரைப் போலவே ஆயிரம் ஆயிரம் பாடல்களைப் படித்திருக்கிறேன். ஆனால் படித்ததெல்லாம் எனக்கு மறந்து தொலைகிறது. ஆனால் அவருக்கோ அப்படியே நினைவில் இருக்கிறது. இதுதான் எங்களுக்குள்ள வித்தியாசம்.

இனி அவருடைய பேச்சைக் கேளுங்கள். இது ஒரு வடவரின் தமிழ்ப் பேச்சு - ஞாபகம் இருக்கட்டும்" என்றார். இந்த அவருடைய புகழுரையை அடியேன் என்றுமே மறந்ததில்லை. அன்றைய இராமலிங்க வள்ளலைப் பற்றிய பேச்சு அவர்களுடைய முகவுரையில் மிகச் சிறப்பாக அமைந்ததுடன், அவர்கள் கூறியது போலவே பலர் கண்ணீர் சிந்தவும் காரணமாயிருந்தது.

திரு. தொண்டைமான் அவர்கள் ஓய்வு பெறுவதற்கு முன் சில ஆண்டுகள் கோவையில் உதவிக் கலெக்டராக பணியாற்றினார்கள். அது போழ்து கோவையில் சன்மார்க்க சங்கத்தை நிறுவிய திரு. வி. சி. சுப்பையாக் கவுண்டர் அவர்களுக்கும் திரு. தொண்டைமான் அவர்களுக்கும் நெருங்கிய நட்பு ஏற்பட்டது.

தொண்டைமான் அவர்கள் எங்கு சென்றாலும் ஒரு இலக்கிய உலகத்தைச் சமைக்கும் இயல்புடையவர்கள். அதேபோல் கோவையிலும் நன்னெறிக் கழகம் என்னும் பெயரில் ஒரு கழகத்தைத் தொடங்கி கவிச் சக்கரவர்த்தி கம்பனுக்கு ஒரு விழா எடுத்தாகள். இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அன்று ஜில்லா போர்டு தலைவராக இருந்த மந்திரி மன்றாடியார் அவர்களும், இவ்விழாவில் கலந்து கொண்டார்கள். திரு. வி.சி. சுப்பையாக் கவுண்டர் அவர்கள் அழுத்தமான சைவப் பற்று உடையவர்கள்.

சேக்கிழார் பெரிய புராணத்தைக் காட்டிலும் சிறந்த நூல் ஒன்று இல்லை என்று கூறும் இயல்புடையவர்கள். சேக்கிழார் இருக்கக் கம்பனுக்கு விழா எடுப்பது என்பது அவர்களுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. இவ்விழாவிற்கு நன்கொடை கொடுக்கவும் அவர்களுடைய தாராளமான மனம் முழுமையாக இடம் தரவில்லை. இதனைக் குறிப்பாக உணர்ந்த திரு. தொண்டைமான் அவர்கள் கவுண்டர் அவர்களைப் பார்த்துக் கம்பனுக்கு விழா எடுப்பது போல் சேக்கிழாருக்கும் ஒன்று எடுக்கலாமே, தாங்கள் இருக்க எதைத்தான் செய்ய முடியாது என்று அவர் உள்ளம் களிக்கப் பேசி, வள்ளன்மை நிறைந்தவர்களையே அவ்விழாவின் செலவு முழுவதையும் எற்க ஏற்பாடு செய்தார்கள்.

திரு. கவுண்டர் அவர்கள் இசைந்து அன்று தொடங்கிய சேக்கிழார் விழாவை, பிறர் நன்கொடையின்றி அவர்கள் செலவிலேயே சிறப்பாகப் பல ஆண்டுகள் நடத்தியதுமின்றி, அவர்கள் இயற்கை எய்திய பின்பும் அன்றுபோல் என்றும் அவ்விழா நடக்க வழிவகுத்துச் சென்றார்கள். அவ்விழா ஆண்டுதோறும் நடைபெறும்போது எல்லாம் கோவை நகரத்திற்கு திரு. தொண்மைமான் அவர்கள் வழங்கிய அழியாத காணிக்கையாகவே அதனை நாம் கருதுகிறோம்.

இன்று அவர்களுக்கு அறுபது ஆண்டுகள் நிறைவு பெறுகின்றன என்றால், இதை ஒரு இலக்கிய சகாப்தத்தின் நிறைவு

என்றே சொல்ல வேண்டும். தமிழ் உலகத்தின் சிரஞ்சீவியாக அவர் என்றும் குன்றாப் புகழுடன் வாழ இறைவனை வேண்டுகிறேன். அவர்களுடைய இலக்கிய, சமய, கலைக் குடும்பம், இன்று இந்தியா முழுதும் பார்த்து இருக்கிறது. அக்குடும்பத்தில் அடியேனும் ஒருவனாக இருக்கிறேன் என்பதில் எவ்வளவு பெருமை. இவர்களுடைய வாழ்க்கையை விளக்கக் கீழ்க்கண்ட சொற்களே போதும்.

"To see a world in a grain of sand
And a Heaven in a wild flower
Hold infinity in the palm of your hand
And eternity in one Hour."

வாழ்க தொண்டைமான்.



குறவன் இராஜகுமாரியைத் தூக்கிச் செல்லல் [மற்றொரு புறம்]
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# கம்பன் புகழ் வளர்த்த கலைஞானி

## தி.க. சிவசங்கரன்

அமரர் பாஸ்கரத் தொண்டைமான் அவர்களைக் கடந்த கால் நூற்றாண்டாக நான் அறிவேன்.

நேரில் அதிகப் பழக்கம் இல்லை. நானும் அவரும் நெல்லையைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், எட்ட இருந்து கூட்டத்தோடு கூட்டமாய் எண்ணற்ற ரஸிகர்களில் ஒரு ரஸிகனாக நான் அவரது பேச்சையும், எழுத்தையும் சுவைத்திருக்கிறேன்.

1941, 42 ஆம் ஆண்டுகளில் நெல்லையில் மணியரசு செந்தமிழ்க் கழகம், நெல்லை வாலிபர் சங்கம், கலைக் கழகம் போன்ற பற்பல இலக்கியக் கழகங்கள் இருந்தன.

இச்சங்கங்களில் பெரும்பாலும் தேசபக்தியும் இலக்கிய பக்தியும் மிக்க இளைஞர்கள் இருந்தார்கள். அவர்கள் கம்பன், வள்ளுவன், இளங்கோ, பாரதி போன்ற மாமேதைகளின் இலக்கிய விழாக்களை அளப்பரிய உற்சாகத்துடன் கொண்டாடி வந்தார்கள். கையெழுத்து இலக்கிய இதழ்களையும், சொற்பொழிவுப் போட்டிகளையும் நடத்தி வந்தார்கள்.

மேற்கண்ட சங்கக் கூட்டங்களிலும், விழாக்களிலும் திரு. பாஸ்கரன் அவர்களுக்கு நிச்சயம் ஒரு பங்கு இருக்கும். அவர் தலைவராகவோ, பேச்சாளர்களில் ஒருவராகவோ கலந்து கொண்டு எங்களையெல்லாம் மகிழ்விப்பார்.

ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார், பேராசிரியர் ஆ. முத்துசிவன், பேராசிரியர் அ. சீனிவாசராகவன், பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் தூத்துக்குடி ஏ.ஸி. பால்நாடார் வெள்ளகால் ப. சுப்பிரமணிய முதலியார், பாஸ்கரத் தொண்டைமான் ஆகியோரின் பேச்சுக்களை நான் தவறாது கேட்டு அனுபவித்த காலம் அது.

கல்லூரிப் பாடத்தை விட இவர்களின் பேச்சும் எழுத்தும் எனக்குத் தேனாக இனித்த பொற்காலம் அது.

எனக்கு மட்டுமல்ல. எத்தனை எததனையோ இளைஞர்கள் இவர் தம் பேச்சிலும், கலா ரஸனையிலும், தமிழ்ப் பற்றிலும், சொக்கிச் சுழன்ற காலம் அது.

திரு. பாஸ்கரன் அவர்களை, ரசிகமணி டிகேசி, பால் நாடார், வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார் ஆகியோரின் பிரதம சீடராய் என்று கூறலாம். பாஸ்கரனின் கம்பராமாயணப் பித்துக்கு அவர்களே காரண கர்த்தர்கள். மாணவப் பருவம் முதலே தமிழ்ப் பற்றுக் கொண்டிருந்த பாஸ்கரனுக்கு, 1930 ஆம் ஆண்டு வாக்கில் ஆனந்த போதினி முதலிய பத்திரிகைகளில் திரு. ரா.பி. சேதுப்பிள்ளையைப் போல் எழுதி வந்த பாஸ்கரனுக்கு, டிகேசியின் உறவும் தோழமையும் ஒரு பெரும் பொக்கிஷமாக இருந்து வந்தன. ரசிகமணி டிகேசி அவர்களுக்கு பாஸ்கரன் மூத்த மகன் மாதிரி! டிகேசியோடும் டிகேசியின் குடும்பத்தோடும் அவ்வளவு ஈடுபாடு கொண்டவர் அவர்.

ரசிகமணி டிகேசி என்னும் வரலாற்றை எழுதியிருக்கிறார் பாஸ்கரன். அந்நூலிலிருந்து பாஸ்கரனின் எழுத்து வன்மையையும், குரு பக்தியையும் நன்கு அறிந்து கொள்ளலாம்.

தமிழ் அறிஞர் முதலியார் (வெ.ப.சு. முதலியாரைப் பற்றி) என்னும் நூலையும், வேங்கடம் முதல் குமரி வரை போன்ற நூல்களையும் உயிருள்ள தமிழில் எழுதியிருக்கிறார் அவர்.

பாஸ்கரன் அவர்களின் பேச்சைப் போலவே எழுத்திலும் இனிமை, தெளிவு, மிடுக்கு, ரஸனை ஆகியவை மிளிரும்.

பாவம் என்கிறார்களே, அத்தகைய உணர்ச்சி வெளிப்பாடு, கம்பீரமாகத் துள்ளி விளையாடும் பாஸ்கரனின் பேச்சக்களிலும் எழுத்துக்களிலும்!

எதைச் சொன்னாலும் ரஸம் ததும்ப, உருவ அழகோடு, நாடகத் தன்மையோடு, வசீகரமாகச் சொல்வார் பாஸ்கரன்.

பாஸ்கரன் அவர்கள் ஆங்கிலத்திலும், தமிழிலும் புலமை மிக்கவர். மேலை நாட்டுக் கலை இலக்கியத்திலும், கீழை நாட்டுக் கலை இலக்கியத்திலும், பண்பாட்டிலும் தோய்ந்தவர்.

பழமைக்கும் புதுமைக்கும் பாலமாகத் திகழ்ந்த பண்புள்ள தமிழ்க் கலைஞர் பாஸ்கரன்.

பேச்சு, எழுத்து ஆகியவற்றுடன் சிற்பம், சித்திரம், கட்டிடக்கலை, புகைப்படக் கலை ஆகியவற்றில் எல்லாம் அவருக்கு மிகுந்த பிரேமை.

அது யுத்தகாலம். தமிழ் இலக்கிய உலகத்தில் சி.என். அண்ணாதுரையும், அவரது திராவிட இயக்கத்தாரும் கம்பனோடு போர் தொடுத்த காலம்.

அப்பொழுதுதான் கம்பரசம், தீபரவட்டும் போன்ற நூல்களை சி.என்.ஏ. எழுதிய காலம். அப்பொழுது பாஸ்கரன் அவர்கள் அரசாங்க அதிகாரியாக இருந்து கொண்டே, கம்பன் புகழ் பாடிக் கன்னித்தமிழ் வளர்த்தார்.

சா. கணேசன் அவர்களுடன் தோளோடு தோள் நின்று, ஆண்டுதோறும் காரைக்குடியில் கம்பன் விழாவை நடத்தி வரத் தொடங்கினார். தமது இறுதி மூச்சு உள்ள அளவும் அவர் கம்பன் காதலராகவே இருந்துவந்தார்.

இன்றைய தலைமுறையிடையே கம்பன் புகழ் பரப்ப ஒரு மகத்தான இயக்கம் கண்டு அதனை நெஞ்சு உறதியோடும், ஆழ்ந்து அகன்ற தமிழ் உறவோடும், ரஸனையோடும், பண்பாட்டோடும் வழிநடத்தி தமிழ் மக்களின் நன்றி அறிதலுக்குப் பாத்திரமான தமிழ்த்தாயின் நற்றவப் புதல்வன், பாஸ்கரன்.

பாஸ்கரன் அவர்கள் நல்ல கவியை, பாவமும், உருவமும், தாளமும் லயமும் செறிந்த கலையை, எங்கிருந்தாலும் இனம் கண்டு எல்லோருக்கும் தெளிவாக எடுத்துரைக்க வல்லவர். கவிச்சக்கர வர்த்தி கம்பனிலிருந்து கவிமணி தேசிக விநாயகம்பிள்ளைவரை கற்றுத் தேறியவர் பாஸ்கரன். வள்ளுவனின் அறநெறி முதல், கிருஷ்ணாபுரம் சிற்பங்களின் கலைக்கோலம் வரையில் கவினுற விளக்கக் கூடியவர் பாஸ்கரன். நந்திக்கலம்பகம் முதல் அப்பரடிகளின் தேவாரம் வரை நாவினிக்கப் பேசக் கூடியவர் பாஸ்கரன்.

அவரது பேச்சிலும் எழுத்திலும் எடுப்பு, தொடுப்பு, முடிப்பு எல்லாம் வெகு நயமாக இருக்கும். எதாவது மேற்கோள் அல்லது நிகழ்ச்சி வருணனையுடன் துவங்கி, சொல்ல வந்த பொருளை வெகு ரஸமாக மனதில் பதிய வைக்கும் திறன் பெற்றவர் அவர்.

ஆனந்தவிகடன், கல்கி, கலைமகள் போன்ற பத்திரிகைகளின் விசேட மலர்களிலும், சாதாரண இதழ்களிலும் அவர் நிரம்பக் கட்டுரைகள் எழுதியுள்ளார். அவற்றைக் கடந்த கால நூற்றாண்டுக் காலமாக நான் ரஸித்து வந்துள்ளேன். அவர் எழுத்துக்களிலிருந்து அறிவும் பயனும் பெற்றுள்ளேன்.

பாஸ்கரனின் கலை இலக்கியக் கட்டுரைகள் உயர்ந்த ரஸிகத் தன்மையோடும், உருவ வார்ப்போடும் இருக்கும். எதையும் நன்கு சிந்தித்துத் திட்டமிட்டு, உழைத்து வெற்றிகண்டவர் அவர்.

பாஸ்கரனின் பேச்சிலும் எழுத்திலும் செய்நேர்த்தி இருக்கும். உழைப்பும் பண்பாடும் காணப்படும். உழைப்பால் உயர்ந்த உத்தமத் தமிழன் பாஸ்கரன்.

தாலுகா ஆபீஸ் குமாஸ்தாவாக இருந்து ஜில்லாக் கலெக்டராக ஓய்வு பெற்ற பாஸ்கரன், காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரையுள்ள கோவில்களையும், சிற்பங்களையும், நுட்பமாக வரைந்துள்ள பாஸ்கரன் நிறைவுவாழ்வு வாழ்ந்த ஒரு சீரிய தமிழறிஞர் என்பதில் ஐயமில்லை.

கோவில்களையும், அங்குள்ள சிலைகள் சிற்பங்களையும் தமிழர்களுக்கு இனிமையாக, தெளிவாக, சுவையாக இடையறாது அறிமுகம் செய்து வைத்த தமிழ் எழுத்தாளர் அவரைப் போல யாருமில்லை. இந்த விஷயத்தில் அவர் ஒரு அத்தாரிட்டி! ஒரு பெரும் நிபுணர்! அவரது திடீர் மறைவு இத்துறையில் ஈடு செய்ய இயலாத பேரிழப்பு ஆகும்.

பாஸ்கரன் ஒரு பக்திமான். சமய உணர்ச்சி மிக்கவர். இக்காரணத்திற்காக அவரைப் புகழுவதோ, இகழுவதோ எனக்குச் சம்மதம் இல்லை.

பாஸ்கரன் அவர்களை இந்து மதப் பிரச்சாரகராகவும், ஆதரவாளராகவும் மட்டுமே சாயம் தீட்ட முயற்சிக்கிறார்கள் ஒரு சிலர். அவர்கள் முழு உண்மையை அறியாதவர்கள். ஒரு கலைஞனை, இலக்கியவாதியை, ரஸிகனை எவ்வாறு எடைபோட வேண்டும் என்று தெரியாதவர்கள்.

பாஸ்கரன் கிறிஸ்தவப் பள்ளியில் பயின்றவர். அவரது குரு ஆத்ம நண்பர்களில் ஒருவரான பெரியார் பால்நாடார் ஒரு கிறிஸ்தவர். அவரது குடும்ப நண்பர்களில் ஒருவரான ஹிலால் அச்சக அதிபர் ஒரு முஸ்லிம்.

இந்து, முஸ்லிம், கிறிஸ்தவம் என்னும் மத பேதத்தையும், பார்ப்பனர், பார்ப்பனர் அல்லாதார் என்னும் சாதி பேதத்தையும், வெள்ளையன் கறுப்பன் என்னும் இனபேதத்தையும் கடந்து நின்ற இந்தியன், தமிழன் அமரர் பாஸ்கரத் தொண்டைமான்.

பாஸ்கரனுக்குச் சமயப் பற்று உண்டு. ஆனால் சமய வெறி கிடையாது. தமிழ்ப் பற்று உண்டு, ஆனால் தமிழ் வெறி இல்லை. கம்பன் என்னும் தோணியில் ஏறி, வாழ்க்கை என்னும் நெருப்பாற்றை அநாயாசமாக, ஆனந்தமாக நீந்திக் கடந்த கலை ஞானி, பாஸ்கரத் தொண்டைமான்.

- தமிழ்ச்செய்தி வாரமலர் - 11-04-1965



அப்ஸரஸ் நடனம்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# பளிங்குக் கண்ணாடி

## கி. இராஜநாராயணன்

அன்பர் பாஸ்கரத் தொண்டைமான் பழக்கத்துக்கு சுவாரஸ்யமான ஆள். பொழுது போகிறதே தெரியாது அவர்கிட்டே உட்கார்ந்திருந்தால்.

சிலபேர், தன் சம்பந்தப்பட்ட விஷயத்தைக் கூட அசுவாரஸ்யமாக ஏனோதானோ என்று வெளியிடுவார்கள். ஆனால் தொண்டமானோ அப்படியில்லை. விஷயங்கள் ஏற்பவர்தம்கோள் (ஏற்பவர்தம் வாங்கிக் கொள்பவர்களின் சக்தியைப் பொறுத்தது.)

தொண்டமான் அவர்களை முதன்முதலில் நான் எங்கே வைத்துச் சந்தித்தது என்று ஞாபகத்திலில்லை. ஆம், ஆம். இப்பொழுது ஞாபகத்துக்கு வருகிறது. சுமார் இருபத்திஐந்து வருஷங்கள் இருக்கலாம், ஒரு தமிழ் வருஷப் பிறப்பு. அதை ஒட்டி திருச்சி வானொலி நிலையத்தினர் ஒரு கவியரங்கம் - எழில் என்னும் பொருள் பற்றி ஏற்பாடு செய்திருந்தார்கள். கு. அழகிரிசாமி, கந்தசாமி செட்டியார், நடராஜன், நான் எல்லோரும் அந்தக் கவியரங்கத்துக்குப் போனோம். அரங்கத்தில் கலந்துகொள்ள அழைக்கப்பட்டவன் அழகிரிசாமி ஒருத்தன்தான். நாங்கள் சும்மா போனவர்கள்! தமிழ்நாட்டில் நடந்த, அதுவும் ரேடியோவில் டிகேசி அவர்களின் தலைமையில் நடந்த முதல் கவியரங்கம் அது. ரயிலில், இடைவழியில் விருதுநகரில் கொஞ்சநேரம் இறங்கி புத்தகக் கடைப்பக்கம் ஒரு நோட்டம் விடப்போனோம். பெண்கள் ஜவுளிக்கடையைப் பார்க்கிற மாதிரி, எங்களுக்குப் புத்தகக் கடையை பார்க்கிறது ஒரு வியாதி.

அந்தப் புத்தகக் கடையில் வைத்துப் பார்த்ததுதான் முதல் முதலில் அவரை. அவரும் புத்தகங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். நான் வெகுநேரம் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன். எனக்கு வித்தியாசமாக ஒன்றுமே தெரியவில்லை. யாராவது எங்கள்

கிராமத்துக்கு தாசில்தார் வருவாரல்லவா? அதுமாதிரி இருந்தார் அப்போ.

ரசிகமணி டிகேசி அவர்களுடைய பரம சீடர்களில் இவரும் ஒருவர். ஆனால் டிகேசிக்கும் இவருக்கு அநேக வகையில் வித்தியாசம் கண்டிருக்கிறேன். டிகேசி சிவப்பு, இவர் கருப்பு என்ற வித்தியாசத்தைச் சொல்லவில்லை நான்.

உதாரணமாக டிகேசி பாடல்களைப் பாடித்தான் காட்டுவார். இவர் எதுகை மோனைகள் தொனிக்க, வசனம் போலத்தான் சொல்லுவார்.

டிகேசி சிலைகளை அணுகும்போது பாவத்துக்குத்தான் முதல் இடம் கொடுப்பார். இவர் பக்திக்காகவும், சிற்ப நுணுக்கங்களுக்கும் முதல் இடம் தருவார். தன் வாழ்நாள் பூராவும் சிலைகளைப் பற்றியே தமிழர்களுக்கு எழுதுவதில் பொழுதைக் கழித்தார்.

மேடையில் சரளமாகப் பேசுவார், எழுத்து நடையும் அப்படியே.

அதிகாலையில் எழுந்துவிடும் பழக்கம் உண்டு. இந்த நேரம் தான் எழுதுகிறதுக்கு சொகம் என்று சொல்லுவார்.

வீடுகளுக்கு அருமையாக பெயர் வைப்பதில் மன்னன். தன்னுடைய இரண்டு வீடுகளுக்கும் கீழ்க்கண்டவாறு பெயர் வைத்திருந்தார். கூத்தர் குடில், சித்திரக் கூடம்.

பட்டு விசிறி மடிப்பு அங்கவஸ்திரத்தைக் கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொள்வதில் விருப்பம்.

கம்பை ஊன்ற அவசியம் இல்லாதுபோனாலும் சந்தனக் கம்பில் வேலைப்பாடுகள் அமைந்த கைத்தடியை சதா தன்னோடு வைத்துக் கொள்வதில் பிரியம்.

காலர் இல்லாத வெண்ணிற முழுக்கைச் சட்டை. சட்டையின் திறப்பில் மேலிருந்து கீழ்வரை தனியாக எடுத்து வைத்துக் கொள்ளும்படியான பித்தான்கள். மல்பீஸ் ஒற்றைத்தட்டு வேஷ்டி. செழுமையான கருத்த மேனி, தடித்த கண்ணாடி, வெண்மையான அசல் பற்கள். திருநீறும் குங்குமமும் அணிந்த நெற்றி. பக்க வகிடு எடுத்த சுருண்ட கிராப். மனம் திறந்த குலுங்கும் சிரிப்பு.

அவரைப் பார்த்தவர்கள், யாரும் நீரிழிவு வியாதிக்காரர் இவர் என்று சொன்னால் நம்பமாட்டார்கள். காப்பி சாப்பிடும் போது சீனிக்குப் பதிலாக துளி சாக்கிரின் சேர்த்துக் கொள்வார்.

அவரிடம் எனக்கு மிகமிகப் பிடித்த குணம், மனம் திறந்து பேசுகிறதும், உடம்பு குலுங்க சிரிக்கிறதும்தான். இப்பொழுது நினைத்தால் கூட அந்தச் சிரிப்பு என் கண்முன் வந்து தெரிகிறது.

பாஸ்கரத் தொண்டமான் அவர்கள் தமிழர்களுக்குப் பல நல்ல காரியம் செய்திருக்கிறார். தன் வாழ்நாளில் டிகேசியின் கடிதங்களில் ஒரு பகுதியை அச்சுக்குக் கொண்டு வந்து புத்தகமாக வெளியிட்டது.

தஞ்சை மாவட்டத்தில் கலெக்டராக இருந்தபோது புதைந்து கிடந்த நமது புராதன காலத்துச் சிற்பங்களைச் சேகரித்து ஒரு கலைக்கூடமாக அமைத்திருப்பது.

தன்னுடைய உத்தியோக காலத்தில் நடந்த ரஸமான சம்பவங்களைத் தொகுத்து எழுத எண்ணியிருந்தார். இது நிறைவேறியிருந்தால் தமிழுக்கு அருமையான புத்தகம் கிடைத்திருக்கும். இதை சாவகாசமாக, நன்றாகச் செய்ய வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தார்.

சில சமயம் நாம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும் போது சொல்கிறோமே, "பொழுது போனதே தெரியலையே, சே, எவ்வளவு நேரமாகிவிட்டது!" என்று.

தொண்டமானுக்கு நேரமாகிவிட்டது. நேரம் போனது அவருக்கும் தெரியவில்லை. அங்கவஸ்திரத்தை உதறித் தோளில் போட்டுக்கொண்டு விட்டார்.

இனி யாரால் தடுக்க முடியும் அதை?

# பண்பில் சிறந்த பாஸ்கரனார்

*தீப. சிதம்பரநாதன்*

சென்ற ஆண்டு திருக்குற்றாலத்தில் நடைபெற்ற சாரல் மகாநாட்டில் ஒரு தனிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள், நமது மதிப்பிற்குரிய திரு தொண்டைமான் அவர்கள். இலக்கிய மணமும் கவிதை நயமும், சிற்பக்கலையின் விளக்கமும் பக்தி அனுபவமும் நிறைந்து அமைந்திருந்தது. அன்றையப் பேச்சு, சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு எப்படி இருந்ததோ அப்படியே இருந்தது அன்றும். எனக்குக் கொஞ்சம் வியப்புதான். இந்த வயதிலும் ஒரு மணி நேரத்துக்கும் மேலாக எப்படி இவர்களால் இவ்வளவு வேகமாகவும் உணர்ச்சி வயப்பட்டும் பேச முடிகிறது என்ற கேள்வி மனத்தில் எழுந்தது. பின்பு ஒரு நாள் இது பற்றி அவர்களிடமே கேட்டுவிட்டேன். அதற்கு அவர்கள் எனக்கு ஒருவிதமான அசதியும் ஏற்படவில்லையே என்றார்கள்.

பேசுவதில் மட்டுமல்ல, ஊர் ஊராக அலைந்து திரிவதிலும் அவர்களுக்கு அலுப்போ சோர்வோ அடைவதாகத் தெரியவில்லை. அவர்கள் பிரயாணத் திட்டத்தைக் கேட்டால் மலைப்பாய் இருக்கும். இன்று கோவை பட்டிமண்டபம் தலைமை, நாளை ராமநாதபுரத்தின் ஒரு மூலையில் ஒரு விழாவில் பங்கு கொண்டு விட்டு அதன் பின் இரண்டு தினங்களில் சென்னையில் வேறு ஒரு விழாவுக்குப் போய் விடுவார்கள். சில சமயம் அவர்கள் பிரயாணத் திட்டத்தைச் சொல்லுவார்கள். அதைக் கேட்கவே நமக்கு மூச்சுத் திணறும். அவர்கள் சொல்லவும் திணற மாட்டார்கள். பயணம் செய்யவும் திணறமாட்டார்கள். இதையெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது இவர்களுக்கு அறுபது வயது நிரம்பிவிட்டது என்பதை நம்பவே முடியவில்லை.

இதையெல்லாம் பணியில் அவர்களுக்கு ஏற்பட்டுள்ள அபார ஊக்கமும், அதனின்று கிடைக்கும் ஆனந்தமுமே இப்படியெல்லாம்

அவர்கள் உற்சாகமாய் இருப்பதற்குக் காரணம் என்றாலும் அவர்கள் கைக்கொண்டுள்ள சில சிறந்த, வாழ்க்கை நெறிகளும் பெரிதும் உதவுகின்றன. நான் சிறு பையனாய் இருந்தது முதலே அவர்களுடன் நெருங்கிப் பழகும் பேறு எனக்கு வாய்த்தது. சரளமாய்ப் பேசிப் பழகும் தன்மையும், அன்பு உள்ளமும் அரிய பண்பாடுகளும் என்னை அவர்கள்பால் ஒட்ட வைத்தன. ஒரு தந்தைக்கும் மகனுக்கும் உள்ள உறவும், பாசமும், உரிமையும் எங்களிடையே நிலவிவிட்டது. எனது தாத்தா ரசிகமணி டி.கே.சி அவர்கள் மறைவுக்குப் பின்னர் ஸ்ரீ தொண்டைமான் அவர்களுக்கும் எனக்கும் கடிதப் போக்குவரத்து அதிகப்பட்டது. அவர்கள் ஓய்வு பெற்றுத் திருநெல்வேலி வந்ததன் பின் அடிக்கடிச் சந்தித்துக் கொள்ளவும் உறவாடவும் முடிந்தது. அவர்களுடன் நெருங்கிப் பழக நேர்ந்த காரணத்தால் அவர்களுடைய உற்சாகத்துக்கும் சலியாத உழைப்புக்கும் நிம்மதியான வாழ்க்கைக்கும் உள்ள ரகசியம் புலப்பட்டது.

கவலை என்பது அவர்களிடம் அணுக முடியாது. நடந்து போனதை எண்ணி எண்ணி மருகக்கூடாது என்று சொல்வது சுலபம். நடைமுறையில் கைக்கொள்வது தான் சிரமம். தொண்டைமான் அவர்கள் செயலிலும் அதைக் கையாண்டு வெற்றிபெற்று விட்டார்கள். நடந்துபோன துயரங்கள் எல்லாம் உடனுக்குடனே அவர்கள் மனதைவிட்டுப் போய்விடும் போலிருக்கிறது. அவர்கள் பேசும்போது பார்த்தால் பழைய நினைவுகளில் மகிழ்ச்சி தரும் ரசமான விஷயங்களே வரும். சாதாரணமாக நாமெல்லாம் நாம் அடைந்த சங்கடத்தைத் தானே யாரிடமாவது சொல்லித் தீர்க்கப் பார்க்கிறோம்.

அவர்கள் செய்யும் காரியங்கள் அனைத்தையும் முன்னதாகவே சிந்தித்துச் சிந்தித்து முடிவுகட்டி அதை நிறைவேற்ற ஒரு திட்டமும் வகுத்துவிடுவார்கள். மனசில் உருவான திட்டம் மிகச் சுளுவாய் செயல்பட்டுவிடும். இலக்கிய விழா, கலை விழா முதலியவைகளை அவர்கள் பொறுப்பில் விட்டுவிட்டால் போதும். விழா ஜாம் ஜாம் என்று நடந்துவிடும். பொறுப்பை அவர்களிடம் கொடுத்தவர்களையே வேலை வாங்கி காரியத்தைச் சாதித்து விடுவார்கள். முப்பது ஆண்டுகள் ரெவின்யு இலாகாவில் பணியாற்றியவர்கள் அல்லவா?

நான் மிகவும் அவர்களிடம் உயர்வாகக் காணும் பண்பு ஞாபகச் சக்தி. அடிக்கடி அதை எண்ணி எண்ணி அதிசயப்படுவேன். கடந்த நாற்பது ஐம்பது ஆண்டுகளில் நடந்த சிறு சிறு நிகழ்ச்சிகள் கூட அவர்கள் நினைவுக்கு வந்துவிடும். அரசாங்க அலுவலில் ஏற்பட்ட

அனுபவமாகட்டும், இலக்கிய மேடைகளில் நடந்தவையாகட்டும், பத்திரிகைக் கட்டுரையாகட்டும் அப்படியே ஒரு சித்திரமாய்த் தோன்றிவிடும் அவர்களுக்கு.

எக்குத்தப்பில் என்னத்தையாவது அவர்களிடம் ஒப்புக்கொண்டு விட்டால் ஆபத்துதான். அதை நடத்தி முடியும்வரை கார்டுக்கு மேல் கார்டு போட்டு ஊசி குத்திவிடுவார்கள். ஆனால், நம் காரியம் ஒன்றை அவர்கள் ஒப்புக்கொண்டு விட்டாலோ அதை அவர்கள் சொந்தக் காரியமாகவே எடுத்துக்கொண்டு விடுவார்கள். நாம் ஒன்றும் அவர்களுக்கு ஊசி குத்த வேண்டாம். ஹாய்யாக ஈச்சேரில் படுத்துக் கொண்டு விடலாம்.

மரியாதை, ஆடம்பரம், பவுஷ° இதெல்லாம் அவர்கள் எதிர்பார்ப்பவர்கள் அல்ல. எங்கு சென்றாலும் தம்மைத் தனியாய்க் கவனிக்க வேண்டும் என்று நினைக்க மாட்டார்கள். சாதாரணமாய் எல்லாருடனும் பழகிக் கொள்வார்கள். புதிதாய்ப் பழக்கமான நண்பர்களுடனும் பல நாட்பட்ட சிநேகிதருடனும் உரையாடுவது போல வெகு சரளமாகப் பேசி உறவுகொண்டு விடுவார்கள்.

உடல் நலத்தை மிகவும் அக்கறையாகப் பேணிக் கொள்வார்கள். அதுவே அவர்களை இந்த அறுபத்தியோறு வயதிலும் இளைஞர் போல் ஓடவும் ஆடவும் செய்கிறது என்றால் மிகைஅன்று. ஓய்வு பெற்று வந்த புதிதில் ராமநாதபுரம் ஜில்லாவில் பிள்ளையார்பட்டி என்ற ஊரில் ஒரு ஆறு தினங்கள் மௌன விரதம் மேற்கொண்டார்கள். மேடைப் பேச்சிலும் சரி சாதாரண உரையாடல்களிலும் சரி மிகவும் அதிகமாக ஈடுபாடு உள்ளவர்கள் ஆறு தினங்கள் மௌனமாய் இருப்பது என்பது பெருஞ்சாதனை தான். இது அவர்களிடம் உள்ள கட்டுப்பாட்டை வெளிப்படுத்துகிறது, மௌனம் என்பது வாயினால் பேசாதுமட்டும் இருப்பதால் பயனில்லை. எந்தவிதமான வெளியீடும் இருக்கப்படாது என்று எழுதிக் கொடுப்பது கூட மிகக் குறைவாக வைத்துக் கொண்டார்கள் அந்த விரதத்தின் போது. மௌன விரதத்தின் காரணமாக ரத்த அழுத்தம் குறைந்து உடல் நிலையிலும் ஒரு தெம்பு ஏற்பட்டதாகச் சொன்னார்கள். தினமும் மாலையில் இரண்டு மைல் நடப்பது அவர்கள் வழக்கம். காலையில் 4.30 மணிக்கே எழுந்து விடுவார்கள். கட்டுரைகள் கடிதம் எழுதுவதெல்லாம் அப்போதுதான். தினசரி வாழ்க்கையிலும் பழக்கவழக்கங்களிலும் மற்றவர்களுடன் தொடர்பு கொள்வதிலும் தனியான ஒரு ஒழுங்கும் திட்டமும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதன் காரணமாக நிம்மதியாகவும்

சோர்வின்றியும் அவர்களால் இருக்க முடிகிறது. அவர்கள் உள்ளத்துக்கு உவந்த இலக்கியப் பணி எந்தவித இடையூறும் இல்லாது நடைபெற்று வருகிறது.

அவர்கள் இலக்கியப் பணியைப் போன்று, அவர்களிடம் காணப்படும் குண நலங்கள் எவ்வளவோ இருக்கின்றன. ஒவ்வொன்றையும் தனித்தனியே எடுத்து நோக்கும் போது அவர்கள் புகழும் பண்பாடும் மிக மிக விரிந்துகொண்டே போகும். அவர்களைப் பற்றி மதிப்பு நம் உள்ளத்தில் என்றும் இல்லாத அளவு உயர்ந்துவிடும். எங்கள் தாத்தா ரசிகமணி டி.கே.சி அவர்களைக் குருவாகக் கொண்டு இலக்கியப் பணி புரியும் தமிழன்பர்கள் எல்லாரிலும் வயதில் மூத்தவர் தொண்டைமான் அவர்கள். ரசிகமணி டி.கே.சி அவர்களைப் பற்றி தொண்டைமான் அவர்கள் நினையாத நாள் கிடையாது. பேசாத மேடை கிடையாது. எழுதாத எழுத்துக் கிடையாது. தொண்டைமான் அவர்கள் இலக்கியப் பேச்சில் உயர்வு பெறும் மூன்று பெயர்கள் கவிச்சக்கரவர்த்தி கம்பர், ரசிகமணி டி.கே.சி திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலி. மேற்கண்ட மூன்று பெயர்களோடும் தம்மை இணைத்துக் கொண்டு அயராது தமிழ்த் தொண்டாற்றி வரும் பெரியார் ஸ்ரீ பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து தமிழ் இலக்கிய சேவையும் கலா ரசனையையும் வளர்க்க ஆண்டவன் அருளை வேண்டுகிறேன்.



ஆனந்தவிகடன் ஆசிரியர் தேவன் அவர்களுடன்...

## பாஸ்கர தரிசனம்

### *சிந்தனா*

சிறுவயது முதற்கொண்டே எனக்குக் கோயில், குளம் இவற்றிலெல்லாம் மிக்க ஈடுபாடு உண்டு. ஏதோ, நல்ல பக்தியில் திளைக்கும் குடும்பத்தில் பிறந்தவனாகையால் இப்பண்பு என்னோடு சிறிது ஒட்டிக் கொண்டிருந்ததில் ஆச்சரியப்படுவதற்கில்லை. கோயில்களைப் பற்றியக் கட்டுரைகளைக் கண்டாலே மிக்க ஆர்வமுடன் படிப்பேன். சமயம் வாய்க்கும்போதெல்லாம் தலங்களைக் கண்டு தரிசிப்பதோடு, கோயில்களிலுள்ள கலைச் செல்வங்களைப் பற்றியும் நுணுகி ஆராய்வேன். கல் தூண்களில் செதுக்கப்பட்டிருக்கும் சிற்ப வடிவங்களுக்கு விளக்கம் தேடிக் கண்டுபிடித்துவிட்டால் எனக்குத் தலைகால் தெரியாது. நண்பர்களிட மெல்லாம் இதைப் பற்றிச் சொல்லிச் சொல்லிப் பெருமையடித்துக் கொள்வேன். கோயில்களைப் பற்றி நான் கண்டதையும் கேட்டதையும் எழுதி அவர்களிடையே சுற்றுலா கூடச் செல்வதுண்டு.

கோயில்களைக் குறித்துக் கட்டுரை எழுதுவதிலே எனக்கு நன்கு அறிமுகமானவர்கள் உயர்திரு. எம்.கே. ரங்கசாமி ஐயங்கார், உயர்திரு. தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் ஆகியோர்தான். இவ்விருவருடைய எழுத்தோவியங்கள்தான் எனக்குக் காணக் கிடைத்தனவே ஒழிய அவர்களைப் பற்றிய வாழ்க்கை விவரங்கள் நான் அறியாதவையே. அவர்கள் எப்படி இருப்பார்கள் என்று கூட எனக்குத் தெரியாது.

தொடர்ந்து படித்து வந்ததில் முன்னவரது கட்டுரைகளே எண்ணிக்கையில் அதிகமாகிக் கொண்டு வந்தன. பின்னவரது கட்டுரைகளோ பெரும்பாலும் ஆண்டு மலர்களிலோ அல்லது சிறப்பு மலர்களிலோதான் காணக் கிடைத்தன. என்றாலும் பின்னவரது கட்டுரைகளிலே ஏதோ ஒருவிதக் கவர்ச்சி இருப்பதை மட்டும்

என்னால் உணர முடிந்தது. இந்த உணர்வு அவரைப் பற்றி அறிவதில் ஆர்வத்தை வளர்த்தது.

அப்போதெல்லாம் இலங்கை தொழிற்கட்சித் தலைவர் உயர்திரு. தொண்டைமான் அவர்களைப் பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் நிறைய வரக் கண்டிருக்கிறேன். அவரும், இந்தத் தல வரலாறு எழுதுகின்ற அறிஞரும் ஒருவர்தானா? என்ற ஐயம் கூட எனக்கு ஏற்பட்டதுண்டு. ஆனால், பின்னர் ஆனந்தவிகடன் தீபாவளி மலரொன்றில் இலக்கிய மேடை என்ற பகுதியில் வெளிவந்த உயர்திரு தொ.மு.பாஸ்கரத் தொண்டமான் அவர்களது புகைப்படம் என்னுடைய ஐயத்தைப் போக்கிவிட்டது. இருவரும் ஒருவரல்லர் என்பதை நன்கு விளங்கிக் கொண்டேன். ஆனாலும் அவர் என்ன வேலை பார்க்கிறார் என்பதெல்லாம் புரியாத புதிராகவே இருந்து வந்தது. நீண்ட நாட்களாக விடை தேடினேன். கிடைக்கவில்லை.

வட ஆர்க்காடு மாவட்டத்தில், குடியேற்றம் தாலுகா அலுவலகத்தில் வேலை பார்க்க எனக்கு உத்தரவு வந்தது. 16.4.55 அன்று காலை வேலையேற்க வேண்டி குடியேற்றத்து அலுவலகத்தில் நுழையும்போதே என் கண்களைக் கவர்ந்தது என்.ஜி.ஓவினர் மாநாட்டு விளம்பரம். நெடுநாட்களாக இவர் யார் என்ற கேட்டுக் கொண்டிருந்தேனே அந்தக் கேள்விக்கு விடையிருந்தது அந்த விளம்பரத்தில். உயர்திரு தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான், M.A. Personal Assistant to the Collector of Tanjore என்று அதில் இருந்தது. எனக்கு ஒரே மகிழ்ச்சி. அந்த மகிழ்வின் நிறைவிலேயே அன்று நான் வேலையேற்றேன்.

பிறகு கன்னித் தமிழ்ப் பாடும் கவிஞர் திருக்கூட்டம் என்ற தலைப்பில் ஆனந்த விகடனில் வந்திருந்த அவரது புகைப்படமும், யார் நமக்கு வழிகாட்டி என்ற தலைப்பில் இரவீந்திரரின் அருமையான கவிதையொன்றைக் கவிதை வடிவிலே தமிழாக்கம் செய்திருந்த அவரது நேர்த்தியும் அவரை ஒரு பெருங்கவிஞர் என்று எடுத்துக்காட்டின.

சில நாட்கள் சென்றன. என்னைத் திருப்பத்தூருக்கு மாற்றினார்கள். அதன் பின்னர் வெளிவந்தது ஒரு அரசாங்க நியமனம். என்னுள்ளம் கவர்ந்த உயர்திரு தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களை வட ஆர்க்காடு மாவட்டத்தின் கலெக்டராக நியமித்திருப்பதாக அதில் கண்டிருந்தது. இதைக் கண்டவுடனே என் உள்ளம் விம்மிப் புடைத்துப் புளகாங்கிதமடைந்தது.

நமது மாவட்டத்தின் கலெக்டர் ஒரு பெருந் தமிழறிஞரல்லவா, ஏன் சிறந்த கவிஞர் கூட அல்லவா? என்று எண்ணி எண்ணி இன்பமுற்றேன். அவரைப் பற்றி அவரது எழுத்து வன்மையைப் பற்றித் திருப்பத்தூரிலுள்ள நண்பர்களிடமெல்லாம் நான் அறிந்தவாறு கூறுவதில் எனக்கு ஏதோ ஒரு மகிழ்ச்சி இருப்பதாகப்பட்டது. தமிழார்வமுடைய நண்பர்களெல்லாம் "இப்படிப்பட்டவரா நம்முடைய கலெக்டர்" என்று வாய்பிளந்து நின்றனர். அப்போது என்னுள்ளத்தில் இந்தக் கலெக்டரை எப்போது நேரே காணப்போகிறோம் என்ற ஏக்கமே உருவாகியிருந்தது. திருப்பத்தூருக்கு வராமலா போய்விடப் போகிறார் நாமும் என்றாவது ஒருநாள் பார்க்காமலா இருக்கப்போகிறோம் என்று எண்ணினேன்.

ஒருநாள் என்னுடைய எண்ணம் நிறைவேறும் காலம் வந்துவிட்டது. நண்பரொருவர் ஓர் அழைப்பிதழை என்னிடம் கொண்டு வந்து கொடுத்தார். கண்ணோட்டமிட்டேன். அன்று மாலை திருப்பத்தூர் அஞ்சல் அலுவலகம், மனமகிழ் மன்றத் திறப்பு விழாவில் உயர்திரு. தொ.மு. பாஸ்கரத் தொண்டமான் பேச இருப்பதாக அறிய வந்தது. அப்போது என்னுள்ளத்தே ஏற்பட்ட உணர்ச்சிகளை இப்போது என்னால் எடுத்துச் சொல்ல முடியவில்லை. நான் தேடியலைந்த வாய்ப்பு என்னைத் தேடியல்லவா வந்திருக்கிறது.

மாலை நிகழ்ச்சிக்கு நண்பர் குழாம் ஒன்றை உருவாக்கிக் கொண்டு கிளம்பினேன். அப்போது எங்கள் அலுவலகத் தலைவராக இருந்தவரும் நிறைந்த தமிழார்வம் உடையவர். அவரும் விழாவிற்கு வந்திருந்தார். விழா நிகழ்ச்சி ஆரம்பமாக இன்னும் ஐந்து விநாடிகளே இந்தன. அப்போது நாங்களெல்லாம் கலெக்டரது வரவுக்காகக் காத்துக் கிடந்தோம். "கலெக்டர்களெல்லாம் காலதாமதமாகத்தான் வருவார்கள். அவர்களுக்கு எத்தனை எத்தனையோ வேலைகள்" என்று பக்கத்திலிருந்த நண்பர் கூறி முடிப்பதற்குள் வாயிலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து சப் கலெக்டர், தாசில்தார், ரிவினியூ இன்ஸ்பெக்டர் என்று எனக்கும் பழக்கமாகியிருந்த ஒரு கூட்டம் வந்தது. அக்கூட்டத்தின் நடுவில், ஒருவர் (என் உள்ளத்தே விற்றிருக்கும் அவ்வொருவர்தான்) வந்து கொண்டிருந்தார். இதற்கு முன்னரே நான் புகைப்படத்தில் அவரைக் கண்டிருத்தலால் அவர்தான் கலெக்டர் என்று என்னால் உறுதியாகக் கூறமுடிந்தது. "அதோ நடுவில், ஒரு சிறுவனோடு (அவன்தான் அவரது பேரப்பிள்ளை) கையில் கம்பு சகிதம் வருகிறாரே அவர்தான் கலெக்டர்" என்ற நண்பர்களுக்கெல்லாம் காட்டினேன். அவர்கள்

பார்வையனைத்தும் அவர்மீதே சென்றது. நானும் இப்போதுதான் அவரை முதன்முதலாக நேரில் காண்கின்றமையால் உருவத்தை கண்ணோட்டமிட்டேன்.

அல்லையாண்டு அமைந்த மேனி அழகு. இளநகை தவழும் வதனம் - கழுத்தில் புரளும் ஜரிகை அங்கவஸ்திரம் - நிமிர்ந்த நோக்கு - 'தமிழனென்று சொல்லடா, தலை நிமிர்ந்து நில்லடா' என்பது போன்ற தோற்றம். இப்படி அவரைக் காண்பதிலேயே என் மனம் லயித்துவிட்டது. முடிவாக அவர் என்னுள்ளத்தை அப்படியே அள்ளிக்கொண்டு விட்டார் என்றே கூற வேண்டும்.

பின்னர் அதிகாரிகள் பலர் அவருக்கு அறிமுகப்படுத்தப் பட்டனர். அன்பொழுக, அகம் மலர, அவர் அனைவரிடமும் பேசியதை முகம் பிரதிபலித்தது.

விருந்தெல்லாம் முடிந்து கலெக்டர் பேசத் துவங்கினார். அவரது பேச்சில் நகைச்சுவை புரண்டது. குற்றால அருவி பொழிந்தது. கம்பன் கவிநயம் மிளிர்ந்தது. அதில்தான் எத்துணைக் கவர்ச்சி! அன்று அவர் சொன்ன திருநெல்வேலி ஹுஜுர் சிரஸ்தார் ஒருவரின் கதை என் சிந்தையை விட்டகலாத வண்ணம் ஆழப் பதிந்துவிட்டது. பக்கத்திலிருந்த நண்பர் அவரது சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே, "அருமை, அருமை, எந்தக் கலெக்டர் சார், இவ்வளவு அருமையாகப் பேசினார்?" என்றார்.

கலெக்டரின் இனிய பேச்சு முடிந்தது. மனமகிழ் மன்றப் பார்வையாளர் புத்தக (visitors book)த்தை அவரிடம் கொண்டு வந்து கொடுத்தனர். என்ன எழுதுகிறார் என்று பார்க்க எல்லோருக்கும் ஆவல். அவரது நாற்காலிக்கு அருகில் பின்னே சென்று நின்று கொண்டோம். அவரது கரம் விரைந்தது. அது சிருஷ்டித்த அழகழகான எழுத்துக்கள் எங்களை ஆச்சரியத்தில் மூழ்கடித்தன. என்ன அழகிய தமிழ்க் கையெழுத்து? இப்படியும் ஒரு கலெக்டரா? காண்பது கனவா அல்லது நனவா? புரிவதற்கு எனக்கு நெடுநேரமாயிற்று.

திருப்பத்தூரிலே வட்டார அபிவிருத்தி அலுவலகத் திறப்பு விழா. கலெக்டர் உயர்திரு. தொ.மு.பா. அவர்கள்தான் அன்றைய விழாவிற்குத் தலைவர். நறுக்குத் தெரித்தது போன்று அன்று பேசினார் அவர். அரசாங்க ஊழியர்களிடையே நிலவும் ஒருசில குறைபாடுகளை அன்று அவர் வெள்ளிடையாக அனைவர்க்கும்

புலப்படும் வண்ணம் எடுத்து விளக்கியபோது, திருந்த வேண்டும் என்ற உணர்வு எங்கள் உள்ளங்களில் எழுந்திருந்தால் அதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. சர்க்கார் ஊழியர்களுக்கு, மக்களின் ஒத்துழையாமையையும் அவர் எடுத்துக்காட்டியபோது, குறைகள் எவரிடத்து நேர்ந்தாலும் அஞ்சாது துணிவோடு அதை இடித்து உரைத்து நல்வழிப்படுத்தும் எங்கள் கலெக்டரின் நடுநிலைமை எங்களை வியக்கச் செய்தது.

"இந்தக் கலெக்டர் மிகவும் கண்டிப்பான பேர்வழி ஐயா" என்று என்னிடம் சொன்னார் நண்பரொருவர். எனக்கு அந்த நண்பர் மீது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. கண்டிப்பானவர் என்றால் அன்பில்லாதவர், இதயமில்லாதவர் என்பதுதான் எனது அருமை நண்பர் கண்ட பொருள். பிறகு அவருக்குச் சொன்னேன். "கண்டிப்பிற்கும் அன்பிற்கும் தாங்கள் காண்கின்ற இடைவெளி அர்த்தமில்லாதது. பார்க்கப்போனால் கண்டிப்பான பேர்களின் இதயத்திலேயே நிறைந்த அன்பு இருக்கிறது எனலாம். மேலும் உயர்திரு. தொ.மு.பா. அவர்கள், இதயம் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டான இதயம் படைத்தவர். இத்தனை கண்டிப்பு இருக்கின்ற போதே இன்றைய சர்க்கார் ஊழியர்கள் ஏய்த்துத் திரிகின்றார்களென்றால் கண்டிப்பே இல்லாவிட்டால் கேட்பானேன். ஆகவே கலெக்டர்கள் எப்படி நிர்வாகம் நடத்தவேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டே உயர்திரு. தொ.மு.பா அவர்கள்தான் என்று வேண்டுமானாலும் கூறுவேன்" என்று நண்பருக்கு எடுத்து உரைத்தேன்.

மற்றொரு நண்பர் திருப்பத்தூர்க் கோட்ட அலுவலகத்திலே பணியாற்றுகிறவர், அன்று கன குஷியாகவே என்னிடம் வந்தார். "ஐயா, உமது ஆபிசில் ஏதோ, 'கலெக்டர் இன்ஸ்பெக்ஷன்' என்றல்லவா சொன்னீர்? இந்த நேரத்தில் உம்மிடத்தில் மகிழ்ச்சியே தலைகாட்டியிருக்கக் கூடாதே" என்றேன்.

"அதே மகிழ்ச்சியைக் கலெக்டரே அல்லவா எனக்குக் கொடுத்துவிட்டார். நான் எப்படி மகிழாமல் இருப்பது?" என்று சிரித்தார் அந்த நண்பர்.

"என்ன விசேஷம்?" என்றேன்.

"நான் வேலை பார்க்கும் ஸீட்டிற்கு (Seat) இன்று கலெக்டர் இன்ஸ்பெக்ஷன் நடந்தது. கலெக்டர் உயர்திரு தொ.மு. பாஸ்கரத்

தொண்டைமான் அவர்களே என்னை நேரில் கூப்பிட்டு, மகிழ்ச்சியுடன் முதுகில் தட்டிக் கொடுத்தாரையா" என்று பெருமை பிடிபடாது பேசினார் அவர்.

"ஐயோ! பாவம்! வேலையில் தம்பி இவ்வளவு பின் தங்கியிருக்கிறானே. ஏதோ இவனைத் தட்டிக் கொடுத்தாவது உற்சாகப்படுத்துவோம் என்று எண்ணிதான் தட்டிக் கொடுத்திருப்பாரோ என்னவோ?" என்ற வேடிக்கையாகச் சொன்னேன் அவரிடம்.

"அப்படியே இருந்தாலும் அது என் பாக்கியந்தானே!" என்று அந்த நண்பர் கூறியபோது 'ஆயிரம் கலெக்டர் நின் கேழ் ஆவரோ தெரியில் அம்மா' என்ற நினைவினூடேயே, எங்கள் உளங்களில் எல்லாம் ஆட்சிகொண்டுவிட்ட அந்த ஆட்சித் தலைவரை வணங்கினேன்.

பிறகு கலெக்டர் திருப்பத்தூருக்கு வரும்போதெல்லாம் அவர் அறியாமலே அவரது தரிசனம் எனக்குக் கிடைத்தது. அப்படி அந்த முக தரிசனம் கிடைக்கும்போதெல்லாம் எனக்கு உள்ளம் குளிர்வது போன்றதொரு உணர்ச்சி!

1959 ஆங்கிலப் புத்தாண்டு பிறந்தது. எனது புத்தாண்டு வணக்கத்தை உயர்திரு தொ.மு.பா அவர்களுக்குச் செலுத்த வேண்டும் என்ற ஆவல் என்னுள்ளத்தே எழுந்தது. தனிப்பட்ட முறையில் சர்க்கார் ஊழியர்கள் இப்படியெல்லாம் ஒரு மேலதிகாரிக்கு எழுதக்கூடாதே என்ற எண்ணம் வந்தவுடன் என் ஆவல் ஆட்டம் கண்டுவிட்டது. சற்று சிந்தித்தேன். எப்படியும் அனுப்பிவிட வேண்டும் என்ற விழைவு என்னை உந்திற்று.

ஒரு பெருங் கவிஞருக்கு, ஏதோ கவிதை எழுத வேண்டும் என்ற ஆர்வத்தின் துவக்கத்தில் இருக்கும் ஒரு இளங்கவிஞன் புத்தாண்டு வணக்கத்தைச் சமர்ப்பிப்பது போல் என்னை மாற்றிக் கொண்டுவிட்டேன். சிந்தனா என்ற புனைபெயரையும் ஏற்றுக் கொண்டேன். கவிதை எழுதி அனுப்பிவிட்டேன். இதையெழுதி நான் அஞ்சலில் சேர்த்தபோது இதற்கு மறு கடிதம் வரும் என்று நான் எண்ணவே இல்லை.

பெருங்கவிஞரிடமிருந்து எனக்குக் கடிதம் வந்தது. என்னை யார் என்று அவர் அறிந்திருக்க நியாயமில்லை. அறிய வேண்டிய அவசியமும் கூட இல்லைதான். அழகிய அவரது தமிழ்க் கையெழுத்து மீண்டும் என் கண்களுக்கு விருந்தாயிற்று. பொங்கலன்று திருச்சி

வானொலியிலிருந்து ஒலிபரப்பப்பட்ட அவரது கவிதை செவிக்கு நல் அமுதமாயிற்று. அவரது கவிதையைக் கேட்டுவிட்டு அதைப் பற்றி, ஏதோ எனக்குத் தெரிந்த சிறு சிறு சொற்களையெல்லாம் திரட்டி கவிதை என்ற பெயரில் ஒன்று எழுதி அவருக்கு அனுப்பினேன். அதற்கும் பதில் வந்தது. முடவனுக்குக் கொம்புத்தேன் கிடைத்துவிட்டால் எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படுமோ, அதைவிட மகிழ்ச்சி ஏற்பட்டது எனக்கு அப்போது.

அன்று வடஆர்க்காடு மாவட்ட விளையாட்டுப் போட்டி சர்க்கார் ஊழியர்களுக்காக வேலூரில் நடைபெற்றது. நானும் அதற்காகச் சென்றிருந்தேன். விளையாட்டுப் போட்டியைத் தொடர்ந்து, 'அன்றும் இன்றும்' என்ற நாடகம் வேறு நடைபெறுமென அறிவித்திருந்தார்கள். அந்த நாடகம் கலெக்டர் எழுதியது என்பதை அறிந்துதான் திருப்பத்தூரிலிருந்து வேலூருக்கு ஆவலோடு வந்திருந்தேன். ஆனால் விளையாட்டு மைதானத்தில் 'தம்பி' எழுதிய 'அன்றும் இன்றும்' என்ற நாடகம் என அறிவித்தனர். எனக்கு சற்று ஏமாற்றம். கலெக்டர் எழுதினார் என்றல்லவா ஓடோடி வந்திருந்தேன். இப்போது தம்பி என்று யாரையோ குறிப்பிடுகிறார்களே என்று ஓடிற்று என் எண்ணம். ஆனால் 'தம்பி' என்பது ஒருவேளை புனைப்பெயராக இருக்குமோ என்ற நினைவும் உடன்வந்தது. இந்த நினைவில் நெடு நாட்களுக்கு முன்னர் என்னுள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்ட கம்பன் சுயசரிதம் என்ற கட்டுரையை நோக்கி ஓடினேன். அதையெழுதியவர் 'தம்பி' என்பது எனக்கு நன்றாக நினைவில் இருந்தது. அப்போது அந்தத் தம்பியும் இந்தத் தம்பியும் ஒருவர்தானா? என் மனம் அசைபோட்டபடியே ராஜகோபால் நிலையத்தை அடைந்தேன்.

நாடகத் துவக்கம் எழுதியவர் பெயரை அறிவிக்கும் வேளை வந்தது. நான் நன்றாகக் காதைத் தீட்டிக்கொண்டு உட்கார்ந்து விட்டேன். "தம்பி" என்ற தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் எழுதியது என்று கூறிய பிறகுதான் நான் என்னுள்ளத்தே எழுந்த ஐயங்களையெல்லாம் தீர்த்துக்கொள்ள முடிந்தது. கம்பன் சுயசரிதம் எழுதியவர் இவரேதான் என்ற தெளிய முடிந்தது. திருப்பத்தூரி லிருந்து வந்ததற்குப் பலன் கிடைத்துவிட்ட மகிழ்ச்சியும் ஏற்பட்டது.

அமைச்சர் தலைமையில் நாடகம் நிகழ்ந்தது. மாவட்ட அதிகாரிகள் எல்லாம் வேஷம் போடுவதில் தங்களுக்குள்ள திறமைகளையெல்லாம் காட்டினர். நிலைநாட்டினர் என்று

வேண்டுமானாலும் கூறலாம். அந்நாடகத்தில் ரிட்டையர்ட் தாசில்தாராக வேஷம் போட்டவர்தான் கலெக்டர் உயர்திரு. தொ.மு.பா. அவர்கள். தமக்கு மற்றவர்களைவிட மிக நன்றாக நடிக்கத் தெரியும் (வாழ்க்கையிலல்ல, நாடகத்தில்தான்) என்பதை உறுதிப்படுத்திவிட்டார் அன்று. அவரது மீசை, தலைப்பாகை, உருமால், அடடா, எல்லாம் கன கச்சிதம்தான், போங்களேன். எல்லாவற்றையும் விட கலெக்டராகப் பணியாற்றுகையிலேயே, ரிவினியூ இலாகாவிலுள்ள ஊழல்களையும், மக்கள் பிரதிநிதிகளின் நடவடிக்கைகளையும் அம்பலப்படுத்தும் நாடகம் ஒன்று எழுதி, அதில் தானும் ஓர் அங்கம் ஏற்று நடித்துக் காட்டிய அவரது அபார துணிவை அன்று தலைமை தாங்கிய முதலமைச்சர் வெகுவாக பாராட்டினார்.

கலெக்டர் தரிசனம் காணுவதென்றாலே சற்று சிரமம்தான். நாம் போகும்போது, அவருக்கு எவ்வளவோ வேலைகள் இருக்கும். அநேகமாய் வெளியூர்ப் பயணங்கள் போக வேண்டி வரும். என் அனுபவத்திலேயே கலெக்டர் பங்களாவில் நுழைவதே அப்போதுதான் முதல் முறை. சர்க்கார் ஊழியன், அதிலும் என்னைப்போல ரிவினியூ இலாகாவைச் சேர்ந்தவன் கலெக்டர் பங்களாவில் நுழைவதை வெளியில் உள்ளவர்கள் பார்த்தாலே போதும். கதை கதையாகப் பேச ஆரம்பித்துவிடுவார்கள்.

அதுபோல்தான் முன்னர் இருமுறை வந்தும் கலெக்டர் ஊரில் இல்லையாதலால் மூன்றாவது முறையாக அன்று கலெக்டர் பங்களாவிற்குள் சென்றேன். தாசில்தார் போன்றோரெல்லாம் கலெக்டர் தரிசனத்திற்குக் காத்துக் கிடந்தார்கள். நானும் அக்கூட்டத்துள் ஒருவனாகிவிட்டேன். தாசில்தார்களெல்லாம் நானும் அங்கு வந்திருப்பதைக் கண்டு என்ன என்ன நினைத்தார்களோ? ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். நான் அப்போது நேரடியான ரிவினியூ நிர்வாகத்தின் கீழ் இல்லை. ரிவினியூவின் கிளையாகத் தனித்துச் செயல்படும் இலாகாவிலே பணியாற்றிக் கொண்டிருந்தேன். அந்த வகையில் எனக்கு ஒரு திருப்தி. மற்றவர்கள் என்னைத் தவறாகப் புரிந்துகொள்ள முடியாதல்லவா?

நம்மைப் பற்றி அவர் என்ன என்ன நினைத்திருக்கிறாரோ, நாம் இப்படிப் போய் நிற்கப் போகிறோமே என்றெல்லாம் அலைந்தது என் மனம். காணும் வேளை வந்தது. அவரது அறைக்குள்ளே சென்றேன். ஞாயிற்றுக்கிழமைதான் என்றாலும் அவருக்கு ஓயாத வேலைகள் தானே.

"வந்த காரியம் என்ன? சீக்கிரம் சொல்லும்" பொறுப்பு வாய்ந்த பணியின் வேகம் குரலில் தொனித்தது. முதன்முறையாக அவர் என்னைப் பார்த்தார்.

"நான்தான் 'சிந்தனா' என்ற பெயரினன்" என்றேன். அவ்வளவுதான். பிறகு பார்க்க வேணுமே! "வாரும் வாரும், உட்காரும், உம்மைத்தான் இத்தனை நாளாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்" என்று வரவேற்கவே ஆரம்பித்துவிட்டார். தமிழுக்கு - தமிழ்க் கவிதைக்கு இவ்வளவு ஆற்றல் உண்டு என்பதை அன்றுதான் என்னால் உணர முடிந்தது. உவகை பொங்கி வழியும் உள்ளத்துடன் நான் கையோடு கொண்டு போயிருந்த ஆட்டோகிராப் புத்தகத்தை அவரிடம் நீட்டினேன்.

**"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே – அதைத்**
**தொழுது படித்திடு தம்பி"**

என்று அன்று அவர் எழுதிக் கொடுத்ததுதான் இன்றும் என் வாழ்க்கையில் இலக்கிய மணம் கமழ நல்லதோர் தூண்டுகோலாக இருக்கின்றது.

1959 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 23 ஆம் நாள் மாலை. அந்த மாலை ஏன் வந்தது என்று தோன்றிற்று எங்களுக்கெல்லாம். கலைக் கோயிலாம் வேலூர் ஜலகண்டேசுவரர் கோயிலில் கலையுள்ளம் படைத்த கலெக்டர் உயர்திரு. தொ.மு. பாஸ்கரத்தொண்டைமான் அவர்களுக்கு ஏதோ விருந்துபசாரம், அவர் அன்றோடு ஓய்வு பெறுவதை முன்னிட்டு ஏற்பாடு பண்ணப்பட்டிருந்தது. நானும் இந்நிகழ்ச்சியில் கலந்துகொள்ள வேலூருக்குச் சென்றிருந்தேன். அவர் இன்னும் பல காலம் கலெக்டராகவே இருந்திருந்தால் எங்களுக்கெல்லாம் மிகவும் உற்சாகமாகவே இருந்திருக்கும். எங்களுக்கெல்லாம் மிகவும் உற்காமாகவே இருந்திருக்குமே என்றா எண்ணினேன்? பிறகு, அவ்வெண்ணம் எவ்வளவு குறுகியது என்பது எனக்குப்பட்டது. உலகத்துக்கெல்லாம் தமிழை, தமிழ்க் கலையை, தமிழ்ப் பண்பாட்டை எடுத்து வாரி வழங்கும் ஒப்பற்ற பணியிலல்லவா அவர் திளைக்க வேண்டும்? அதை விட்டு இன்னும் அவர் கலெக்டராகவே இருக்க எண்ணிய எனது அற்ப ஆசையை நினைந்து வெட்கினேன். உலகத்தில் தமிழனது பெருமையை நிலைநாட்ட உயர்திரு தொ.மு.பாவைப் போன்ற தக்கார் வேறு யாருளர்?

விருந்தெல்லாம் முடிந்து திரும்புகின்ற வேளையில் தமிழ்நாட்டின் சிறந்ததோர் கலைக் கூடமாக விளங்கும் ஜலகண்டேஸ்வரர் கோயில் வாயிலிலே, தமிழகத்துக் கலை வேந்தர், உயர்திரு. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் கூப்பிய கரத்தினராய் நின்று அனைவரிடமும் விடைபெற்றுக் கொண்டிருந்தார். எவ்வளவுதான் சமாதானம் செய்துகொள்ள முயன்றாலும், எங்களை விட்டுப் பிரிகிறார் என்றால் உள்ளம் கேட்கிறதா? உள்ளத்தின் உணர்வுகளையெல்லாம் இறுக்கிப் பிடித்தவாறு வெளியே வந்தேன். ஆனால் அன்று அவர் கூப்பிய கரத்தோடே நின்ற காட்சி என் நெஞ்சை விட்டு இன்னும் நீங்கவே இல்லை.

உலகத்தின் இருளை நீக்கக் கீழ்த்திசையில் பாஸ்கரன் புறப்படுவது போல, எங்கள் மாவட்டத்தின் குறைபாடுகளையெல்லாம் நீக்க வந்தவர் உயர்திரு தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள். அவர் வரவால் வடஆர்க்காடு மாவட்டத்தில் தமிழ் வளர்ந்தது. கலை சிறந்தது. அன்பு மணந்தது. அறம் ஓங்கியது. பக்தி நல்லதோர் உயிர்ப்பைப் பெற்றது. எல்லாவற்றுக்கும் மேலாக நிர்வாகத்தில் மலிந்து கிடந்த ஊழல்கள் ஒடுங்கி விட்டன என்று கூற வேண்டும்.

அஞ்ஞான இருளை நீக்க இன்று உயர்திரு. தொ.மு.பா. அவர்கள் செய்து வருகின்ற சேவையை அனைவரும் அறிந்து மகிழ்கிறார்கள். தமிழுலகில் அவரை அறியாதார் அறியாதாரே என்னுமளவிற்கு அவர் புகழ் வளர்ந்துவிட்டது. இனி, இந்த பாஸ்கரத் தரிசனத்தால் உலகமே விழிப்படைந்தாலும் அதில் வியத்தற்கு ஒன்றுமில்லைதான்!

**திருவடி யும் தண்டையும்**
**சிலம்பும் சிலம்பு ஊடுருவப்**
**பொருவடி வேலுங் கடம்பும்**
**தடம்புயம் ஆறிரண்டும்**
**மருவடி வான வதனங்கள்**
**ஆறும் மலர்க்கண்களும்**
**குருவடி வாய்வந்து என் உள்ளம்**
**குளிரக் குதி கொண்டவே.**

# தொண்டைமான் ஒரு கவிஞர்

*கவிஞர் எஸ். கே. இராமராசன்*

**"சொல்லைக் குழைத்துச்
சுவையுறச் செய்திட்ட
சொர்ணக் கவிதையில்
சொர்க்கமுண்டு !"**

என்று பாடிய பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் தமிழாகப் பிறந்து, தமிழாக வளர்ந்து தமிழாகக் கனிந்தவர்! அவர் செல்லுமிடமெல்லாம் தமிழ் செல்லும்! எங்கு சென்றாலும் கவிச்சக்கரவர்த்தி கம்பனின் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்பார்! காவிரி செல்லும் இடந்தோறும் பூவிரி சோலை பொங்கும்! தென்றல் உலாவிடும் இடந்தொறும் நறுமணம் கமழும்! ஞானிகள் செல்லும் இடந்தொறும் பக்தியுணர்வு செழிக்கும்! நம் தொண்டைமான் ஆட்சி நடத்திய நகர்களிலெல்லாம் கம்பன் விழா நடைபெறும்!

அமரர் பாஸ்கரத் தொண்டைமானைத் தமிழ்கூறு நல்லுலகம் சிறந்த எழுத்தாளர் என்று தெரிந்து கொண்டதன்றிக் கவிஞர் என்பதைத் தெரிந்து கொள்ளவில்லை. காரணம் அவர் கவிதை நூல் வெளி வராததே! தொண்டைமான் அவர்களே தம்மைக் கவிஞர் என்று சொல்லிக் கொள்வதில்லை.

நாமக்கல்லில் நடந்த கம்பன் திருவிழாவிற்குத் தொண்டைமான் அவர்கள் வந்திருந்தார்கள். கவிரங்கத்திற்குத் தலைமை தாங்கினார்கள். தலைமையுரை இனிய கவிதையாக உருவெடுத்தது. அக்கவிதையில் மகேந்திரப் பல்லவனின் சிறப்பையும் நாமக்கல் அனுமனைப் பற்றியும், நாமகிரித் தாயைப் பற்றியும் சிறப்புறப் பாடியிருந்தார்கள். அக்கவிதையைக் கேட்ட அவையினர் மெய் சிலிர்த்தனர். கவிதையை நுகர்ந்த நான், கவியரங்கம் நிறைவேறிய பிறகு தொண்டைமான் அவர்களிடம், "தங்கள் கவிதை எங்களை

உருக்கிற்று. கவிதையின் ரீங்காரப் பண் எங்கள் செவியில் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது. தாங்கள் காற்றிலே கரைத்த கவிதையை நாங்கள் கருத்தினில் நுகர்ந்தோம். இனி மீண்டுமொருமுறை சுவைக்க வேண்டுமென்றும் ஆவல் எழுந்தால் என்ன செய்வோம்? ஆதலால் தங்கள் கவிதைத் தொகுப்பை நூலாக வெளியிடுங்கள்" என்றேன்.

அப்போது தொண்டைமானவர்கள், "தம்பி! நான் கவிஞனல்லவே! நண்பர்கள் வேண்டுகோட்கிணங்கி, ஏதோ கவிதைகள் பாடுகிறேன். இவற்றையெல்லாம் நீ உண்மைக் கவிதை என்று நினைத்துவிட்டாயா?" என்றார்கள். என் உள்ளம் கொஞ்சம் வாட்டம் அடைந்தது. தொண்டைமானவர்களின் அடக்கம் நாட்டுக்குப் பேரிழப்பாகிவிடக்கூடாதே" என்று எண்ணினேன். ஐயா அவர்களைப் பார்த்து, "நீங்கள் கம்பன், வள்ளுவன் போன்ற கவிச்சக்கரவர்த்தி களின் கவிதைகளைப் பயின்றதனால் உங்கட்கு இங்ஙனம் தோன்றுகிறது. பாடினால் கம்பனைப் போன்று பாட வேண்டும். இல்லையென்றால் சும்மாயிருக்க வேண்டுமெனக் கூறுகின்றீர்கள். நான் பலமுறை இதைக் கேட்டிருக்கிறேன். வானத்திலேயுள்ள நட்சத்திரங்களைப் போன்று மலர முடியவில்லையே என்று மல்லிகை மலர மறந்திருந்தால், மாணிக்கம் போல் மலர முடியவில்லையே என்று ரோஜா மலர மறுத்திருந்தால், அமுதம் போன்று இனிமை தர முடியவில்லையே என்று மாங்கனி கனிய மறந்திருந்தால் நாட்டுக்கு எவ்வளவு பெரிய நஷ்டம். மங்கையர் கூந்தலில தான் அழகு பெறுமா?" என்றேன்.

அப்போது தொண்டைமானவர்கள், "என் கவிதை மல்லிகை மலர் போல மணக்கிறதா? ரோஜாவைப் போல அழகு பெற்றிருக்கிறதா? மாங்கனி போல் இனிக்கின்றதா?" என்றார்கள்.

நான்,

"கற்பனையாம் தேரேறிக்
கனவுலகில் சஞ்சரித்து
அற்புதமாய்க் கண்டவற்றை
அமுதொழுகும் இசைநிறைந்த
சொற்களிலே தானமைத்துச்
செல்லும் திறம் படைத்த
பொற்புடைய புண்ணியனைப்
புகழ்க் கவிஞன் என்றிடுவார்"

*என்னும் கவிதையில் மல்லிகையின் மணத்தை நுகர்கிறேன்.*

**"மங்கைப் பருவமுன் மேனி முழுவதும்**
**பொங்கி வழியுதடி! — பெண்ணே,**
**பொங்கி வழியுதடி!**
**கன்னிப் பருவத்துன் காதல் அழகெல்லாம்**
**கட்டுக் கடங்காதடி! — கண்ணே,**
**கட்டுக் கடங்காதடி!**
**தங்கச் சிலைபோல தழைக்கும் அழகினில்**
**அங்கம் குழையுதடி! — என்றன்**
**அங்கம் குழையுதடி!**
**மானின் விழியால் மருண்டு நீ நோக்கினால்**
**மேனி சிலிர்க்குதடி — என்றன்**
**மேனி சிலிர்க்குதடி!"**

*என்னும் கவிதையில் ரோஜாவின் அழகு இல்லையென்று யாரேனும் சொல்வார்களா?*

**"அந்திதரு சித்திரத்தின்**
**அதிசயங்கள் கண்டிருந்தேன்!**
**பொன்னுருக்கிக் கொச்சி மஞ்சள்**
**பொடியும் இடைகலந்து**
**விண்ணை வியப்பாக்கும்**
**விந்தைகளைக் கண்டிருந்தேன்!**
**செக்கச் சிவந்திருக்கும்**
**செவ்வானத் திடையே**
**ஒக்க உயர்ந்துள்ள**
**உயிர் வரைகள் எத்தனைதாம்!**
**நீண்ட குழல் புரள**
**நீந்துமொரு கன்னியைப் போல்**
**மூண்ட முகிலொன்று**
**முன்னோக்கிச் சென்றது காண்!**
**வெள்ளி விளிம்பு கட்டி**
**விளங்குகின்ற காட்சிகண்டு**
**உள்ளம் பறிகொடுத்து**
**உன்மத்த னாயிருந்தேன்!"**

*என்னும் கவிதையில் மாங்கனியின் தீஞ்சுவை சொட்டுகின்றதே! என்றேன்.*

என் சொற்கள் அவருடைய உள்ளத்தை மாற்றிவிட்டன. "கவிதையை வெளியிடலாம். என் கவிதைகள் பல இடங்களில் சிதறிக் கிடக்கின்றன. பல காணாமலும் போயின. கிடைத்தமட்டும் வெளியிடலா"மெனக் கூறினார்கள். தொண்டைமானார்கள் அன்று பகர்ந்த சொற்கள் இன்று அவரின் திருமகளார் இராஜேஸ்வரி அவர்களாலும் மருமகனார் திரு வி.கே.சி. நடராசன் ஐஏஎஸ் அவர்களாலும் நிறைவேறுகிறது.

நம் தொண்டைமானவர்கள் பொருநைத் தண்புனலை நுகர்ந்தவர்கள். நெல்லைத் தென்றலை அனுபவித்தவர்கள். எப்போதும் திக்கெலாம் புகழும் திருநெல்வேலியை நினையாமலிருக்க மாட்டார்கள். ஆதலால் இவர் கவிதை பொருநையைப் போன்று சவியுறத் தெளிந்து தண்ணென்று செல்கிறது. தென்றலைப் போன்று கிளர்ச்சியூட்டுகிறது. சிந்துபூந்துறை போன்று எண்ண எண்ண உவகையூட்டுகிறது.

தொண்டைமானவர்களின் கவிதையை மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் சுவை தெரியாது. குற்றால நீர்வீழ்ச்சியில் குளிப்பதற்கு முன்பு சற்று மருட்சி தோன்றுகிறது. ஒருமுறை அவ்வருவிக்குள் புகுந்துவிட்டால் வெளிவரவே மனமிராது. அதுபோலத் தொண்டைமான் கவிதைக்குள் நாம் புகுந்துவிட்டால், நம்முள் தொண்டைமான் கவிதை புகுந்துவிட்டால் நாம் பெறும் இன்பம் அலாதிதான்! உள்ளம் ஆனந்தப் படும். கும்மாளம் போடும், இனி உள்ளே நுழைவோம்!

இதுவரை நம் கவிஞர்கள் கோவிலில் இருக்கும் சிற்பங்களை எவ்வெவ்வாறோ சிறப்பித்துப் பேசினார்கள். ஆனால் நம் தொண்டைமானவர்கள் அச்சிற்பங்களை 'கல்லுக்குள் கனி' என்கிறார். நாம் மரத்திலிருக்கும் கனியைப் பார்த்திருக்கிறோம். ஆனால் கல்லுக்குள் கனி தெரியாமற் போயிற்று. நம் கலைமணியவர்கள் சங்கீதத்தை 'நாதக்கனல்' என்பார். கற்றுத் தெரிவதுவோ கன்னி தருவதெலாம் என்று இயல்பாக உண்டாகும் காதலைச் சிறப்பித்துப் பேசுகிறார். தென்றலை, 'தென்றல் சிலுசிலுப்பில் தெய்வ ஒளி கண்டேன்' என்பார். கவிதையைப் பற்றிச் சொல்லும் போது, 'கற்ற கவிதையெலாம் கனிந்த கனியலவோ?' என்று கவிதையின் இலக்கணங்கூறிக் கவிதையைச் சுவைக்கும் முறையையும் விளக்கியுள்ளார்.

மேலே காட்டியவை சில சொற்கள்தாம். அவற்றின் சுவையும் ஆழ்ந்த பொருளையுங் கண்டீர்களா? இங்ஙனம் இவர் கவிதையில் நம்மை மறக்க வைக்கும் பகுதிகள் பல உண்டு.

உலக மகா கவிஞர்களுள் ஒருவர் மில்டன். அவரது நூலை ஆங்கிலத்திலேயே பயின்று உணர்வது கடினம் என்பார்கள். அதனை அருந்தமிழாக்கியவர் திரு. வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார வர்கள். அவருடன் நெருக்கமாகத் தொடர்பு கொண்டவர்கள் தொண்டைமானவர்கள். மில்டன் இறைவன் எப்படி உலகத்தைப் படைத்தான் என்பதைச் சுவர்க்க நீக்கத்தில் (புத்தகம் 6) அழகாகச் சொல்கின்றார். அதே பகுதியை நம் தொண்டைமானவர்கள் அனாயசமாகச் சொல்லிவிடுகின்றார்கள். அப்பகுதியைப் பார்ப்போம்!

**"ஆதியிலே பரமபிதா**<br>
**ஆக்கினார் உலகமதை**<br>
**சோதி அங்கே தோன்ற எனச்**<br>
**சொன்னார் ஒரு வார்த்தை!**<br>
**வானம் தனைப் படைத்து**<br>
**வானிற்கும் அப்பாலே**<br>
**வானுலகை யும்படைத்து,**<br>
**வானில் சுடர் படைத்தான்.**<br>
**நிலத்தோடு நீர் படைத்து,**<br>
**நித்திலம் போல் பயிர்படைத்து,**<br>
**வளம் நிறைத்து வைத்தார்**<br>
**வண்ணத் தவிசிருந்து.**<br>
**நீரிலே நீந்துகின்ற**<br>
**மீனினத்தைப் படைத்ததன்பின்**<br>
**பாரிலே பறப்பனவும்**<br>
**நடப்பனவும் தான் படைத்தார்**<br>
**இத்தனையும் படைத்தபின் தான்**<br>
**எண்ணமிட்டார் இறைவனுமே**<br>
**அத்தனையும் அனுபவிக்க**<br>
**ஆள்வேண்டு மென நினைந்தார்.**<br>
**மண்ணிலொரு பிடியெடுத்து**<br>
**மனிதனையே உருவாக்கி**<br>
**அன்ன வன்றன் விலாஎலும்பில்**<br>
**ஆரணங்கைச் சமைத்திட்டார்.**<br>
**ஆணோடு பெண் இணைந்து**<br>
**அன்போடு ஒன்றுவதில்**<br>
**காணும் உயிர்களெல்லாம்**<br>
**புதிதாய்ப் பிறந்தனவே!"**

விவிலியக் கதை தமிழில் எவ்வளவு அழகாக இருக்கிறது பார்த்தீர்களா!

உலகம் படைக்கப்பட்டதைத் தொண்டைமான் சைவ சித்தாந்தத்தின் வழி நின்று அழகுறப் பாடுகிறார். இப்பகுதி தொண்டைமானவர்கள் கூத்தப் பிரான் பால் வைத்த காதலை விளக்குகின்றது. இதுவரை எந்தச் சைவ சித்தாந்தியும் இப்படிப்பட்ட கவிதையை யாத்திருக்க முடியாதென்றே சொல்லலாம். கோனரிராஜபுரம் நடராஜ மூர்த்தியைப் பார்த்துப் பார்த்துப் பூரித்த உள்ளம் கவிதையாக உருவெடுக்கிறது. இந்தப் பகுதியை எத்தனை முறை வேண்டுமானாலும் படிக்கலாம். இந்நடனத்தைக் காண்பதற்கல்லவா தேவர்களும் முனிவர்களும் தவங்கிடக்கிறார்கள்! இந்த நடனத்தில் எல்லாத் தத்துவங்களும் அடங்கியுள்ளன. இந்தியனுடைய தத்துவங்கள் பல்லாண்டு பல்லாண்டு புரிந்த தவப் பயனல்லவா நடராஜ மூர்த்தி. நம் கவிச்சக்கரவர்த்தி கம்பன் இம்மூர்த்தியில் தன்னையே மறந்து ஈடுபட்டது உலகமறிந்த உண்மையல்லவா?

இந்த மூர்த்தத்தை நம் தொண்டைமானவர்கள் யோகம், விஞ்ஞானம், பக்தி இத்தனையும் கலந்தல்லவா பாடுகிறார். தோற்றந்துடி யதனில் என்று உண்மை விளக்கம் கூறுகிறது. இச்சொற்றொடருக்கு, விரிவுரை செய்கின்றார் நம் கலைமணியவர்கள்!

> "அம்பலத்தில் ஆடுகின்ற
> அரன்கையின் துடியோசை
> அம்பரம் எல்லாம் பரவி
> ஆக்கினது படைப்பினையே!
> துடியொலிக்கத் துடியொலிக்கத்
> துடித்ததுயிர்த் தத்துவமே!
> அடிபெயர்த்து நடைபயிற்சி
> ஆடுகின்ற ஆட்டமதில்
> அண்டங்கள் தாமுருண்டு
> ஆண்பெண்ணும் உருவாகி
> மண்டலத்தில் நிறைந்து விட்டார்
> மக்களொடு மற்றவரும்"

இறைவன் உலகத்தைப் படைத்தான். "இறைவனை யார் படைத்தார்" என்று கேட்கிறார்கள். கேட்க வேண்டிய கேள்விதான்! அக்கேள்விக்கு நம் தொண்டைமானவர்கள் அழகான விடை

தருகின்றார்கள். இறைவனை மனிதன் படைத்தான் என்று விடை கூறுகிறார். இவ்விடை ஆழ்ந்த உணர்வற்றவர்களுக்கு நாஸ்த்திக விடையாகத் தோன்றும். இறைவனுக்கு, "ஒருநாமம் ஓருருவம் ஒன்றமிலார்க்கு ஆயிரந் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ?" என்று மணிவாசகர் பாடுகிறார். எனவே, உருவமற்ற இறைவனுக்கு உருவங் கொடுத்தவர்கள் நாம். வைணவ சித்தாந்தமும் இக்கருத்துக்கு உடன்படுகிறது. இறைவன் திருமேனியை, 'தமருகந்த உருவம்' என்றும் இறைவன் திருப்பெயரை, 'தமருகந்த பெயர்' என்றும் பிரபந்தம் பேசுகின்றது. "எவ்வண்ணம் சிந்தித்த திமையா திருப்பரேல் அவ்வண்ணம் ஆழியான் ஆம்" என்ற பேசுகிறது வைணவம். இவற்றையெல்லாம் நன்கு உணர்ந்த தாலல்லவா நம் கவிச்சக்கரவர்த்தி கம்பன், 'ஆயாத சமயமும் நின் அடியவே அயலில்லை' என்று பேசினார். இப்பகுதிகளை நன்கு பயின்று தெரிந்தவர் நம் தொண்டைமானவர்கள். அதனால்தான் நம் தொண்டைமானவர்கள் தில்லைக் கூத்தனைக் காணும் பொழுது மனங்குழைவது போலச் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரைக் காணும் பொழுது அகங்குழைகிறார். இனி, கடவுளை மனிதன் படைத்த பாங்கைக் காண்போம்.

**"அந்தக் கடவுளுக்கும்**
**அழகான உருவமதைச்**
**சிந்தைச் சிலிர்ப்பாலே**
**செய்யப் புறப்பட்டார்.**
**அருவம் உருவம்**
**அருவுருவம் என்று சொலும்**
**உருவமிலா இறைவனுக்கும்**
**உருவமதைக் கற்பிக்கத்**
**தன்னைப் படைத்தொரு**
**தலைவனையே தான் படைக்க**
**முன்னி எழுந்தான் மனிதன்**
**முற்றியநல் அன்போடு**
**அஞ்சு பெரும் பூதமதில்**
**அணுவுக்குள் அணுவாக**
**விஞ்சும் நிலையாலே**
**விளங்குகின்றான் இறைவன்.**
**ஊனாக உயிராக**
**உணர்வாக அணுவினுள்ளும்**
**காணாத பேருருவாய்க்**
**கலந்து நின்று தொழிலியற்றி**

**அணுவிற்குள் உள்ளிருக்கும்**
**அமர நிலையோடு**
**அணுவிற்கு வெளியினிலும்**
**அமைந்தே இயங்குகின்றான்**
**மண்டுபெருங் காதலுடன்**
**மக்கள் இனம் உய்ய**
**என்று கண்ட முன்னோர் தாம்**
**எம்மான் அருள்விழைந்து**
**நன்றாய்ச் சமைத்தார்கள்**
**நடராஜன் திருவுருவை."**

தொண்டைமானவர்கள் எப்போதும் கவிதை உலகிலே வாழ்பவர்கள். கவிதை எப்படி உருவாகிறது என்பதைப் பற்றி ஆராய்கிறார். சொல்லோடு சொல் இணைந்தால் கவிதையாகி விடுமென்று சிலர் எண்ணுகிறார்கள். ஆகையினால்தான் செங்கல் போல் அடுக்கப்பட்ட சொல் வரிசைகளெல்லாம் கவிதையாகிவிட்டன. காவியங்களாகிவிட்டன.

நம் தொண்டைமானவர்கள் கவிதை உருவாகும் விதத்தை அழகுறச் சொல்கின்றார்.

**கருத்தோடு சொல் முயங்கிக்**
**கனவுலகை உருவாக்கித்**
**தருக்கோடு விண்ணினையும்**
**தாவிப் பிடித் தணைத்து**
**வளமான கற்பனையை**
**வாகாய் நிறைத்தந்த**
**உள்ளத்தில் பிறக்கின்ற**
**உயர்க்கவிதைப் படைப்பலவோ?**

மேலை நாட்டார் எப்படிக் கவிதை உருவாகிறது என்பதைச் சொல்லும் பொழுது அங்கே திணறலையும் முணகலையும் கைவிரிப்பையுமே காண்கிறோம்.

நம் தொண்டைமானவர்கள் கவிதை உருவாவதை மிக லாகவமாகக் காட்டுகின்றார். ஒரு புதுப்பொருள் தோன்ற வேண்டுமென்றால் ஒரு பொருளோடு மற்றொரு பொருள் பொருந்தி முயங்க வேண்டும். இது விஞ்ஞான நியதி! கருத்தோடு சொல் முயங்குகிறது. அங்கே கனவுலகம் தோன்றுகின்றது. அக்கனவுலகிலே இருந்து கொண்டு விண்ணைத் தாவிப்

பிடித்தணைக்க வேண்டும். பிறகு உள்ளத்தில் வளமான கற்பனை நிறைக்க வேண்டும். அப்பொழுது உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பிறக்கின்றதே, அதுதான் கவிதை என்கிறார். அந்தக் கவிதை எங்ஙனம் இருக்க வேண்டும்? நீண்ட நாளாகப் பெரிய ஆய்வுரைகள் நிகழ்ந்து வந்துள்ளன. படித்த பெரும் பெரும் புலவர்களுக்கே எட்டாதபடி இருப்பதுதான் கவிதை! அகராதி என்னும் விண்ணிற்கோ ஆய்வுரை என்கின்ற விமானத்திற்கோ கட்டுப்படாமல் உயர இருப்பதுதான் கவிதை! சுருங்கச் சொன்னால் பாடிய கவிஞன் கூடப் பின்னால், உணரவொணாதபடி இருப்பதுதான் கவிதைக்குத் தனியிலக்கணம்! என்றெல்லாம் கருதிவிட்டனர். நான் பாடிய கவிதைக்கு நீ உரை சொன்னால்தான் பெரும்புலவன் என்று சொல்லிக் கும்மாளம் போட்ட கவிஞர்களும் உண்டு. சில கவிஞர்களின் பாடல்கள் இன்னும் கன்னியாகவே இருக்கின்றன! அஃது இன்னும் தன் கருத்தைப் பிறருக்கு வழங்க மறுத்துக் கொண்டேயிருக்கின்றது. இஃது ஆச்சரியமில்லையா? இதை உணர்ந்த நம் கலைமணியவர்கள் கவிதைக்கு இலக்கணம் வகுக்கிறார்கள்.

**"கவி யென்றால் முடிச்சு பல**
**கட்டாயம் வேண்டுமென்று**
**கவிக்கி லக்கணம் வகுத்துக்**
**காலமெல் லாம் கழித்தோம்**
**யமகத் தொடு திரிபு**
**யாண்டுளது எனத் தேடிச்**
**சமர் புரிந்து அத்தோடு**
**சாதுரிய வெற்றி பெற்று**
**இருப்புக் கடலையினை**
**இனிய சுவை உடையதென**
**விருப்போடு தானருந்தி**
**விண்ணாளம் பேசி வந்தோம்**
**உண்மைக் கவிதை யினை**
**உணராமல் ஏமாந்தோம்**
**ஒண்மை அறிவில்லா**
**ஊமையராய் வாழ்ந்தலுத்தோம்!"**

ரசிகமணி டி.கே.சியவர்கள் அகஸ்தியராயிருந்து கவிதைக்கு வடித்த இலக்கணம்., நம் தொண்டைமானவர்களால் அழகிய உருவம் பெற்றது! இக்கவிதையிலக்கணம் உணராதவர்க்கு நல்ல கவிதையினைச் சுவைக்க முடியாது.

பழைய பண்பாட்டில் ஊறிய மரபில் வந்த நம் தொண்டைமானவர்கள் இலக்கியம் உணரும் கூரிய செவியினைப் பெற்றிருந்தார்கள். பழைய சங்க இலக்கியம் முதல் பாரதியிலக்கியம் வரை எல்லாவற்றையும் நன்கு சுவைத்தவர். சங்கப்பாடல்களின் தூய்மையையும் வள்ளுவனின் கவிதையின்பத்தையும் நன்குணர்ந்து அனுபவித்தார்கள். அவ்வனுபவம் அவருக்கு நிறைவைத் தரவில்லை. அவர் உள்ளத்தில் ஓர் ஏக்கம் இருந்தது. தொண்டைமானவர்கள் ஔவைக் கிழவியின் பாக்களில் விளைந்த சுகத்தையும் நாவேந்தர் புனைந்த முத்தொள்ளாயிர (முத்தொள்ளாயிர ஆசிரியருக்கு இவர் தந்த பெயர் நாவேந்தர்) நயத்தையும் நந்திக்கலம்பகத்தின் கற்பனையையும் தரமறிந்து சுவைத்தார். ஆனாலும் அவருடைய கலைப்பறவை சிறகடித்துப் பறப்பதற்கேற்ற வானம் கிடைக்கவில்லை. இந்நிலையில் அவர் கம்பக் கடலைக் காண்கிறார். அதனுடைய பரப்பிலும் விரிவிலும் ஆழத்திலும் ஈடுபாடு கொள்கிறார்.

**"எவ்வளவு பரந்த கடல்**
**எவ்வளவு விரிந்த நிலை!**
**இக்கடலின் எல்லையினை**
**எப்படி நாம் கண்டுகொள?**
**அகலமதை அளந்தாலும்**
**ஆழமதை அறிய**
**சகலகலா வல்லவனும்**
**சாதித்தல் கூடிடுமோ?**
**அலைமேல் அலைவந்து**
**அழகான முத்தையள்ளி**
**மலையாக் குவிப்பது போல்**
**மன்னன் கவிசொல்வான்**
**விண்ணில் ஒளிர்கின்ற**
**மீனினத்தைப் போலெல்லாம்**
**கண்ணில் இனியபல**
**காட்சிகளைத் தந்திடுவான்**
**கற்பனையாம் தேரேறி**
**ககனமதிற் பறந்து**
**அற்புதமாம் கவி உலகில்**
**அமுதொழுகும் இசைபரப்பி**
**நீலநெடு வான்முகட்டை**
**நித்தம் தழுவிவரும்**

**நீலக்கடல் அலையில்**
**நின்று கவிசொல்லி**
**பொங்கும் திரைகளிலே**
**போதம் விளைவித்து**
**எங்கும் அவன் ஒளியை**
**எல்லோர்க்கும் காட்டிடுவான்"**

கம்பன்பால் தொண்டைமான் கொண்ட ஈடுபாடு கவி வெள்ளமாகப் பெருக்கெடுக்கிறது. சிவபரஞ்சோதியை, சீவக்கடலை நேரே கண்டபோது திருமூலர்,

**"யாரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை**
**யாரறிவார் அதன் அகலமும் நீகளமும்"**

என்று உணர்ந்து கூறினார். திருமூலரின் வியப்பிற்குக் குறைந்ததன்று நம் கலைமணியின் வியப்பு! தொண்டைமான்,

**"அன்பென்னும் புணையேறி**
**அறிவென்னும் தண்டோடு**
**கம்பனெனுங் கடலினிலே**
**கரைகாணப் புறப்பட்டார்"**

இப்படிகளில் கம்பன் கவிதையைப் பயிலும் முறையினைத் தெரிவிக்கின்றார். வெற்றறிவுடையார்க்குக் கம்பனுடைய சிறப்புத் தெரியாது. அதேபோல அன்பு மாத்திரம் பெற்றவர்களும் கம்பக்கடலை நீந்த முடியாது. கம்பனுடைய நூலைப் பயில்வதற்கு இதயமும் வேண்டும். மூளையும் வேண்டும் என்பதை எவ்வளவு அழகாகத் தெரிவிக்கிறார், பாருங்கள்!

தலைவனொருவன் ஒரு தலைவியைக் கண்டு காதல் கொள்கிறான். அவளும் இவனை விரும்புகிறாள். இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தியவர்களே! கைக்கிளைக் காதலர் அல்லர். ஐந்திணைக் காதலரே. அத்தலைவி இவனிடத்தில் அன்பாகப் பேசுகிறாள். காதல் மொழிகளையும் கலந்து பேசுகிறாள். தலைவன் இவற்றையெல்லாம் பூரணமாய் அனுபவிக்கிறான். அவளுடைய காதல் புன்னகையாக அரும்பிச் சொல்லாக மலர்ந்து கனிந்து குலுங்குகிறது. அங்கு தலைவன் கை அக்கனியைப் பறிக்க நீள்கிறது. அக்கனியை வழங்கத் தலைவி உடன்பட்டாலும் அவள் நாணம் தடுக்கிறது. கைக்கெட்டிய கனி வாய்க்கெட்டாமல் போகிறதேயெனத் தலைவன் நோகிறான். இந்நிலையில் தலைவனின் ஆற்றாமை, துயரம் கவிதையாக உருக்கொள்கின்றது. அக்கவிதையைக் காணுங்கள்!

கவிதையைக் காணுங்களென்றா சொன்னேன். இல்லை இல்லை. அக்கன்னி போன்றதன்று நம் கவிதை! அதைச் சுவையுங்கள்!

**நீண்டு வளர்ந்த நிமிர் சிகரத்தினை**
**நீருண்ட மேகம் தழுவலையோ?**
**நீலக்கடலில் புரண்டு வரும்திரை**
**நேராய் ஒவ்வொன்றினைக் கவ்வலையோ?**
**ஓடும் சிறுநதி ஆழியுடன் கூடி**
**ஒன்றாய்க் கலந்து குலாவலையோ**
**ஓலமிடும் வண்டு கோல மலர்களில்**
**ஒன்றியிருந்து தேன் உண்ணலையோ?**
**இந்நிலம் தன்னிலே தன்னந்தனியாக**
**என்னைக் கலந்து நீ இன்பந்தராவிடில்**
**யாது பொருள் இந்தக் காதலுக்கே?**

சிலர் உள்ளத்தில் சோகம் ஏறினால் உலகிற்கு லாபம் அதிகம். வான்மீகியின் சோகம் இராமாயணமாக உருவெடுத்தது. காந்தியடிகளின் சிறைவாசகம் சத்திய சோதனையாக மலர்ந்தது. திலகரின் சிறைத்தவம் கீதா ரகசியமாக மணந்தது. அதுபோல் தொண்டைமான் கேரள நாட்டில் டிப்டி கலெக்டராகப் பணியாற்றியதால் நமக்கு அருமையான கவிதை கிடைத்தது. அக்கவிதையை ரசிகர்கள் தனித்துப் படித்து இன்புற வேண்டும். இந்நாட்டிற்குச் சென்ற மந்தமாருதச் சருக்க நாயகன் அனுபவத்தைத் திருகூடராசப்பர் பாடுவார். நம் தொண்டைமான் தன் அனுபவத்தைச் சிருங்கார ரசம் ததும்பப் பாடுகிறார்.

**"வெள்ளைக் கலையுடுத்தி**
**வீதிவழிச் செல்லுகின்ற**
**கிள்ளை மொழிக் கன்னியரோ**
**கிறுகிறுக்க வைத்திடுவார்."**

நம் தொண்டைமானவர்களின் கவிதைத் தொகுப்பு வண்ண மலர்ப் பூங்கா. பழமுதிர்ச்சோலை. சோலை நறுமலரினையோ கனியின் வண்ணம் வடிவு அளவு சுவைகளையோ நான் வர்ணித்துக் கொண்டிருந்து என்ன பயன்? தாங்களே அச்சோலையிலே புகுந்து கவிதை மலர்களை முகருங்கள்! செவிநுகர் கனிகளை உண்ணுங்கள்! சுவர்க்க போகத்தையே காண்பீர்கள்!

# நம்ம டைரி குறிப்பு


***என். சுப்பிரமணியன்***

[சாந்தி நிகேதன் ஆசிரியர்]


பிள்ளையார் சுழி போட்டுத்தான் எதையும் ஆரம்பிப்பது நம் வழக்கம். எதைக் கொண்டு, எப்படி ஆரம்பிக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கும்போது, என் கைக்கு ஒரு நூல் வந்து சேர்ந்தது. "பிள்ளையார் பட்டிப் பிள்ளையார்" தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் எழுதிய அருமையான நூல். அவர் பெயரால் நடக்கும் நினைவு அறக்கட்டளை வெளியிட்டிருக்கும் அரியக் கலைப் படைப்பு.

நம்மைப் பற்றிய பாரம்பரியக் கலை உணர்வுகளைப் பற்றித் தமக்கேயுரிய பாணியில் முத்திரை பதித்துச் சென்றவர் அவர். அந்தக் கட்டுரையை முதன்முதலில் (அதாவது 1956 இல்) படிக்கும்போது பிள்ளையார்பட்டிக்குப் போகும் வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. பல ஆண்டுகளுக்குப் பின் போனபோது அவரைப் போன்ற இலக்கிய கர்த்தாக்கள் தங்கள் பேனாவால் எதையும் சாதிக்க முடியும் என்பதை உணர்ந்தேன்.

நிழற்படம் பிடித்துக் காண்பிப்பது போல், தன் எழுத்தில் உங்கள் முன் ஒரு காட்சியைக் கொண்டு வர அவரால் முடியும். இது எல்லோருக்கும் எளிதில் முடிகிற காரியம் அல்ல. சிலருடைய எழுத்துக்கு அத்தகைய சக்தியைக் கொடுத்திருக்கிறான் இறைவன்.

கவிதை எப்படி எல்லோருக்கும் புரிவதில்லையோ, அதே போன்றதுதான் கலைகளைப் பற்றிப் பேசுவதும். சிலைகளையும், ஓவியங்களையும் பற்றிப் பேசுவதில் தொண்டைமானுக்கு இணை அவரேதான். மணிக்கணக்கில், நாட்கணக்கில் அவரால் பேச முடியும். தக்க ஆதாரங்களுடன், நுணுக்கமாகப் பேசுவார். ஆங்காங்கே இலக்கியமும் கல்வெட்டுக்களும் ஆதாரமாய் நிற்கும்.

# பொதிகைப் புதல்வரின் புத்தக வெளியீடு

## *ராஜரங்கன்*

கலைமணி தொ.மு. பாஸ்கரத் தொண்டமான் நினைவு அறக்கட்டளையின் சார்பில் ஏப்ரல் ஐந்தாம் தேதி அமரர் தொ.மு.பா. எழுதிய ஆறு அரிய நூல்கள் வெளியிடப்பட்டன. அனைத்துமே ஆன்மிக, கலைக் கருவூலங்கள், பிள்ளையார்பட்டிப் பிள்ளையார், ஆறுமுகமான பொருள், வேங்கடம் முதல் குமரி வரை (ஐந்தாம் பாகம்), ஆடும் பெருமானும் அளந்த நெடுமாலும், மதுரை மீனாட்சி, இந்தியக் கலைச் செல்வம் ஆகிய இவை கலைஞன் பதிப்பகத்துக்குக் கைவந்த, அழகிய அச்சுத்திறன் மிளிர, வண்ணப் பதிப்புகளாக வந்து வாசகர்களை மகிழ்வித்திருக்கின்றன.

அமரர் தொண்டமான் வாழ்ந்தது அறுபத்தோரு ஆண்டுகள்தான். 1965 இல் அவர் மறைவதற்கு முன் ஆற்றிய சாதனைப் பட்டியல் பிரமிப்பாக இருக்கிறது. தமிழகம் முழுவதும், பின்னர் இந்தியா முழுவதும் உள்ள கோவில்களுக்குச் சென்று அங்குள்ள சிற்பங்களையும் ஸ்தலச் சிறப்புக்களையும், அவை பெற்ற பாடல்களையும் ஆராய்ந்து, அவர் "வேங்கடம் முதல் குமரி வரை" என்ற தலைப்பிலும் பின்னர் "வேங்கடத்துக்கு அப்பால்" என்ற தலைப்பிலும் எழுதிய தொடர் கட்டுரைகள் கல்கி பத்திரிகையில் வெளியானபோது இவை இறையன்பர்களுக்கும், கலை அன்பர்களுக்கும் விருந்தாக அமைந்தன. சிற்பக்கலையில் அவருக்கு ஏற்பட்ட ஈர்ப்பு ஊரூராகத் தேடி, எங்கெங்கோ புதைந்து, கவனிக்கப்படாமல கிடந்த சிலைகளைக் கொணர்ந்து தஞ்சைக் கலைக்கூடத்தை உருவாக்க வைத்தது. ஐ.ஏ.எஸ். பதவியில் அவர் காட்டிய கடுமையான உழைப்பையும் மிஞ்சிய உழைப்பு இது. பிரதிபலன் எதிர்பாராது கீதை வழியைப் பின்பற்றியதாலோ என்னவோ, இன்றுகூட தஞ்சைக் கலைக்கூடத்தில் அவருடைய பெயரோ, புகைப்படமோ காணப்படவில்லை. பிரம்மாண்டமான

கோவில்களை உருவாக்கிய அரசர்களும் கலைஞர்களும் தாங்கள் பெயர் பொறிக்க வேண்டுமென்றா கேட்டார்கள். ஆனால் இது நமக்கு நிச்சயமாக மனத்தில் நெருடுகிறது.

தொ.மு.பா. தோன்றிய பரம்பரையும், பழகிய நட்பும், சுற்றமும் இலக்கியத்திலேயே தோய்ந்தது. தந்தை தொண்டைமான் முத்தையா தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை பெற்றவர். சிறந்த ஓவியக் கலைஞன். புகைப்பட வல்லுநர். அவருடைய தந்தையார் சிதம்பரம் தொண்டைமான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளிடம் முறையாகத் தமிழ் பயின்று நெல்லைச் சிலேடை வெண்பா எழுதிய கவிஞர். தொ.மு.பாவின் சொந்தத் தம்பியாகிய தொ.மு.சி. ரகுநாதன் சிறந்த கவிஞர். பொதுவுடைமைவாதி. புதுமைப்பித்தனின் நெருங்கிய தோழர். தொ.மு.பா. ஆரம்பத்தில் வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியாரிடமும், பின்பு குற்றால முனிவர் டி.கே.சிதம்பரநாத முதலியாரிடமும் இலக்கியத் தொடர்பு கொண்டு ராஜாஜி, கல்கி, ஜஸ்டிஸ் மகாராஜன், மீ.ப. சோமசுந்தரம் போன்ற இலக்கியச்சுவை மாந்திய நண்பர்களைப் பெற்றவர்.

திருநெல்வேலிச் சீமையின் தவப் புதல்வர்களில் தலையானவர்களில் ஒருவரான தொ.மு.பாவின் புத்தக வெளியீட்டு விழாவில் பேசிச் சிறப்பிக்க வந்தவர்களும், ரசிக்க வந்தவர்களும் இலக்கியச் சாரலில் நனைந்து மகிழ்ந்ததில் நேரம் போனதே தெரியவில்லை.

திருமதி நந்தினி ஆனந்தின் இனிமையான தேவார இசை தொடக்கத்திலேயே விழாவுக்குச் சிறப்பு சேர்த்தது. பின்னர் இறைவணக்கம் பாடிய பெண்மணி யார் தெரியுமா? கிரிக்கெட் வீரர் ஸ்ரீகாந்தின் தாயார். என்ன அருமையான குரல். வரவேற்புரை வழங்கிய சித்ரா, பாஸ்கரத் தொண்டைமானின் பேத்தி. திருமதி ராஜேஸ்வரி நடராஜனின் புதல்வி. விரையொன்று போடச் சுரை ஒன்று முளைக்குமா? வரவேற்புரையே, டி.கே.சி, மஹராஜன் அடிக்கடி சொல்வதுபோல 'கும்மாளி' போட்டு வந்த இலக்கிய அறிமுகம்.

தலைவர் ஐராவதம் மகாதேவன் ஐ.ஏ.எஸ் சிந்துவெளி நாகரிகத்தின் மொழி ஆராய்ச்சியாளர் மட்டுமா? பேராசிரியர் அ. சீனிவாசராகவன் மூலமாக தொ.மு.பாவின் அறிமுகம் பெற்ற தான், பின்னவர் ஐ.ஏ.எஸ் அதிகாரிகளுக்கு நடத்திய கருத்தரங்கத்திலும் கலந்து கொண்டதாக அடக்கமாகச் சொன்ன இவர் தமிழர் கலை,

இலக்கியம் பற்றித் தெரிவித்த தகவல்கள், ஆழ்ந்தெடுத்த முத்துக்கள்.

சிறப்புரை வழங்கிய டாக்குமெண்டரிப் படத் தயாரிப்பாளர் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி மாணவப் பருவத்திலிருந்தே தொ.மு.பாவின் கலைக் கட்டுரைகளைப் படித்தவர். தற்போது ஆலயங்களைப் பற்றி ஒரு டாக்குமெண்டரி எடுக்க ஆயத்தப்படும் போது, இந்த நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள தனக்கு அழைப்பு வந்தது ஒரு சுப சூசகம் என்று சொன்னார்.

புதுக்கோட்டை அரச குடும்பத்தைச் சார்ந்த திருமதி ராணி ரமாதேவி தொண்டைமான் நல்ல தமிழிலே, சிறிதே பேசினாலும் உள்ளத்தைத் தொடும் அளவுக்கு, தொ.மு.பாவின் எழுத்து தன்னை எப்படிக் கவர்ந்தது என்று விளக்கினார். தொ.மு.பாவின் புதல்வி சரோஜினி தமக்கு சம்பந்தியாக அமைந்தது ஒரு பெறும்பேறு என்றும் சொன்னார்.

பேராசிரியர் தெ. ஞானசுந்தரம் மேடை ஏறியதும் கலகலப்பு. புன்முறுவல் மாறாத முகத்தோடு அவர் வீசிய இலக்கியக் குறிப்புகள் ஏராளம். அன்று வெளியிடப்பட்ட புத்தகங்களில் ஒன்றில் தொ.மு.பா. எழுதியிருக்கும் நிகழ்ச்சி ஒன்றை நகைச்சுவையோடு குறிப்பிட்டார்.

தொ.மு.பாவும் நண்பரும், நண்பரின் வீட்டு வாசலில் காரில் அமர்ந்து நண்பரின் மனைவி வரக் காத்திருக்கிறார்கள். வேர்க்க விறுவிறுக்க அந்த அம்மையார் வந்ததும் நண்பர் "ஏன் தாமதம்?" என்று கடிந்து சொல்ல, அவர் "இந்தக் குங்குமப் பொட்டுச் சரியாகவே இட்டுக் கொள்ளவரவில்லை. அதுதான் காரணம்" என்கிறார். தொ.மு.பா புன்சிரிப்போடு சொல்கிறார். "அம்மணி! நீங்கள் விரலை மூக்குக்கு நேரே நீட்டி இட்டிருப்பீர்கள். அது தவறு. விரலைத் தலைக்கு மேலே கொண்டு வந்து நெற்றிக்குக் கீழே கொணர்ந்து இட்டால் அது ஒரே விநாடியில் சரியாகப் பொருந்திவிடும்.

நண்பரும் நண்பர் மனைவியும் ஆச்சரியத்தோடு பார்க்க, விளக்குகிறார். "எனக்கு எப்படித் தெரிந்தது என்றுதானே கேட்கிறீர்கள்? ஸ்ரீரங்கம் கோவிலில் வேணுகோபாலன் சந்நிதியில், ஒரு பெண் சிற்பம் இவ்வாறு பொட்டு இட்டுக் கொண்டு நிற்கிறது. ஒருவேளை நீங்கள் வீரசைவராக இருந்து பெருமாள்கோவில் போகாதவரானால், தென்காசி விசுவநாதர் கோவிலுக்குப் போங்கள். அங்கேயும் இதேபோல ஒரு சிற்பம் இருக்கிறது" என்று சொன்னார். எவ்வளவு ஆழ்ந்த ஆராய்ச்சி பாருங்கள்.

ஞானசுந்தரம் கொடுத்த இன்னொரு சுவையான தகவல். தொ.மு.பா உள்படப் பலர் மாமல்லபுரச் சிற்பங்களை உருவாக்கியது நரசிம்ம பல்லவன் என்று எழுதுகிறார்கள். கல்கியின் எழுத்து வலிமையும் இதற்குக் காரணம். சிவகாமியின் சபதம் நினைவு இருக்கிறதா? ஆனால் அந்தச் சிற்பங்கள் அவனுக்குப் பின்வந்த ராஜசிம்ம பல்லவன்தான் உருவாக்கினான் என்பது தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் முன்னாள் இயக்குநர் நாகசாமியின் கருத்து.

அடுத்துப் பேசிய திரு. மஜீத் தற்போதைய தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர். அவர் சுதைச் சிற்பங்களைப் பற்றியும், அவற்றில் மூலிகை எண்ணெய், வண்ணச் சுண்ணம் ஆகியவை எவ்வாறு உபயோகப்படுகின்றன என்றும் சுவையான தகவல்கள் தந்ததோடு, எவ்வாறு தொ.மு.பா. இப்படிப் பல நுட்பமான செய்திகளைத் திரட்டியிருக்கின்றார் என்றும் விளக்கினார்.

கடைசியாகப் பேசிய கல்கியின் புதல்வி திருமதி ஆனந்தி, கல்கியின் சாதனைகளில் குறிப்பிடத்தக்கவையாக, டி.கே.சியையும், தொ.மு.பாவையும், கம்பனைப் பற்றியும், கலைக் கோவில்களைப் பற்றியும் எழுத வைத்ததைச் சொன்னார். இவர் சொன்ன இன்னொரு கருத்தும் கவனிக்கத்தக்கது. டி.கே.சி. ராஜாஜி, கல்கி, சோமு, மஹாராஜன், தொ.மு.பா போன்றோர் கலந்து உரையாடும் போதுதான் ஒருவருக்கொருவர் கருத்துப் பரிமாற்றத்தால் புதிய சொற்கள் கூட உண்டாகும்.

ஆனந்தி சிறுமியாக இருக்கும்போது, குற்றால வட்டத்தொட்டியில் ஒருமுறை கலாசாரம் (Culture) என்ற சொல்லுக்குப் பதில் வேறு தமிழ் வார்த்தை என்ன என்ற சர்ச்சை எழுந்தது. டி.கே.சி பண்பு என்று சொன்னதை ராஜாஜி ஏற்கவில்லை. நீண்ட விவாதத்துக்குப் பின் மெய்ப்பாடு, வழிபாடு என்பது போன்று பண்பாடு என்று சொல் உருவாகி ஏற்றுக்கொள்ளப்பட்டது. இப்போதைய சினிமா, டி.வி பாதிப்பால் இப்படிப்பட்ட இலக்கிய சர்ச்சைக்கு நேரமில்லாமல் போகிறது. ஆனந்தி ஒரு நாலடியார் பாடலைத் தன் கருத்துக்குத் துணையாக அழைத்தார்.

> **“பகலரும் தொல் கேள்வி தன்மையுடையார்**
> **இகல்இலர் எஃகுடையார் தம்முட்குழீஇ–நகலின்**
> **இனிதாயின் காண்பாம் அகல் வானத்து**
> **உம்பர் உறைவார் பதி”**

வருணனைக்கு அப்பாற்பட்ட ஆழந்த கல்வியுடையவர்கள், கூர்த்த மதியில் தமக்கு இணையில்லாதவர்கள், கூடி சிரித்த முகத்தோடு சிந்தித்துப் பேசி மகிழும்போது அந்த இடம் இந்திரன் உறையும் தேவலோகத்தையும் தோற்கடித்து விடுகிறது.

அன்றைய நிகழ்ச்சியும் அங்கே தேவலோகத்தைக் கொண்டு வந்ததாக, கூடியிருந்தவர்கள் உணர்ந்திருக்கலாம். அதை அமைத்த டி.கே.சி வட்டத்தொட்டியின் அமைப்பாளரும் தொ.மு.பாவின் அருமைப் புதல்வியுமான திருமதி ராஜேஸ்வரி நடராஜனுக்கும் அவருடைய குடும்பத்தினருக்கும் இலக்கிய உலகம் நன்றி பாராட்ட வேண்டும்.



வீரபத்ரன்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# சகோதரர் தொண்டைமான்

## மீ. ப. சோமு

தொண்டைமான் அவர்களுடன் பழகிய எல்லோருமே அவருடைய அன்பிலே மயங்குவார்கள். அவருடைய இலக்கியப் பேச்சிலே, அவருடைய கலை விளக்கங்களிலே, அவருடைய நகைச்சுவைகளிலே மயங்கிப் போவார்கள். அவருடைய முகத்திலே, வயது ஏறிவிட்ட பிறகும் கூட ஒரு பசலைப் பண்பு மிதக்கும். அத்தனை பெரிய சரீரத்திலே, ஒரு குழந்தை முகம் நின்று நண்பர்களோடு ஒரு குழந்தையின் ஆனந்தமும் குதி போட்டுக் கொண்டிருக்கும். தொண்டைமான் அவர்களின் வெற்றிகள் அனைத்துக்குமே காரணம் இந்தக் குழந்தைக் குதூகலம்தான்.

இத்தனை வயதிலும், எங்காவது ஒரு புதிய கோயில், ஒரு புதிய சிற்பம், எங்கோ ஒரு காட்டுக்குள்ளே பாருங்கள். உடனே கிளம்பிவிடுவார் அவர். ஒரு புதிய பாடல் ஒரு நூலிலே எங்கோ ஓர் ஓரத்தில் தென்பட்டால் போதும். தொண்டைமான் அவர்களின் இதயத்துக்குள்ளே இருக்கும் சிசு எழுந்து நடமாடும். நடனமே கூட ஆடும்.



# கலைச் செவியர் தொண்டைமான்

## *திருலோக சீதாராம்*

பாஸ்கரத் தொண்டைமான் நம்மிடையே வாழ்கின்ற கலைச் செவியர். கற்சிலைகள் அவருக்குக் கூறுகின்ற கோடி கோடிச் செய்திகளைக் கோமளமான தமிழில் அவர் நமக்குக் குழந்தைகளுக்குச் சொல்வது போலச் சொல்லி வருகிறார்.

சிறு பிராயத்திலிருந்து அரசாங்க உத்தியோகஸ்தர்கள் என்றால், அவர்களை ஓர் அந்நிய பாவத்துடன் பார்ப்பது ஒரு இயல்பாக எனக்கு இருந்து வந்தது. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களை நான் சந்தித்துப் பேசிய போதுதான் என்னுடைய அறியாமை நீங்கிற்று. மிகச் சிறந்த கர்மயோகி. கவிஞர், உல்லாச புருஷர், இவ்வளவுக்கும் மேலாகக் கலைஞர் என்று அவரைப் புரிந்துகொண்ட போதுதான் நான் பெரும்பேறு பெற்றேன் என்றும் அறிந்து கொண்டேன்.

கந்தர்வ கானம் என்ற சிறு காப்பியம் ஒன்றை நான் எழுதி முடித்து, அன்றிரவே புறப்பட்டு, தஞ்சைக்குச் சென்று, தொண்டைமான் அவர்கள் வீட்டு வாசலில் காத்திருந்தேன். கலைக்கூடம் வேலையாக அலைந்துவிட்டு, நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு மேல் அவர் வந்து சேர்ந்தார். வாசற்படியிலே மறித்துக் கொண்டேன். ஆயிரம் வரிகளுக்கு மேல் நீண்டுள்ள அந்தக் காப்பியத்தை அவருக்குப் பாடிக் காட்டிய போது, அவ்வளவையும் ரசித்துக் கேட்டு விட்டுப் பின்னரே வீட்டுக்குள் சென்றார். கவிஞர்களிடமும், கவிதையிடமும் அவருக்கிருந்த பரிவுக்கு வேறு அத்தாட்சி வேண்டியதில்லை.

# ரசக்ஞானி தொண்டைமான்

## ரா. ஜகத்ரட்சகன்

தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் ஒரு சிறந்த ரசக் ஞானி. இந்த ரசக் ஞானியின் கையைப் பிடித்துக்கொண்டு, தல யாத்திரையைத் தொடங்கலாம். வேங்கடத்திலிருந்து நம்முடைய தற்கால நிலைமையையும், உள்ளப் பாங்கையும் அறிந்து வைத்திருக்கிறார். கடன் வாங்கிக் கல்யாணம் என்று துவங்கி, அந்தக் கல்யாணம் முடிந்த பின்னர், வட்டியும் முதலும் கொடுக்காத வேங்கடவனைக் காட்டுகிறார். ஒரு பகுத்தறிவாளருடன் சென்று, கழுகு தொழு வேதகிரியானையும், லியோ டால்ஸ்டாயின் கதையோடு, அம்பர் மாகாளத்தானையும், கிரேக்க இலக்கியத்தின் டயோஜனீஸ் வரலாற்றோடு ஆரூர் தியாகராஜனையும், பெதிக் லாரன்ஸ் பெயர் அமைந்ததைக் காட்டி, மாதிருக்கும் பாதியனையும், இப்படியாக, பாலாற்றங்கரை, காவிரிக்கரை இருமருங்கும், பிறகு பொருநை தாண்டி குமரி வரை உள்ள தலங்கள் அத்தனையும் காட்டுவார்.

இவரது சிறந்த தொண்டினை, அவரது "கல்லும் சொல்லாதோ கவி" என்ற நூலில் காணலாம். கல்லை எப்படி எல்லாம் காட்டுகிறார். அவரது காமிராவாலும், சொல்லாலும் கல் பேசுகிறது. கதை சொல்கிறது. ஏன் சங்கீதமே பாடுகிறது. கல்லிலே கவி, காவியம், கற்பனை, சித்திரம், நாணம், காதல், கனல், புலவி என்று அத்தனையையும் காட்டுகிறார் இந்த ரசக்ஞானி.

# சமூகத் தலைவர் தொண்டைமான்

## *என்.எஸ்.வி. தொண்டைமான்*

தொண்டைமான் என்ற சொல்லுக்கு அரசன் என்று பொருள் சொல்வார்கள். தோட்டி முதல் தொண்டைமான் வரை என்ற தொடரே அதை விளக்கப் போதியதாகும். தொண்டை நாட்டிலே இருந்து அரசாண்ட பல்லவ மன்னர்கள் தொண்டைமான் என்ற பட்டத்தைத் தாங்கியிருக்கிறார்கள். பின்னர் புதுக்கோட்டையிலிருந்து அரசாண்ட மன்னர் பரம்பரையும் தொண்டைமான்களாகவே இருந்திருக்கின்றனர். அந்த மன்னர் பரம்பரையைச் சேர்ந்த மூன்று சகோதரர்கள் தென் பாண்டி நாட்டுக்குச் க்ஷேத்ராடனமாக வந்து இங்கே தங்கி மடாலயங்கள் எல்லாம் நிறுவினார்கள் என்று ஒரு தாமிர சாசனம் கூறுகிறது.

இந்தச் சமூக மக்களின் பொருளாதார நிலையை உயர்த்த வேண்டும் என்று பாடுபட்டவர்களில் முதன்மையாக நினைக்கப்பட்ட வேண்டியவர் தென்காசி குருமூர்த்தி தொண்டைமான்தான். அவர்தான் புதுக்கோட்டை சென்று அங்குள்ளவர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு, புதுக்கோட்டைக்கும் திருநெல்வேலிக்கும் இணைப்பை ஏற்படுத்தினார். அவருக்குப் பின், பாளையங்கோட்டை மனகாவலப் பெருமாள் தொண்டைமான், வீரவநல்லூர் பிச்சைக்காரத் தொண்டைமான், திருநெல்வேலி தொண்டைமான், முத்தையா ஆகியோர் சமுதாய முன்னேற்றத்தில் அக்கறை கொண்டு, சங்கம் நிறுவியும் மாநாடுகள் நடத்தியும் உழைத்தார்கள். தொண்டைமான் முத்தையா கள்வர் கோமான் என்று ஒரு பத்திரிகையும் நடத்த வந்தார்.

தஞ்சை ஜில்லாவில் மன்னார்குடியை அடுத்து குறிச்சியில் 1929 ஆம் ஆண்டு ஒரு கள்ளர் மாநாடு நடந்தது. சுவாமிநாத மழவராயர், தொண்டைமான் முத்தையா போன்றோர் இணைந்து நடத்திய மாநாடு அது. நாவலர் வேங்கடசாமி நாட்டார் அவர்கள் செய்து வைத்த அறிமுகத்தால், பாஸ்கரத் தொண்டைமானும், அவரது சகாக்களும்

அந்த மாநாட்டில் கலந்துகொண்டு உரையாற்றினார்கள். அப்போது பூண்டி வீரையா வாண்டையாரின் அறிமுகம் கிடைத்தது. தஞ்சைக்கும் திருநெல்வேலிக்கும், பெண் கொடுத்து, பெண் எடுக்கும் பழக்கமும் ஏற்பட்டது. திருநெல்வேலி கள்ளர் குல மக்களின் தலைவராய் இருந்து, பாஸ்கரத் தொண்டைமான் ஆற்றிய பணிகள் பலபல.

தொண்டைமான் சமுதாயத்துக்காகச் செய்த சேவைகளில் எல்லாம் சிறந்தது, குற்றாலத்து மடத்தைத் தங்களது என்று உரிமை கொண்டாடிய குற்றாலநாதரது தேவஸ்தானத்தாரோடு போராடி, நீதிமன்றம் வரை போய் வாதாடி, மடத்தை மக்களுக்கு மீட்டுத் தந்ததே 1944 க்கு முன்னர் குற்றாலத்து மடம் கழுதைகள் அடைகிற மண்டபமாகத்தான் இருந்தது. கவனிப்பார் இல்லாமையால் பாபநாசம் மடம் எல்லாம் பிறர் கைவசம் போய்விட்டது. திருச்செந்தூர் மடமும் குற்றால மடமும் மட்டும் காப்பாற்றப்பட்டன. குற்றாலம் மடத்தை ஊர் மக்களின் ஒத்துழைப்புடன் ஸ்ரீரமணாத்தாரணம் செய்து திறப்பு விழாவும் நடத்தி வைத்தார்.

அந்தத் திறப்பு விழாவுக்கு அரசர் பெருமானின் மைத்துனரான, கல்லாக்கோட்டை ஜமீன்தாரார் விஆர்பிஆர் சிங்கப் புலியாரை வரவழைத்து, ரசிகமணி டிகேசி அவர்கள் தலைமையில் ஒரு பெரிய திறப்பு விழாவும் நடத்தி வைத்தார். சூட் தாக்கல் செய்தார்கள். கேசை, முன்சீப் கோர்ட்டிலும், சப் கோர்ட்டிலும், பின்னர் ஹைகோர்ட்டிலும் வாதாடியவர்கள் தொ.மு.பா. அவர்களே. அத்தனைக்கும் தோன்றாத்துணையாயிருந்து உதவியதோடு தீர்வை செலுத்தப்படாமல் மடம் ஏலத்துக்கு வரும் நிலையில் இருந்தபோது, தொமுபா அவர்கள்தான் செக் அனுப்பி, மடம் ஏலம் போகாமல் காப்பாற்றினார்கள். மடத்திலிருந்து பத்து செண்ட் நிலத்தில் கூத்தர் குடில் என்ற குடிலைக் கட்டி, அதில் வரும் வாடகை, வருமானத்தில் இருந்து, வருஷா வருஷம் தீர்வையும் அவர்களே கட்டி வந்த தன் காரணமாக, மடம், தேவஸ்தானத்துக்கோ அல்லது மற்றவர்களுக்கோ போய்விடாமல் அரண் செய்து காப்பாற்றினார். அவர்கள் செய்த சமுதாய சேவைகளில் எல்லாம் தலையாயது இதுதான். இத்தனைக்கும் அவர்களுக்கு உதவியாக இருந்து ஓடியாடி வேலை செய்த பாக்கியம் எனக்குக் கிடைத்ததை எண்ணி பெருமைப்படுகிறேன்.

# IS THERE A BOON THAT I REQUIRE?

**N. Bala Baskar**

*திருவாசகம் - குழைத்த பத்து*

**வேண்டத்தக்கது அறிவோய் நீ**
**வேண்டும் பொருளைத் தருவோய் நீ**
**வேண்டும் அயன்மாற்கு அரியாய் நீ**
**வேண்டி என்னைப் பணி கொண்டாய்**
**வேண்டி நீ யாது அருள் செய்தால்**
**யானும் அதுவே வேண்டினல்லால்**
**வேண்டும் பரிசு ஒன்று உண்டென்னில்**
**அதுவும் உந்தன் விருப்பன்றே**

*மாணிக்கவாசகர்*

We all have very strong belief in the power of prayer and worship. That is why we say that "more things are wrought by prayer than the world dreams of."

But when we pray to the Divine, most of us have a problem as to what we should pray for. Usually our prayers are for property, prosperity and material pleasures. Many pray for a good life for themselves and their friends and relatives. Only a few pray for the well being and progress of humanity as a whole.

There may not be even a single individual who prays to the Divine, simply leaving it to the divine to grant him what the divine considers is good for him. Our habit is to pray and seek from the divine what we perceive as our greatest requirements.

To people like us, Saint Manicker Vachagar explains what a prayer to the Divine should be. He talks to the Divine: "You know

what are my needs. you have been blessing me by granting me my desires. You who, in Thiruvannamalai, took the shape of a leaping flame, whose source and Crown could not be located by Vishnu and Brahma, has shown me boundless compassion by seeking me out as a devotee. I seek from you only that which you think I need. If there is any other boon that I require even that would be your desire!"

Such complete acceptance of the Omnipotence of the Divine and the aspiration to live a life of devotion is the philosophy of surrender extolled by religious scholars such as in the Vishishtadvaitha philosophy. There is nothing in this world that we can have unless the Divine desires it. Everything happens as willed by the Divine. What other boon is required by one who is steadfast in his devotion to the Divine? Such an individual who realises that all things and deeds are of the Divine, has attained a maturity called 'Nirvana', a state beyond all pain and pleasure.

And, is that not the aspiration behind all progress?

தொண்டைமான் தாத்தா எழுதிய 'வேண்டும் பரிசு ஒன்று உண்டோ' - என்ற கட்டுரையின் ஆங்கில மொழியாக்கம். தாத்தா கடைசியாக எழுதிய கட்டுரை.



வேலூர் மாவட்ட கலெக்டராக பதவி வகித்த போது...

# AMMAACHI

**N. Bala Baskar**

**B**alammal was born in Palayamkottai a small town in Southern Tamil Nadu in 1907. She was the fifth among nine - or may be tensiblings. Her father was a well knwon contractor to the British Sahibs and some of the buildings put up by him stand solid testimony to his professional capability and integrity. Life in the big contractor's house as a small child may not have been all that unpleasant for young Balamma who was by far the fairest and the most beautiful of the brood. But the father died rather prematurely and the task of bringing up the children was taken up by an iron willed maternal grandmother. She saw to it that all the children including the girls, got an education. This must have been a revolutionary step during the second decade of this century. So there she was, this young woman of great beauty, at just 17 years of age given away in marriage to a short and dark complexioned young man of 20 years of age. One suspects that Balamma must have accepted the young man as her husband only because she may have had no choice in the matter. But then it may not have taken her much time to realize that her husband possessed an extraordinary intellect. I believe that Thondaman Muthiah Bhaskara Thondaman could not have achieved all that he did in his lifetime but for the unstinting love and quiet support of his wife.

Balammal was my maternal grand mother, fondly addressed as Ammaachi in Tamil. Ammaachi followed her husband to all the places where his government job took him. He rose from being a humble clerk in the Collector's Office in Tirunelveli to retire as a Collector himself form the old North Arcot District. This in itself would have been a great achievement for most men. But in the case of T. M. Bhaskara Thondaman, this paled into insignificance compared to his artistic and literary achievements as a connoisseur curator, exponent, orator, scholar and writer.

I was brought up by Ammaachi almost form my birth. When my

ரெவினியூ மகா சமுத்திரத்திலேதான் தொண்டைமானையும் தூக்கிப் போட்டார்கள். அலைகளும், திமிங்கிலங்களும், சுறாக்களும் தொண்டைமானை எதுவுமே செய்ய முடியவில்லை. கல்லைக் கட்டிக் கடலில் தள்ளினாலும் மிதந்து விடக்கூடிய அப்பர் பெருமானுடைய பக்தராச்சே. அப்படிப்பட்டவர்களுக்கு நல்ல தோணியும் துடுப்பும் கிடைத்துவிட்டால் கேட்கவா வேண்டும். தமிழும் கலையும் துணையிருக்கும் போது, இந்த சமுத்திரம் என்ன. எந்த சமுத்திரத்தையும் கடந்து வெற்றி வீரராய் மீண்டுவிடும் ஆற்றல் அவர்களுக்கு நிறைய உண்டு.

எத்தனை ஆண்டுகள்தான் வேலை பார்த்தால் என்ன, பதவியிலிருந்து ஓய்வு பெறுவது என்றால் பலருக்கு சங்கடமாகத் தானிருக்கிறது. ஏன்தான் வயது கூடுகிறதோ என்றும் மார்க்கண்டேயர்களாகவே இருந்தோமில்லையே, எப்போதும் பதவியில் இருக்கலாமே என்றெல்லாம் ஏங்குவார்கள். பதவி போனால், வருவாய் போய்விடுமே, செல்வாக்குப் போய் விடுமே, அதிகாரம் போய்விடுமே என்றெல்லாம் பரிதவித்துவிடுவார்கள். சிலர் முன்னெச்சரிக்கையாய் ஓய்வு பெறு முன்பிருந்தே, வேறு உத்தியோகத்துக்கு, முயற்சித்து ஓய்வு பெற்றதும் உத்தியோகத்திலும் அமர்ந்து கொள்வார்கள். இப்படி எல்லாமிருக்க, ஒரு மாவட்டக் கலெக்டர் பதவியிலிருந்த போதும், ஓய்வு பெறும் நாள் என்று வரும் என்று வரும் என்று எதிர்நோக்கி வரவேற்று, அந்த விடுதலை நாளை நன்னாளாகக் கொண்டாடிய ஒரே அபூர்வ மனிதர் திரு. தொண்டைமான் அவர்கள்தான், எனக்குத் தெரிந்தவரையிலே. அரசு இல்லை என்றவுடன் இராமன் எவ்வளவு உற்சாகமாகக் கிளம்பினானோ அவ்வளவு உற்சாகமாக ஓய்வை வரவேற்றுக் கிளம்பினார்கள் இவர்களும்.

**உருளுடைச் சகடம் புண்ட**
**உடையவன் உய்த்த கார் ஏறு**
**அருளுடை ஒருவன் நீக்க**
**அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான்**

என்று நாமும் கம்பனோடு சேர்ந்து பாடலாம்தானே.

# எந்தையும் தாயும்

அப்பா கலந்து கொள்ளுகிற திருமணங்களில் எல்லாம் மணமக்களுக்கு ஒரு அறிவுரை தயாராய் வைத்திருப்பார்கள். 'A Husband and wife should not be competitve but they should be complimentary' என்று சொல்வார்கள். கணவன் சிவப்பாக இருந்தால் மனைவி கருப்பாக இருக்க வேண்டும். மனைவி சிவப்பாக இருந்தால், கணவன் கருப்பாக இருக்க வேண்டும். அப்போதுதான் பொருத்தம் நன்றாக இருக்கும். இறையுருவங்களே அப்படித்தான் இருக்கின்றன. சிவபெருமான் சுடர்மேனியன் - அன்னை உமாதேவியோ நல்ல கருப்பாயி. திருமால் கார்மேக வண்ணன் - அவன் தேவி லக்ஷ்மியே செந்தாமரை நிறத்தாள். முருகன் செம்மேனி அழகன். அவனுக்கு வாய்த்த குறமகள் வள்ளியோ நேர் எதிரிடை. அப்படியேதான் ராமனும் சீதையும். மதனும் ரதியும். ஜோடிகள் அப்படி அமைவதிலேதான் ரஸமும் இருக்கிறது" என்று விளையாட்டாகச் சொல்வார்கள்.

'என்னடா, தொண்டைமான் இப்படிச் சொல்கிறார் என்று விஷயம் தெரியாதவர்கள் முழிப்பார்கள்.' தெரிந்தவர்களோ, சரிதான் ஆசாமி சப்பைக் கட்டு கட்டுகிறார் என்று புரிந்துகொள்வார்கள். ஏனென்றால் அப்பா நல்ல கருப்பு. அம்மா நல்ல சிவப்பு. அவர்கள் கணக்குப்படி ஜோடிப் பொருத்தம் சரிதானே?

அப்பாவுக்குத் திருமணம் நடக்கிறபோது கல்லூரி மாணவன் தான். அவர்களுக்கு, அம்மா ஒருவகையில் முறைப்பெண்ணாக வேண்டும். பரம்பரையாகவே உறவினர்கள். பெண் கேட்டும் தொலைதூரம் செல்ல வேண்டிய சிரமமும் இருக்கவில்லை. திருநெல்வேலியிலிருந்து மூன்று கல் தொலைவில் உள்ள பாளையங்கோட்டைதான் அம்மா பிறந்து வளர்ந்த ஊர். அப்பாவின் குடும்பத்தைப் போலவே அம்மாவின் குடும்பமும் சீரும் சிறப்பும்

நிறைந்து விளங்கிய குடும்பம். என் தாய்வழிப் பாட்டனார், திரு. மனக்காவலத் தொண்டைமான், அந்த நாளில் பெரிய காண்ட்ராக்டர் என்று பெயர் எடுத்தவர்கள். திருநெல்வேலி ஸாப்டர் உயர்நிலைப் பள்ளியும், பாளையங்கோட்டை நூற்றாண்டு மண்டபமும் அவர்கள் திறமைக்குச் சான்றாக இன்றும் விளங்குகின்றன. அதற்காக கவர்னரிடமிருந்து தங்கத்தோடா பரிசும் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் வீட்டுக்குப் பெயரே மங்களா வீடு தான்.

அப்படிப்பட்ட செல்வாக்கு மிகுந்த குடும்பத்திலே ஐந்தாவது பெண்ணாகப் பிறந்த செல்வி பாலம்மாளைத் தான் சிரஞ்சீவி பாஸ்கரன் கரம்பிடித்தார் முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு. அம்மாவும் எட்டாவது வரை படித்து ஆசிரியைப் பயிற்சியும் பெற்றவர்கள். கல்யாணமான புதிதில் குழந்தைக் குட்டி என்றெல்லாம் ஏற்படாத காலத்தில், அப்பாவின் இலக்கிய சேவைக்கு ஓரளவு ஒத்தாசையாகவும் இருந்திருக்கிறார்கள். அப்பா எழுதும் கட்டுரையெல்லாம் Fair Copy பண்ண வேண்டியது அம்மாவின் வேலை. இப்போதெலலாம் அந்த ஜோலிக்கே போவதில்லை.

நிறத்தால மட்டுமல்ல, குணத்தாலும் பழக்கழக்கங்களாலும், அப்பாவுக்கும் அம்மாவுக்கும் நிறைய வேறுபாடு உண்டு. அப்பாவுக்குக் காப்பி என்றால் உயிர். அதைப் பக்குவமாய்த் தயாரித்துக் கொடுக்கிற அம்மாவுக்கோ அந்த வாசனையே ஆகாது. அப்பா எவ்வளவு சீரியசான விஷயமாக இருந்தாலும் லகுவாக எடுத்துக் கொள்வார்கள். அம்மா அப்படியில்லை. துரும்பைத் தூணாகவும், கடுகை மலையாகவும் நினைத்துக்கொண்டு அவஸ்தைப் படுவார்கள். குடும்பம், குடும்ப காரியங்கள் என்றெல்லாம் அதிகம் மனதை அலட்டிச் கொள்ளமாட்டார்கள் அப்பா. குழந்தைகள் யாருக்காவது உடம்பு சரியில்லை என்றால் கூட, எட்ட நின்றே பார்த்துவிட்டுப் போய் விடுவார்கள். ஆனால் அம்மாவுக்கோ குடும்பம்தான் சகலமும். அதற்காக உழைக்கவும், கவலைப்படவுமே பொழுதெல்லாம் சரியாயிருக்கும். நான்கு மக்கட் செல்வங்களைப் பெற்றார்கள். ஆனால் இன்று தங்கை ராணியும், தம்பி கருணாகரனும் எங்கள் உள்ளங்களிலேதான் வாழ்கிறார்கள். வாழ்க்கையில் எதிர்பாராமல் ஏற்பட்ட இந்தப் பேரிடிகளையெல்லாம் இறைவன் திருவுள்ளம் என்று அப்பா சமாளித்துக் கொண்டார்கள். தாயுள்ளத்தால் அப்படியெல்லாம் சமாளிக்க முடியாதுதானே. இன்று அவர்கள் இருவருக்கும் துணையாக பேரன் பால பாஸ்கரன் அவர்களுடனேயே இருக்கிறான்.

பொருள் சேர்ப்பதிலே இருவருக்கும் எப்போதும் அவ்வளவு அக்கறை இருந்ததில்லை. நேர்மையான வழியில் கிடைக்கிற சம்பாத்தியமே நிலைத்தால் போதும் என்று நினைக்கிறவர்கள் இருவரும். தம்மால் இயன்ற உதவியைப் பிறருக்குச் செய்ய வேண்டும் என்ற நல்ல பண்பும் அவர்களிடத்திலே அன்றும் இன்றும் இருக்கிறது. இன்னா செய்தார்க்கும் அவர் நாண நன்னயம் செய்யும் நல்ல குணத்தையும் எத்தனையோ முறை கண்டிருக்கிறேன்.

அப்பா உத்தியோகத்திலிருந்த காலத்தில், எப்போதும் நண்பர்களும் உறவினர்களுமாய் வீடு நிறைந்திருக்கும். அம்மாவுக்கும் சதா வேலை இருந்து கொண்டே இருக்கும். அப்பா எதிர்பாராதவிதமாகவும் யாரையாவது விருந்தினராக அழைத்து வருவதுண்டு. தன்னுடைய சொந்த அசௌகரியத்தை எல்லாம் பொருட்படுத்தாமல் வந்தவர்களை வரவேற்று உபசரிக்கும் பண்பு அம்மாவிடம் இருந்தது. வீட்டையும் விருந்தினர்களையும், அப்பாவையுமே கவனிக்கும் பொறுப்பை அம்மா ஏற்றுக்கொண்டதால் அப்பா நிர்விசாரமாய் இலக்கியத் தொண்டு புரிய வசதியாக இருந்தது என்று சொன்னால் அது மிகையே அல்ல.

சாப்பாட்டை அல்ல, அல்ல சாப்பாட்டு நேரத்தைப் பொறுத்தவரையில் அப்பா ரொம்ப கரெக்ட். பசித்துப் புசி என்பதெல்லாம் அவர்களுக்கு உடன்பாடில்லா விஷயம். மணி ஆயிற்றா இலையைப் போடு என்று சொல்லக் கூடியவர்கள். சாப்பாட்டிலும், உப்பு, காரம் இரண்டும் வெகு குறைவாக இருக்க வேண்டும். கொஞ்சம் காரம் சேர்ந்துவிட்டாலும் தொலைந்தது. மிளகாயை அரைத்துக் கலக்கியிருக்கிறீர்களே, மனுஷன் சாப்பிட முடியவில்லையே என்று காரமாய்ப் பேசுவார்கள். கவிதையைக் காரசாரமாய் ரசிக்கிற அப்பா, சாப்பாட்டை உப்புச் சப்பில்லாமல் சாப்பிடுகிறார்களே என்று பரிதாபமாக இருக்கும் எங்களுக்கு. "மற்ற வீடுகளிலே பாருங்கள், அரைமணி ஒருமணி நேரத்திற்குள் சமைத்துப்போட்டு விடுகிறார்கள். உங்களுக்குத்தானே இரண்டுமணி மூன்று மணி என்றாகிறது என்பார்கள். அதெப்படி சமைப்பார்களோ, அரைமணி நேரத்தில். வெந்ததும் வேகாததுமாய்ப் போடுவார்களோ என்னமோ!

அப்பா அடிக்கடி சொல்வார்கள். கணவனுக்கும் மனைவிக்குமிடையே விட்டுக் கொடுக்கும் தன்மை வேண்டும் என்று. சொல்வதென்னவோ அப்பா என்றால், விட்டுக் கொடுப்பதெல்லாம்

அம்மாதான் என்று தோன்றுகிறது. அப்பாவுக்கு சட் என்று கோபம் வரும். வந்த வேகம் தெரியாமல் போய்விடவும் செய்யும். காசிக்குப் போய் வந்தபின் கோபத்தை விட்டு விட்டேன் என்று சொல்லிக் கொண்டுதான் இருக்கிறார்கள். உண்மை அம்மாவைக் கேட்டுப் பார்த்தால் தெரியும்.

அம்மாவிடம் சொன்னார்கள் ஒருநாள் "மணிவிழா மலரிலே உன்னைப் பற்றி எழுதி, வாங்கு வாங்கு என்று வாங்கி விடுகிறேன்" என்று. நான் விளையாட்டாகக் கேட்டேன். "அப்படியே உங்களைப் பற்றியும் எழுதலாம் தானே" என்று "ஓ. எழுதேன் வேண்டாம் என்று சொல்லவில்லையே. உன் அம்மா பெருமையையும் என்னுடைய குறையையும் எழுதேன்" என்றார்கள் ஆம். எல்லோருமே நிறைவை எழுதிவிட்டால், குறையை எழுதவும் ஓர் ஆள் தேவை தானே? இங்கே அப்பா அம்மா இவருடைய நிறைவையும். ஏன் இருவருடைய குறையையுமே எழுதியிருக்கிறேன். நான் தானே எழுதமுடியும். என் மீது அவர்கள் கோபிக்க முடியாதே. உள்ளதை உள்ளபடி தானே எழுதியிருக்கிறேன். அம்மா குறையை எழுதியதில் அப்பாவுக்குத் திருப்தியும், அப்பா குறையை எழுதியதில் அம்மாவுக்குத் திருப்தியும் ஏற்பட்டால் அதுவே போதும் எனக்கு வேண்டியது இருவர் திருப்தியும்தான்.



# வேங்கடம் முதல் குமரிவரை

[பாலாற்றின் மருங்கிலே]

## ஜஸ்டிஸ் எஸ். மகராஜன்

சென்ற சில மாதங்களாக நண்பர் பாஸ்கரத் தொண்டைமான் திருக்கோயில்களைப் பற்றி எழுதி வரும் கட்டுரைகள் தமிழ்நாட்டை ஒரு கலக்குக் கலக்கி இருக்கின்றன. ஏதோ சினிமா பத்திரிகைகளைப் படிக்க மக்கள் அடி பிடி போட்டுக் கொள்வதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் 'கல்கி'யில் கோயில்களைப் பற்றி வரும் கட்டுரைகளைப் படிப்பதில் 'நான் முந்தி நீ முந்தி' என்று கணவர்களும் மனைவியரும், கிழவர்களும் குழந்தைகளும் போட்டி போடுவதைப் பார்க்கும்போது அதிசயப்பட வேண்டியிருக்கிறது.

சில நாட்களுக்கு முன், ஓர் ஆந்திர நண்பர், சர்க்கார் டாக்டராக இருப்பவர் என்னைப் பார்த்ததும், "ஐயா! உங்கள் நண்பர் தொண்டைமான் பெரிய வம்புக்காரராயிருக்கிறார். அவர் எழுதும் கட்டுரை ஒவ்வொன்றையும் படித்துவிட்டு, என் மனைவி, 'உடனே புறப்படுங்கள், வள்ளி மலை; வள்ளியைப் பார்க்க வேண்டும். கச்சி ஏகம்பனைக் காண வேண்டும். தணிகைக் குமரனைத் தரிசிக்க வேண்டும்' என்றெல்லாம் உத்தரவு போடுகிறாள். சர்க்கார் உத்தியோகத்திலிருக்கும் எனக்கு ஸ்தல யாத்திரை எல்லாம் கட்டி வருமா? 'போவோம் போவோம்' என்று சொல்லி, என் மனைவியை தாஜாப் பண்ணி வைத்திருக்கிறேன் என்று சொன்னார்.

இப்படி ஸ்தல புராணங்களும் சமயப் பிரசாரகர்களும் சாதிக்க முடியாத காரியத்தைச் சாதித்திருக்கின்றன இக்கட்டுரைகள். பக்தியையும் ஆர்வத்தையும் அப்படியே ஊட்டி இருக்கின்றன.

இந்தச் சாதனைக்கெல்லாம் காரணம் கட்டுரை ஆசிரியர் நம்மிடத்தில் வைத்திருக்கும் பரிவுதான். நம்முடைய உள்ளப் பாங்கை உணர்ந்து, நம் இதயத்தோடு ஒட்டிச் சமய உண்மைகளைப் பக்குவமாக்கிக் கொடுக்கும் வல்லமை அவரிடத்தில் இருக்கிறது.

'பதி, பசு, பாசம்' என்று மடிசஞ்சி பாஷையில் பேசி, அவர் நம்மை மிரட்டுகிறதில்லை. நாமெல்லாம் சினிமா உலகத்தில் ஊடாடிக் கொண்டிருப்பவர்கள் என்று அவருக்குத் தெரியும். ஆகவே 'கடன் வாங்கிக் கல்யாணம்' என்ற சினிமா படத்தைப் பற்றிப் பேசி, நம்மைத் தன் வசம் ஆக்கிக் கொண்டு, நம் கையைப் பிடித்துக் கொண்டே, ஏழுமலையும் ஏறி, "வான் நின்ற சோலை வடமலை மேல் நின்ற மாதவன்" சந்நிதியில் கொண்டே நிறுத்திவிடுகிறார்.

நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்று அவருக்குத் தெரியும். கலெக்டர் வேலை பார்த்தவருக்கு இது கூடத் தெரியாமலா இருக்கும்? ஆகவே ஜனநாயகத் தேர்தல் முறையைப் பற்றிப் பேசுவார். காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருப்போம். உடனே பத்தாவது நூற்றாண்டிலே குடவோலைத் தேர்தல் முறை எப்படி நடந்தது என்று சொல்லுவார். இதைப் பற்றி உத்திரமேரூர்க் கோயிலிலே ஒரு கல்வெட்டு இருக்கிறது என்று சொல்லி நம்மைக் கோயிலுக்கே இழுத்துச் செல்வார். அப்படியே உள்ளேயிருக்கும் வைகுண்டப் பெருமாள் முன்னிலையிலே கொண்டு போய் நிறுத்துவார். நம்மை அறியாமலேயே, பகுத்தறிவாளர்களாகிய நமக்கும் பக்தி வந்து விடுகிறது. இவ்வாறு விதம்விதமான உத்திகளைக் கையாண்டு நமக்குக் களிப்புட்டுகிறார்.

அவருடைய தமிழைப் பற்றிச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. உணர்ந்ததை உணர்ந்தபடி எல்லாம் தமிழில் எடுத்துக் கூறும் சித்து அவருக்குக் கை வந்திருக்கிறது. 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்திக்குப் பின் தமிழை இப்படிச் சுகமாகக் கையாளுபவர் தொண்டைமான்தான் என்று இன்று பல அன்பர்கள் கருதுகிறார்கள்.

அவருடைய தமிழ் நடை, முதலிலிருந்து கடைசி வரை துள்ளி விளையாடிக்கொண்டே செல்கிறது. பம்முவதும், பாய்ச்சல் காட்டுவதும், கர்ணங்கள் போடுவதும், பல்டி அடிப்பதும், ஹாஸ்யங்களை உதிர்ப்பதும், பக்தி வெள்ளத்தில் வாசகர்களை முக்கி முக்கி எடுப்பதுமாக இந்தப் பாஸ்கரத் தமிழ் செய்கிற ஜால வித்தைகள் பலப்பல.

ஆசாமி பொல்லாதவர். விளையாட்டுப் போக்கிலேயே பல அரிய உணர்ச்சிகளைப் புகட்டுகிறார். மேனி சிலிர்க்கச் செய்கிறார். புராணக் கதைகளைப் பக்தியோடு சொல்கிறார். அதே மூச்சிலேயே புராணங்களுக்குப் பகுத்தறிவு முலாமும் பூசுகிறார்.

கட்டுரைகள் ஸ்தலங்களுக்கு வழிகாட்டிகளாக அமைந்திருக்கின்றன. அதோடு நின்றுவிடவில்லை. அவை வரலாற்று ஆராய்ச்சி செய்கின்றன. கல்வெட்டுக்களின் நுணுக்கங்களைக் காட்டுகின்றன. பக்திப் பாடல்களுக்கு இலக்கிய விளக்கம் கொடுக்கின்றன. சிற்பக் கலையின் அழகுகளை எடை போடுகின்றன. மூர்த்திகளை அவனிருக்கும் வண்ணத்திலேயே எடுத்துக்காட்டுகின்றன.

நூலைத் தொட்டத்தொட்ட இடமெல்லாம் கற்பூர வாசனை வீசுகிறது. சந்தனமும் ஜவ்வாதும் மணக்கிறது. மூர்த்தி, தலம், தீர்த்தம், அபிஷேகம், அலங்காரம் எல்லாம் பக்திக்கும் ஞானத்திற்கும் இன்றியமையாத சாதனங்கள் என்பதைக் கட்டுரைகள் நிலைநாட்டுகின்றன.

மேலும் ஆசிரியருடைய சமரச நிலை பெரிதும் போற்றத் தக்கதாக இருக்கிறது. வைஷ்ணவ வேஷம் போட்டுக் கொண்டு, சைவத்தை ஒரே செந்தூக்காகத் தூக்குவார். சைவ வேடம் பூண்டு, வைஷ்ணவ விளக்கம் செய்வார். இப்படி ஆயிரம் மூர்த்திகளைப் பற்றியும் பேசினாலும், இறைவன் ஒருவன்தான் என்ற உண்மையையும் உணர வைத்து விடுகிறார், எப்படியோ.

ரசிகமணி டி.கே.சி சொல்லுவார்கள். பொதுவாக, ஸ்தல யாத்திரை என்றால், கோயில் குளம், மூர்த்தி, பக்தர் குழாம் இவைகளை அனுபவிக்கப் போவதுதான். அதில் நல்ல ஆனந்த அனுபவம் உண்டு என்று.

அத்தகைய ஆனந்த அனுபவத்தை ஸ்தல யாத்திரை போகக் கொடுத்து வைக்காவிட்டாலும் இந்த நூலைப் படிப்பதன் மூலம் நான் அடைகிறேன். தமிழர்கள் ஒவ்வொருவரும் நான் பெற்ற இன்பத்தை அடைவார்கள் என்றும் நம்புகிறேன்.

ஜட்ஜ் பங்களா — எஸ். மகராஜன்

*வேலூர் 16-3-60*

## வேங்கடம் முதல் குமரிவரை

[பொன்னியின் மடியிலே]

## பேராசிரியர் அ. சீனிவாசராகவன்

ஒரு கூனன், ஒரு குருடன், ஒரு முடவன், ஓர் ஊமை ஆக நான்கு பேர் வடவேங்கடமலை ஏறிய கதையை நண்பர் பாஸ்கரத் தொண்டைமான் சொல்லக் கேட்டிருப்பீர்கள். நான்கு பேரில் ஒவ்வொருவருக்கும் ஒரு குறை, உடற்குறைதான். ஆனால் வேங்கடவன் அருள் கிட்டியதும் உடற்குறைகள் நீங்கியது. இதுவே கதை.

உடற்குறைகளைப் போக்க, உள்ளத்தில் இருந்த பக்தி உதவியது. ஆனால் உள்ளமே கூனாக, குருடாக, முடமாக, ஊமையாக இருந்து விட்டாலோ? அப்படித்தான் நம்மில் பலருக்கு இருக்கிறது. மற்றவர்களைச் சொல்வானேன். எனக்கு அப்படி இருக்கிறது.

உடலில் குறையில்லை. கண்ணபுரத்திற்கோ, கடவூருக்கோ, தேரழுந்தூருக்கோ, திருப்புன்கூருக்கோ என்னால் போக முடியும், போயும் இருக்கிறேன். போய் என்ன செய்ய? கோயில் வாசலில் நின்றால் போதுமா? கோயில் என்ற அற்புதம் விளக்குகின்ற உண்மை உலகத்திற்கு, அந்த வான் முகட்டுக்கு என்னால் ஏறிவிட முடியுமா? முடியாது. ஏன் தெரியுமா? தினசரி வாழ்க்கைச் சிறுமைகளில் சிக்கி என் உள்ளம் கூனிக் குறுகிவிட்டது. அதுவே காரணம். கோபுரங்களையும், மண்டபங்களையும், சிலைகளையும், கல்வெட்டுக்களையும் நானுந்தான் பார்க்கிறேன். பார்த்து? அற்றின் பொருளைக் காண வேண்டாமா? அதற்கு, வரலாறும், இலக்கியமும், சமயமும், தத்தவமும், எல்லாவற்றிற்கும் மேலாக அழகுணர்ச்சியும் நிறைந்த கலைக்கண் வேண்டியிருக்கிறது. அது இல்லாத உள்ளம் குருடுதானே. இது போலவே, காண்பதை எட்டிப் பிடித்துத் தன்னுடையதாக, அநுபுதியாக மாற்றிக்கொள்ள இயலாத உள்ளம் முடந்தானே. இப்படித் தவிக்கும் உள்ளம் என்னத்தைப் பேசிவிடப் போகிறது? பேசினால் ஊமையன் பேச்சுத்தான்.

இந்நிலையில்தான் நண்பர் தொண்டைமான் வருகிறார். மெல்ல நம்முடைய கையைப் பிடித்துக்கொண்டு கோயிலின் கோபுர வாசலுக்கு அழைத்துக்கொண்டு போகிறார். இது பெரிய காரியமில்லை. நமது உள்ளத்தைக் கோயிலின் அடித்தலமாக, அதன் பொருளாக, அதன் சோபையாக விளங்கும் சத்திய உலகத்தின் வாசலுக்கே, அதன் கருவறைக்கே அழைத்துப் போக முயல்கிறார். அங்கே, புராணமும், வரலாறும், சமயமும், கலையும், இலக்கியமும் ஒன்றாகக் கலந்து ஒரு ஞானக் காட்சியை அமைக்கின்றன. அதைத் தொண்டைமான் காட்டுகிறார். இந்தக் காட்சியை அனுபவமாக மாற்றும் சித்து விளையாட்டும், தொண்டைமான் உதவியால் நமக்குக் கிடைக்கிறது. அப்போதுதான் நம்முடைய ஊமை உள்ளமும் பேசத் தலைப்படுகிறது. இதையெல்லாம் நமக்குக் கொஞ்சங்கூட சிரமமில்லாமல், ஆயாசமில்லாமல் இந்த மனிதர் செய்துவிடுகிறார் என்றால், அதை ஒரு சாதனை என்று பாராட்டுவதிலே தவறென்ன? ஆம். நண்பர் தொண்டைமான் கையில், சமயம் வெறும் சித்தாந்தமாக இல்லாமல் சுவை பொருந்திய அனுபவம் ஆகிறது. தலைவலியைத் தவறாமல் தரக்கூடிய தத்தவ விசாரமும், வரலாற்று ஆராய்ச்சியும், தெளிந்து, எளிமையினும் எளிமையாகி, தேனாக ஓடுகின்றன. கல்வெட்டு கூட கதையாகிறது. அப்படியென்றால் இலக்கியத்தைப் பற்றிக் கேட்பானேன். அது மணங்கமழும் மெல்லிய பூங்காற்றாக நம் இதயத்தை வருடுகிறது.

அதெல்லாம் சரிதான், ஐயா! இருந்தாலும் ஏதோ எளிமைக்காக, சுவைக்காக இப்படிக் கடவுளரை பற்றியெல்லாம் வேடிக்கை வேடிக்கையாகப் பேசி விடலாமா? பாருங்களேன் அவர் சொல்வதை. மனைவியுடன் பிணங்கிக் கொண்டதன் பலன் வேங்கடேசனுக்குச் செருப்பு தேய்கிறது. இது என்ன பேச்சு? இப்படி ஒரு நண்பர் என்னிடம் வருத்தப்பட்டுக் கொண்டார். என்ன சொல்வது என்று நான் தீர்மானிப்பதற்குள் நண்பர் ஒரு போடு போட்டார்.

"திருப்பதி ஆசாமியைப் பற்றி வேண்டுமானால் எதையாவது சொல்லிவிட்டுப் போகட்டும். எங்கள் முழு முதற்கடவுளாகிய சிவபெருமான் தலையிலேயே உங்கள் தொண்டைமான் கைவைத்துவிட்டாரே. என்ன சொல்கிறார் தெரியுமா, சொன்னவாறு அறிவார், அவர்தான் ஐயா! எங்கள் சிவபெருமான், ஒரு 'மாட்ரிமோனியல் பீரோ' நடத்துகிறாராம். கேட்டீர்களா கதையை!"

இப்படி நண்பர் கசப்பைக் கக்கியதும், இத்தாலிய நாட்டுப் பாதிரி ஒருவர் சொன்னது எனக்கு நினைவு வந்தது. பாதிரியார்

நமது நாட்டிற்குப் புதியவர், ஏதோ தற்செயலாய் ரயிலில் அவரைச் சந்திக்க நேர்ந்தது. அவர் சொன்னார். உங்கள் நாட்டுத் தத்துவ ஞானம் உலகப் புகழ் பெற்றது, உண்மைதான். ஆனால் இவ்வளவு தத்துவ உணர்வு பெற்ற நீங்கள் எப்படி ஆண்டுதோறும் உங்கள் கோயில்களில் திருக்கலியாண உற்சவம் கொண்டாடுகிறீர்கள்? மனவாக்குக் கடந்த அருவமாய் உள்ள இறைவனுக்கு மனைவி ஏது? கலியாணம் ஏது? இதுதான் எனக்குப் புரியவில்லை.

கடவுள் எங்கும் இருக்கிறான் என்று பேச்சளவில் சொல்லுகிறோம். ஆனால் அவன், இங்கே நம்மைச் சுற்றியுள்ள வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும், இருக்கிறான் என்பதை உணர்ந்து, ஏற்றுக் கொள்வதற்கு தயங்குகிறோம். இந்தத் தயக்கமே புராணக்கதைகளை உள்ளவாறு அறிவதற்குத் தடையாக இருக்கிறது. நம்முடைய முன்னோர்கள் இப்படித் தயங்கவில்லை. இறைவன் பிட்டுக்கு மண் சுமந்தான். பிரம்பால் அடிபட்டான், மாமனாக வந்து வழக்குரைத்தான் என்று பேசினார்கள். மீனாக, ஆமையாக, ஏன் ஆண்டாள் சொல்வதுபோல் மானமிலாப் பன்றியாகக்கூட இங்கே வந்தான். 'அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்தில் பிறந்து, வெண்ணெய் திருடி, கடை கயிற்றால் கட்டுண்டு, நந்த கோகுலத்தில் விளையாடினான் என்று நம்பினார்கள். கடவுள் எங்கேயோ நெடுந்தொலைவில் கைலாசத்திலோ, பரமபதத்திலோ, பரலோக ராஜ்யத்தில் மட்டும் இருப்பதாக அவர்கள் எண்ணவில்லை. எல்லா இடங்களும், எல்லா நிலைகளும், அவனைக் காணத் துடிக்கும் இந்த மனித உள்ளமும், அவனுடைய இராஜ்யம் என்றே கருதினார்கள். அவர்களுக்குத் திருவையாறு கைலாயம் ஆயிற்று. திருக்கோவலூர் வீட்டு இடைகழி பரமபதமாக மாறியது. பல்வேறு காலங்களில், பல்வேறு தலைமுறைகளில், தமது வாழ்க்கையோடு பின்னிக்கிடக்கும் கடவுள் என்ற சத்தியத்தை, அந்த வாழ்க்கையை ஒளியாகக் கொண்டு, நமது முன்னோர்கள் தொட முயன்றார்கள். 'ஒரு நாமம், ஓருருவம், ஒன்றுமிலார்க்கு ஆயிரம் ஆயிரம் பெயர் சூட்டித் தெள்ளேணம் கொட்ட முற்பட்டார்கள். எல்லா உறவுகளையும் கடந்த ஒன்றை அது இங்கும் உள்ளது என்ற உணர்வோடு, மனித உறவுகளைக் கொண்டு தேடிக் கண்டார்கள். அன்பெனும் வலையில் அகப்படும் இறைவனுடைய எளிமையை வியந்து பரவினார்கள். எத்தனை எத்தனையோ உருவகங்களால், மனித வாழ்க்கைச் செய்திகளால் அலகிலா அவனை அலகிட்டுச் சிக்கெனப் பிடித்தார்கள். இந்த முயற்சியின் விளைவுதான் புராணக்கதை.

நண்பர் தொண்டைமான் இதை நன்றாக அறிந்தவர். ஆகவேதான், இறைவனைத் தொட்டுத்தொட்டு விளையாடும் புராணக் கதைகளின் விதவிதமான உணர்ச்சிகளையெல்லாம், கனிவோடு, நகைச்சுவையோடு, அவரால் காண முடிகிறது. இதனால், ஏதோ இறைவனுக்குக் குறைவு வந்துவிடும் என்று அவர் எண்ணவில்லை.

**'கண்ணபுரமாலே கடவுளினுன் நீ அதிகம்**
**உன்னிலுமோ யானதிகம்; ஒன்றுகேள்'**

என்ற பாடல் நிந்தையில்லை. நிந்தாஸ்துதி என்பதை அவர் உணர்கிறார். இதுபோன்ற வேடிக்கையாகக் கடவுளைப் பற்றிப் பேசுவதெல்லாம், பக்தியின் முதிர்வினால் ஏற்படக் கூடும். அப்படித்தான் மனிதன் தன் முழு ஆற்றலையும், தன் வாழ்வு முழுவதையும் கடவுளை நோக்கித் திருப்ப முடியும் என்பதை அனுபவிக்கிறார், சொல்கிறார். உண்மையான பக்தியும் கவிதை உள்ளமும் படைத்தவர்களுக்கே இது கைகூடும்.

இவர்களில் ஒருவர் நண்பர் தொண்டைமான். அதோடு, தமது பேரறிவையும், தாம் பலகாலம் முயன்று சேர்த்த செய்திகளையும், கலை, தத்துவ, சமய நுணுக்கங்களையும், நம்மோடு நேருக்கு நேர் நின்று பேசுகின்ற பாவனையில் பழகு தமிழில் அமைத்து விளம்புகிறார். தொண்டைமான் படைக்கும் 'வேங்கடம் முதல் குமரி வரை' என்ற கட்டுரைத் தொடர், கலை, இலக்கியம், வரலாறு, பக்தி என்ற எல்லாம் விளங்கும் சுவை விருந்து. இந்த விருந்தே, நமது உள்ளக் குறைகளைப் போக்கும் அருமருந்தாகவும் அமைகிறது. இதனால்தான், தமிழகம் திரண்டு, இதை வரவேற்று மகிழ்கிறது. தமிழனுக்குத் தெரியாதா, ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக, சிறந்த பண்பாட்டோடும் பக்தியோடும் வாழ்ந்து வந்திருக்கும் அவனுக்குத் தெரியாதா, எதை எப்படிப் பாராட்டவேண்டும் என்று?

அ. சீநிவாசராகவன்

பாரதி அகம் *14-1-61*
வ.உ.சி. கல்லூரி
தூத்துக்குடி

# வேங்கடம் முதல் குமரிவரை

[காவிரிக் கரையிலே]

## கி. வா. ஜகந்நாதன்

தல யாத்திரை செய்வதென்பது இந்த நாட்டுக்கே உரிய நல்ல பழக்கங்களில் ஒன்று. மற்ற நாடுகளில் உல்லாச யாத்திரை போவதுண்டு. தல யாத்திரை அவர்களுக்குத் தெரியாதது. மற்ற நாடுகள் இருக்கட்டும். நம்முடைய பாரத நாட்டிலே கூட வட நாட்டுக்குப் போனால் தீர்த்த யாத்திரை தான் நன்றாகச் செய்ய முடியும். ஏதோ அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாகச் சில தலங்கள் உண்டு. அவற்றிற்கும் எத்தனையோ சிறப்புக்கள் இருக்கின்றன. இருந்தாலும் அங்கே போனால், மற்றவர்கள் துதிப்பதைக் கொண்டும் மனத்தில் மதிப்பும் பக்தியும் உண்டாகி வழிபட வேண்டும்.

ஆனால் தமிழ்நாட்டுத் தலங்கள் அப்படியா இருக்கின்றன? கோவிலின் தோற்றமே ஆளைப் பிரமிக்க வைத்துவிடுகிறது. எத்தனை மேல்நாட்டினர்கள் தஞ்சாவூர்ப் பெரிய கோயிலைக் கண்டு வாயைப் பிளந்து கொண்டு நின்றிருக்கிறார்கள்.

கோயிலைக் கட்டுவதும், சிற்பங்களைக் கொட்டுவதும் கல்லெழுத்து வெட்டுவதும் இந்த நாட்டு அரசர்களுக்கெல்லாம் பரம்பரை வழக்கங்களாக இருந்து வந்துள்ளன. முன்பேதான் கோயில் இருக்கிறதே என்று இராமல் மேலும் மேலும் பின்வந்த அரசர்கள் கோயில்களை விரிவாக்கினார்கள். தங்கள் தங்கள் காலத்து வரலாற்றுக்கு ஆதாரமான கல்வெட்டுக்களைப் பொறித்தார்கள்.ஊர் சிறியதாக இருந்தாலும் கோயில் பெரியதாக இருப்பதைப் பார்த்தால் அந்தக் காலத்தில் இதை எப்படிக் கட்டினார்கள் என்று வியப்படையத்தான் தோன்றும்.

தமிழ்நாட்டு நாகரிகமே கோயிலைச் சுற்றி வளர்ந்தது என்று சொல்லிவிடலாம். சிற்பக்கலை, இசைக்கலை, நாட்டியக்கலை, காவியக்கலை, அலங்காரக்கலை, பூத்தொடுக்கும் கலை, ஏன்,

மடைப்பள்ளிக்கலைகூடத்தான் கோயில்களிலே வளர்ந்தன. கோயிலில் ஊர்ச்சபை கூடியது, உடையவர் பண்டாரமாகிய கிராமப் பாங்கி இருந்தது. கல்விச்சாலை நடைபெற்றது. தேவாரமும், திவ்யப் பிரபந்தமும் இந்தக் கற்கோயில்களின் பெருமையை இலக்கியச் சுவையும் பக்திச் சுவையும் இணைந்த பாக்களால் புலப்படுத்தும் சொற்கோயில்களாக விளங்குகின்றன.

அயல்நாட்டினர் வந்து இவற்றைக் கண்டால் வியக்கிறார்கள். படம் பிடிக்கிறார்கள். புத்தகம் எழுதுகிறார்கள். நாம் அவர்கள் எழுதியதைக் கண்டு அப்படியா என்கிறோம். கோயிலுக்குள்ளே புகுந்து தீபாராதனையைக் கண்டு கன்னத்தில் போட்டுக் கொண்டு விபூதி வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வரும் அளவில் நம் வழிபாடு நிற்கிறது. திருக்கோயில்களில் உள்ள கலையுருவங்களைக் காணக் கண்ணும் அவற்றின் பெருமையைக் கேட்கக் காதும் எல்லோருக்கும் இருப்பதில்லை.

ஆனால் சில காலமாகக் ‘கல்கி’ பத்திரிகையில் வாரந்தோறும் திரு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் எழுதி வரும் ‘வேங்கடம் முதல் குமரி வரை’ என்ற தொடர் கட்டுரைகளைப் படித்து வருகிறவர்களில் பலர் கோயிலுக்குப் போனால் தீபாராதனை கண்டுகன்னத்தில் போட்டுக் கொள்வதோடு நிற்பதில்லை. அந்தக் கோயிலில் என்ன என்ன விக்கிரகங்கள் இருக்கின்றன, என்ன சிற்பங்கள் இருக்கின்றன என்று சிறிது ஆராயத் தொடங்கியிருக் கிறார்கள். பிறகு மறுபடியும் வந்து, இதுவரையில் இவற்றைத் தெரிந்து கொள்ளாமல் இருந்தது பிசகு என்று கன்னத்திலும் போட்டுக் கொள்கிறார்கள்.

கோவிலில் உள்ள கலை அழகை எப்படி அனுபவிக்க வேண்டும் என்பதை அன்பர் பாஸ்கரன் அவர்களுடைய கட்டுரை நன்றாக நமக்குக் காட்டுகிறது. அவர் எழுதும் கட்டுரைகளைப் படித்தால் நாமே அவருடன் அங்கங்கு சென்று எல்லாவற்றையும் காண்பது போன்று அநுபவம் ஏற்படுகிறது.

இந்தக் கட்டுரைகளை இப்போது தொகுத்துப் புத்தகமாக வெளியிடுவது மிகவும் உபகாரமான காரியம். இது மூன்றாம் தொகுதி.

தொண்டைமானவர்கள் ஒவ்வொரு கோயிலாக நமக்கு அறிமுகப்படுத்தும் பாணி அவருக்கு என்றே அமைந்தது. ஊருக்குச்

செல்லும் வழிகளைச் சொல்லி அழைத்துச் சென்று கோயில் முன் நிறுத்துகிறார். கோபுரம் முதலிய அமைப்புகளைக் காட்டுகிறார். புராணக்கதைகளை ரசமாகச் சொல்கிறார். அங்கே உள்ள சிற்ப வடிவங்களின் சிறப்பைச் சுட்டிக் காட்டுகிறார். தேவாரத்தையும் திவ்ய பிரபந்தத்தையும் எடுத்துச் சொல்கிறார்.

புராணங்களில் காணாத பல கதைகளையும் வழக்கங்களையும் பழமொழிகளையும் அங்கங்கே சொல்கிறார். இது மிக மிகப் பயனுள்ள தொண்டு. சொல்வதைச் சுவைபட, நுட்பமான நகைச்சுவை சில இடங்களில் மலர, சொல்கிறார்.

இந்தத் தொகுதியில் நாம் எத்தனையோ மூர்த்திகளைத் தரிசித்துக் கொள்கிறோம். எத்தனையோ தீர்த்தங்களில் நீராடுகிறோம், புராண புருஷர்களையும் சரித்திரத்தில் வரும் மக்களையும் சந்திக்கிறோம். கட்டுரையின் எடுப்பும் தொடுப்பும் முடிப்பும் கச்சிதமாக அமைந்து ஒரு சிற்ப வடிவைப்போலக் கட்டுரையை ஆக்குகின்றன.

தலங்களைப் பற்றிப் பல நுட்பமான உண்மைகளையும், மூர்த்திகளின் அமைப்பிலுள்ள சிறப்பான பகுதிகளையும் சொல்கிறார். இவற்றை, பலமுறை அவற்றை தரிசித்தவர்கள் கூட அறிந்து கொள்வதில்லை.

குடந்தைக் கீழ்க்கோட்டமாகிய நாகேசுவரன் கோயிலில் சித்திரை மாதத்தில் மூன்று நாட்களில் சூரியன் கருவறையில் தன் கதிர்களை வீசுகிற உண்மையை ஓரிடத்தில் சொல்கிறார். கும்பேசுவர சுவாமி கோயிலில் உள்ள அம்பிகை மந்திர பீடேசுவரி மங்களாம்பிகை என்ற சிறப்பைப் புலப்படுத்துகிறார். சுவாமி மலையில் மகாமண்டபத்தில் வடக்குச் சுவர்ப்பக்கம் ஒரு பீடத்தில் சபாபதி என்ற பெயரோடு இருப்பவர் நடராஜர் அல்ல, பாகுலேய மூர்த்தி என்று தெரிவிக்கிறார். தாராசுரத்தில் அர்த்தநாரி உருவத்தில் மூன்று தலைகளுடன் நிற்பவர் விசுவரூப மூர்த்தி என்று காட்டுகிறார். நாச்சியார் கோவில் கல்கருடன், கண்ணமங்கையிலுள்ள தேன்கூடு, திருவாரூரில் மூக்குத்தி தீர்த்தம் என்று வழங்கும் முக்தி தீர்த்தம், சூர சங்காரத்துக்கு முதல் நாள் முகத்தில் வேர்வை அரும்பும் சிக்கல் சிங்காரவேலன், ஆவுடையார் கோயிலில் பதினோரு கரத்தோடு வீற்றிருக்கும் வல்லப கணபதி இப்படிப் பலவற்றைப் பற்றிய நுட்பமான செய்திகள் இதில் வருகின்றன.

வரலாற்றோடு பொருந்திய பல கதைகளை விசாரித்து அறிந்து நயமாகச் சொல்கிறார். செம்பியன் மாதேவியின் வரலாறு, வடுவூருக்கு ராமன் வந்த கதை, தஞ்சையில் தளிக்குளத்துப் பெருமான் பெரிய கோயிலைப் பெற்றது, கிழவி நிழலில் பெருவுடையார் எழுந்தருளியது, துலுக்க நாச்சியார் சரிதை, பவானியில் காரோ என்ற ஆங்கிலேயர் வேதநாயகியை வணங்கியது முதலியவற்றைக் காண்க.

கல்வெட்டுக்களைப் பற்றிய செய்திகள், கோயில் கட்டிய மன்னர்களின் பெருமை, புராணங்களில் வரும் வரலாறுகள், கர்ண பரம்பரைச் செய்திகள், தலத்தின் பெருமையைப் பற்றிய பாடல்கள் முதலிய பலவற்றையும் கோவையாக இணைத்துப் படிக்கப் படிக்க இனிக்கும் வகையில் இந்தக் கட்டுரைகள் ஓடுகின்றன. அந்த ஓட்டத்தைத்தானே விறுவிறுப்பு என்று இக்கால எழுத்தாளர்கள் சொல்கிறார்கள்?

இந்தப் புத்தகத்தைக் கோயிலுக்குப் போவதற்கு முன்பு படித்தால் ஒருவகை இன்பம் உண்டாகும். போய் விட்டு வந்து படித்தால் அந்த இன்பம் பின்னும் பன் மடங்காகும். வெறும் ஆராய்ச்சியானால் அலுப்புத் தட்டும். புராணமானால் சுவை இராது. சமய நூலானால் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று தோன்றும். சரித்தர நிகழ்ச்சியானால் அவசியமானபோது புரட்டிப் பார்க்கலாம் என்ற வைத்துவிடுவோம். பாடல்களானால் அமைதியாக இருந்து பார்த்தால்தான் விளங்கும் என்ற அச்சம் உண்டாகும். இந்த நூலில் இவை எல்லாம் இருக்கின்றன. ஆனால் படித்து முடித்துவிடவேண்டும் என்ற ஆவலைத் தூண்டுகின்றன. படித்த பிறகோ பல தலங்களுக்குப் போய்ப் பல மூர்த்திகளை வழிபட்டு வந்த மனநிறைவு உண்டாகிறது. காசு இல்லாமல், பிரயாண அலுப்பு இல்லாமல், தேங்காய்ப் பழம் இல்லாமல் இந்தப் பயன் நமக்குக் கிடைக்கிறது. நாம் அங்கே போய் தரிசித்தாலும் இத்தனை விவரங்களை அறிந்துகொள்ளும் வாய்ப்பு நமக்குக் கிடைக்காது.

நாவுக்கரசருக்குத் திருவையாற்றில் சிவபெருமான் கைலத் தரிசனம் காட்டியதை, இந்த விஞ்ஞானிகளுக்கெல்லாம் மேலான விஞ்ஞானி, ஆம் டெலிவிஷன் எக்ஸ்பர்ட் ஆக ஒருவன் அன்றே இருந்திருக்கிறான். நம்மிடையே அவன் யார்? என்று கேள்வி கேட்டுக்கொண்டு விளக்குகிறார். நாவுக்கரசராவது திருவையாற்றுக்குப் போய்க் கைலைக் காட்சியைக் கண்டார். நாமோ இருந்த இடத்தில்

இருந்தபடியே இத்தனை தலங்களையும் காணுகிறோம். சொல்லால் படித்துச் சொல்வது போதாதென்று அழகழகாகப் பாடங்களையும் எடுத்து இணைத்திருக்கிறார் அன்பர் திரு. பாஸ்கரன்.

இவருக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய இயலும். மனமார நாவார 'சபாஷ்' என்று ஆனந்தப் பொங்கலுக்கு அறிகுறியாக ஒரு வார்த்தையைச் சொல்வதையன்றி வேறு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை.

கி.வா. ஜகந்நாதன்
ஆசிரியர் கலைமகள்

சென்னை
30-8-61



பீமன், தருமன்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# வேங்கடம் முதல் குமரிவரை

[பொருநைத் துறையிலே]

## கம்பன் அடிப்பொடி சா. கணேசன்

**'வடவேங்கடம், தென்குமரி,**
**ஆய் இடை**
**தமிழ் கூறும் நல் உலகம்'**

(வடக்கில் வேங்கட மலையையும், தெற்கில் குமரி முனையையும், கொண்ட நிலப்பரப்பே தமிழ்மொழி பேசும், உயர்ந்தோர் வாழும் நன்னாடு) என்று தமிழ்நாட்டின் எல்லையை, பனம்பாரனார் என்னும் பழந்தமிழ்ப் பெரியார் உணர்த்தி நிற்கிறார். தமிழ்நாட்டை நல்உலகம் என்றது ஏன்? நன்மை பயப்பதும், மேலவர் வாழ்வதுமான நாட்டையே நல் உலகம் என்னலாம் இல்லையா?

ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாக அன்பும், அறனும், செறிந்து, பண்பும் பயனும் மலர வாழ்ந்து காட்டியும், தேர்ந்துரைத்தும் வான்புகழ் பூத்த நல்லோர்களை உலகினுக்குத் தந்தது இந்நாடு. அறம், பொருள், இன்பம், வீடு அடைதலே மனிதப் பிறவியின் பயன் என்பதை உணர்த்தி, வாழ்வாங்கு வாழ, வழி வகுத்த மேலோர்கள் நிரம்பிய நாடு இது. இந்நாட்டு இலக்கியங்கள் முழுவதுமே மக்களை நெறிப்படுத்தி நல்வாழ்வு வாழ வழி காட்டுவனவாகும். இகத்தில் உள்ள இன்பத்திற்கு ஓர் அளவுகோலாய் அமைவதுடன், பரத்தில் உள்ள இன்பத்தை உணர்த்தும் நல் ஓவியமாகவும் தமிழர் இலக்கியம் அமையும்.

இலக்கியங்களை எல்லாம் தொகுத்து, வகுத்து, பகுத்தறி வோமானால் பல்வேறுபட்ட வகைகள் இருப்பதை நெறியாலும் முடிவாலும் மாறுபடாமை தமிழ் கூறும் நல் உலகத்தின் அருமையாகும். அதனாலேதான்-எந்த மொழியையும்விடத் தமிழ் மொழியில் பக்திப் பாடல்கள் மலிந்து பொலிகின்றன. சிருங்காரத் துறையில் பிரபந்தம் இயற்றினாலும் பெரும்பாலோர் கடவுளையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டனர். மன்னர் போன்ற மானிடர் மீது

பாடியவர்களும்கூட இறைவன் தன்மையைப் புலப்படுத்த மறந்தாரில்லை. பல்வேறு காலங்களில், பல்வேறு துறைகளில், பல்வேறு புலவர்களால் முன்னர் பாடப்பெற்ற தனிப்பாடல்களைத் திரட்டித் தொகை நூல் (Anthology) ஆக்கினார்கள் பின் வந்தவர்கள். அவர்கள் கூட அதற்கு, இறைவணக்கம் இன்றியமையாதது என்று கருதி எழுதிச் சேர்த்தனர் என்றால் நாட்டு மக்களின் மனத்தில் கடவுளுணர்ச்சி எவ்வளவு ஊறிக்கிடக்கிறது என்பதைச் சொல்லவா வேண்டும்.

தமிழ்நாட்டுத் தொன்மையும், தட்ப வெப்பமும், சூழ்நிலையும், உண்டி முதலியனவும், சேர்ந்து மக்களை எளிய வாழ்வினராகவும் உயர்ந்த பண்பினராகவும் ஆக்கிவிட்டன. அந்த மனப்பண்பின் சிகரமே இன்று தமிழ்நாடு முழுவதும் வானளாவிய விமானங்களுடனும் கோபுரங்களுடனும் கோயில்களாக ஓங்கி உலகறிய விளங்குகின்றன. சுருக்கமாகச் சொன்னால் மற்ற எல்லா மாநிலங்களிலும் உள்ள கோயில்கள் அனைத்தையும் எண்ணிக் கூட்டிப் பார்த்தால் தமிழகம் ஒன்றில் மட்டும் உள்ள கோயில்களின் தொகைக்குக் குறைவேதான். இது உண்மை. வெறும் புகழ்ச்சி அல்ல-

அதனாலேயன்றோ, மாணிக்கவாசகப் பெருமான் எந்நாட்ட வருக்கும் இறைவனாய் உள்ளவனை, 'தென்னாடு உடைய சிவன்' என்றுரைக்கிறார். 'சிவன்' என்றால் ஏதோ பூச்சுக்காரர்களுக்கே உரியவன் என்று கொண்டு நாம் இடர்ப்பட வேண்டாம். சிவன் என்றால் நன்மை பயப்பவன், நன்றுடையான் என்றே பொருள். கடவுளைக் குறிக்கும் ஆயிரக்கணக்கான பெயர்களுள் சிவன் என்பதும் ஒன்று. அந்தக் கடவுள் தென்னாட்டையே தன்னாடாகக் கொண்டு விட்டானாம். அதையே சிவலோகமாகவும் ஆக்கிக்கொண்டு விட்டாணாம் அந்த அப்பு ஆர் சடையப்பன். 'நல் உலகம்', 'சிவலோகம்' இரண்டும் ஒரு பொருளையே தருவன என்பதை யாரே அறியார்?

ஏன் இறைவன் தமிழ்நாட்டைத் தன்னாடாக ஆக்கிக் கொண்டான்? இங்குதான் பண்ணோடு தமிழ் பாடும் பக்த மணிகள் பல்லோர் இருக்கின்றனர். சொல்லிலும், பொருளிலும் எல்லையில்லாப் பரம்பொருளைக் காண்பவர்கள் இருக்கின்றனர். "பார்க்குமிடம் எங்கணும் நீக்கமற நிறைந்துள்ளான், போக்கும் வரவும் இல்லாப் புண்ணியன்" என்றுணர்பவர்கள் நிறைந்திருக்கிறார்கள்.

அதற்கெல்லாம் மேலாக, பாடலொடு ஆடல் பயின்றிடவும், வேதமொடு ஆகம விழுநூல் கற்றிடவும், சிற்ப முதலிய தெய்விகக்

கலைகளைத் தேர்ந்திடவும், வணிக, நீதி மன்றங்கள் கூடிடவும், எல்லாக் கலையும், எல்லாப் பணியும், எல்லாப் பொருளும் ஈசனதே என்னும் மெய்யுணர்வு மலர்ந்திடவும், தக்கதோர் இடமாய் தழைத்தவை கோயில்கள். கல்வியால் அறிவும், அறிவால் ஒழுக்கமும் வளர்ந்து அவை கலையாய் மலர்ந்து இன்ப மணம் பரப்பி மக்களை மக்களாக வாழ வைப்பதும் கோயில்கள்தாம். ஆதனாலன்றோ 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பதை உலக நீதியாய்க் கொண்டனர் தமிழ்ப் பெரு மக்கள். அந்த நீதிப்படி ஊர்கள் தோறும் கோயில்கள் ஓங்குவதாயிற்று. கோயில் மிகுதியால் மக்களின் சீலமும் பண்பும் சிறந்து, வாழ்வும் உயரலாயிற்று.

அத்தகைய நல் உலகத்தில், சிவலோகத்தில், ஆம் இந்தத் தமிழ்நாட்டில் நிறைந்து சிறந்து பயன்கொழிக்கும் கோயில்கள் எத்தனை எத்தனையோ. சிற்பத் திறமை, கலை நுணுக்கம், மூர்த்தி அழகு, உருவ அமைதி, பாவப்பொலிவு, தத்துவச் செறிவு முதலிய வேறுபாடுகள்தாம் எத்தனை எத்தனையோ. தல மகிமை, தீர்த்தச் சிறப்பு, வரலாற்றுப் பெருமை, புராணக் கோட்பாடு, இன்னும் என்னென்னவோ அருமைப்பாடுகள். இவற்றையெல்லாம் நானும் நீங்களும் எப்படி கண்டு, அறிந்து துய்த்து மகிழ முடியும்? இதற்கென்று எங்காவது பள்ளிகள் உண்டா? அல்லது ஏதாவது பாடம் சொல்லும் வகுப்புகளாவது உண்டா?

நாமுந்தான் கோயில்களுக்குப் போகிறோம். பக்தியில் நாம் யாருக்கும் குறைந்தவர்களில்லை என்பதும் உண்மையாக இருக்கலாம். பெரும் பொருள் செலவு செய்து பிரார்த்தனைகளை நிறைவேற்றுகிறோம். பலநாள் தங்கிக் கால பூஜைகள் ஒன்றுகூடத் தவறாமல் கண்டு தொழுகிறோம். பாடு கிடக்கிறோம், நோன்பிருக்கிறோம். அத்துடன் நமது கடமை முடிந்ததென்று திரும்பி விடுகிறோம்.

ஆனால் சிலர் இருக்கிறார்கள். கோயில்களுக்கெல்லாம் செல்வார்கள், பக்தியுடன் மூர்த்திகளைப் பணிவார்கள். விபூதி தீர்த்தம், துளவம் முதலிய பெற்றுக் கொண்டதும் அர்ச்சகருடன் அளவளாவுவார்கள், ஓதுவார்கள் முதலிய வயதானவர்களைக் கண்டால் கேள்வி மழை மொழிவார்கள். மூர்த்தியைக் காண்பார்கள். கண்ணைக் கவர்வனவற்றின்பால் கருத்தையும் பதித்துக் கூர்ந்து நோக்குவார்கள். ஏதாவது ஐயம் ஏற்பட்டாலோ அன்றி மேலும் தெளிவு தேவைப்பட்டாலோ, கண்ணை மூடிக்கொண்டு பார்ப்பார்கள். பின்னர் ராபர்ட் சீவெல், கில்ஹார்ன், பர்னல்பூலர், ஹீரா, ஹுல்ட்ஸ், ஜோவா

துப்ரே, பெர்சி பிரவுன் என்று எதேதோ வாய்க்கு வழங்காத பெயரை எல்லாம் உச்சரிப்பார்கள். அப்புறம் ஐயம் தீர்ந்து தெளிவு ஏற்பட்டு விட்டதற்கு அறிகுறியாக 'ஓஹோ' சரிதான். அதானே பார்த்தேன்" என்று தமக்குத்தாமே ஆறுதலடைந்து நடையைக் கட்டிக்கொண்டு விடுவார்கள்.

நம்மைப் போன்றவர்கள் கிட்டே வந்து "என்ன ஐயா, இதில் என்ன விசேடம்?" என்று கேட்டால் "இந்தக் கர்பெல் இருக்கிறதே இது எந்த ப்ரியடா இருக்கலாம் என்று யோசித்தேன். 'வேலைன் இருப்பதாலே மகேந்திரனுக்குப் பின் காலமாகத்தான் இருக்க வேண்டும் என்று முடிவுகட்ட வேண்டியதாக இருக்கிறது" எனக் கூறுவார். கார்பெல் என்றால் நமக்கு ஒன்றும் தெரியாது. தமிழ்நாட்டுத் தூணின் மேலே, பழுவை எற்றி தூணின் மையத்திற்குக் கொணர்வதற்காக தமிழனால் வைக்கப்பெற்ற அதற்குத் தமிழில் 'போதிகை' என்று பெயர் என்பது, பாவம் அவருக்குத் தெரியாது. இவர்கட்கு கலையார்வம் நிரம்ப உண்டு. பிறமொழி அறிஞர்கள் எழுதிய விளக்க அல்லது ஆராய்ச்சி நூல்களைப் படித்துவிட்டு அதன் மூலமாக நம் நாட்டு கலைமுறைகளைத் தெரிந்து கொண்டு மதித்துப் போற்ற முன் வந்தவர்கள். அவர்களுள்ளும் மிகச் சிலர் இருக்கிறார்கள். முற்கூறப்பட்டவர்களில் இவர்கள் ஒரு அளவு வேறுபட்டவர்களும் ஆவார்கள். ஓவியம், சிற்பம், படிமம் முதலியவற்றை ஆங்கில நூல்களின் மூலமும், தமிழ் நூல்களின் மூலமும் தெரிந்துகொண்டு பின்னர் நூல்களைத் தூரத்தே வைத்துவிட்டு நேரே பொருளோடு உறவாடத் தொடங்கிவிடுவார்கள். வேலைப் பட்டறைகளையெல்லாம் சென்று காண்பார்கள். வேலை முறையையும் வித்தியாசங்களையும் மனத்தில் வாங்கிக்கொண்டு விடுவார்கள். நிர்மாண வகைகள், வர்க்க பேதங்கள், மூர்த்தி பேதங்கள், ஆசன முறைகள், அஸ்த முத்திரைகள் முதலியவற்றில் தெளிவு ஏற்படுத்திக்கொண்டு விடுவார்கள். தமிழ் இலக்கியங்கள், வரலாற்றுச் செய்திகள், பக்திப் பாடல்கள், புராணத் தத்துவங்கள், தல புராணக் கதைகள், கர்ண பரம்பரைக் கதைகள் இவற்றிலெல்லாம் கருத்தைச் செலுத்தி கவினுடையவற்றை மனத்திலும், கையேட்டிலும் பதித்துக் கொண்டு விடுவார்கள்.

இப்படித் தங்களைப் பக்குவப்படுத்திக் கொண்ட பிறகு சொல்லையும், சுவையையும் கல்லையும், செம்பையும் எல்லாம் சுவைத்துச் சுவைத்து இன்புறும் இயல்பினராகி விடுகிறார்கள். பின்னர் அவற்றை அணுகுவதில் அவர்கட்கு அச்சமோ, அன்றி

சங்கோஜமோ கூட ஏற்படுவதில்லை. அகம் ஒட்டிய, ஒன்றிய, உறவே கொண்டு விடுவார்கள். அப்படித் தோய்ந்து துய்க்கும் கலையன்பர் தொகை விரல்விட்டு எண்ணக் கூடியதாகவே இருக்கும்.

அத்தகைய சிறு தொகையினருள் சகோதரர் பாஸ்கரன் அவர்கள் ஒருவர். அவருடன் கல் பேசும். செம்பு இசை பாடும். சுதைகள் எல்லாம் நடமாடும். அவற்றையெல்லாம் அவர் காண்பார். நோக்குவார். தேர்ந்து தெளிவார். அத்துடன் அமைவாரா? நண்பர்களை எல்லாம் கையைப் பிடித்து இட்டுச் செல்வார். சில முரண்டுகளைக் காதைப் பிடித்து இழுத்தும் செல்வார். கலைச் செல்வங்களின் முன்னே கொண்டு நிறுத்தி எல்லோரையும் துய்க்கும் படியும் செய்துவிடுவார். தாமின்புறுவதைக் கண்டு உலகின்புறச் செய்யும் வித்தையிலும் கைதேர்ந்தவர் சகோதரர் பாஸ்கரன் அவர்கள். எண்ணற்றவர்களின் வாழ்க்கையில், கலைப் பணியால் கடவுள் நம்பிக்கையையும் தெய்வ பக்தியையும் வித்திட்டு விளையச் செய்த புண்ணியனாகவும் அல்லவா விளங்குகிறார். அவர்களையெல்லாம் தலயாத்திரை செய்ய வேண்டும் என்ற வேட்கை கொள்ளவும் செய்துவிட்ட அருமையைப் பாராட்டாமல் இருக்க முடியுமா என்ன?

இலக்கிய ரசனையும், கலைப் பித்தமும், பக்தி ஈடுபாடும் ஒருசேரப் பெற்ற தனி வழியைக் கடைப்பிடித்துச் செல்லுபவர் ஆனதால் ஒன்றில் ஒரு சிக்கல் ஏற்பட்டால் மற்றொன்று வந்து கைகொடுத்துத் தீர்த்து வைத்துவிடுகிறது அவருக்கு. சிக்கல் விடுபடாதோ" என்று பிறர் மயங்கக் கூடிய இடங்களில் அந்தச் சிக்கலில் அகப்பட்டுக் கொள்ளாமல் லாகவமாக அதைத் தாண்டி அப்பாற் சென்று விடுகிறார் இவர். பல இடங்களில் பெருமையாகப் புகழ்பாடுவதைக் கண்டு யாவரும் மகிழ்கிறோம். சில இடங்களில் கிண்டல் செய்வதைச் சிலர் ரசிக்க முடியாதவர்களாயிருக்கிறார்கள். என்றாலும், உண்மையை உணர்பவர்கள் யாரும் அதைக் குறை கூறமாட்டார்கள். கிண்டல் செய்வதற்கு மனத்துணிச்சல் மட்டும் போதாது. களங்கமற்ற உள்ளத்தில் அரும்பிய எல்லையற்ற ஈடுபாடு வேண்டும். அப்பொழுதுதான் கிண்டல் பயன் தருவதாக இருக்கும். வெறும் மனத் துணிச்சலிலிருந்து வெளிப்படுவது கேவலம் வசையாகத்தான் அமையும்.

யதார்த்த வாழ்வில் அல்லது நாடகம், சினிமா போன்ற துறைகளில் அசம்பாவிதம் என்று கருதி ஒதுக்கப்படும் தோற்றம், கல்லிலும் செம்பிலும் உருவாகி ஆலயங்களுள் இருப்பதை நாம்

அசம்பாவிதம் என்று எண்ணியதாவது உண்டா? அல்லது நம்மனையார் உள்ளத்தில் விகார எண்ணங்களை அவை உண்டாக்கியதாவதுண்டா? தாயின் மடியில் கிடந்து பாலருந்தும் நிர்மலமான குழந்தைகளைப் போன்றுதானே நாம் எல்லாம் கலையமுதை, அழகமதைப் பருகி அமைதி பெற முயன்று கொண்டிருக்கிறோம். இல்லையா? அப்படித்தான் உள்ளத்தில், விகாரமோ, வெறுப்போ, பகைமையோ சிறிதுமின்றிக் கிண்டல் செய்வது ஒரு அருமையான வேண்டத்தக்க பணி. கலையும் கூட. அந்தக் கலையும் கைவரப் பெற்றவர் சகோதரர் பாஸ்கரன் அவர்கள்.

"குலவித்தை கல்லாமற் பாகம் படும்" என்ற முதுமொழிக்கு பாஸ்கரன் அவர்கள் ஒரு சான்று. பாட்டனார் ஒரு நல்ல கவிஞர், தந்தையாரோ சிறந்த ஓவியப் புலவர். இலக்கிய உணர்வும், ஓவிய உணர்வும் இவர்க்குப் பரம்பரையாய்க் கிட்டிய செல்வம். நேர்மைக்கும் செம்மைக்கும் பெயர் பெற்ற வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார் அவர்களுடன் இவருக்கு மிக நெருங்கிய தொடர்புண்டு. அவர்களுடன் பலகாலம் நெருங்கிப் பழகிய நற்பேறு இவருக்கு எதையும் ஆராய்வதற்குரிய நெறிமுறைக்கு ஆக்கம் தந்தது என்று சொல்லலாம். அதற்கெல்லாம் மேலாக ரசிகமணி டி.கே.சி அவர்களுடன் இருந்த உறவும், ஈடுபாடும்தான் இவருக்கு எல்லா வல்லமையும் கொடுத்தவை என்று கூற வேண்டும். விஷயத்தை அணுகுவது, ஆய்வது, தேர்வது, துய்ப்பது, எடுத்து விளக்குவது போன்றவற்றில் ஒரு தனி ஆற்றல் ஏற்படச் செய்தது அந்த உறவே என்று சொல்வோமானால் தவறில்லை.

இப்படியாகப் பெற்ற நலன்களை எல்லாம் பேணிக் காத்து, வளர்த்துச் சீரிய முறையில் உலகிற்களிக்க உதவிய மற்றொன்றையும் நாம் மறத்தற்கில்லை. அதுதான் இளமையிலிருந்தே பல்வேறு இடங்களில் பணியாற்றிய காலங்களில் கிடைத்த ஓய்வையும், ஏற்படுத்திக் கொண்ட ஓய்வையும் தல யாத்திரைக்கும், இலக்கிய வரலாற்றுச் சிறப்புப் பணிக்குமே பயன்படுத்திக் கொண்ட அந்த ஆர்வம் இருக்கிறதே அதைத்தான் நாம் பாராட்ட வேண்டும். எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

'வேங்கடம் முதல் குமரி வரை' என்று பொதுத் தலைப்பு அமைத்துக் கொண்டதே ஓர் அருமை. பண்டைத் தமிழன் மரபுப்படி பெயர் அமைந்திருக்கிறது என்று உவகை ஏற்படும் அதே காலத்தில், வாசகர்களை எல்லாம் தென்றலின் இன்பத்தை அனுபவிக்கச்

செய்வதைப் போல, தெற்கு நோக்கி அழைத்துச் செல்லும் அருமை எண்ணியெண்ணி மகிழக் கூடியதாக இருக்கிறது.

வேங்கடம் முதல் குமரி வரை தொகுதியில் நான்காம் பகுதி இது. இதில் 30 கட்டுரைகள் உள்ளன. இலக்கியப் பூங்கா ஒருபுறம். சிற்பக் கலைக்கூடம் மறுபுறம். ஆராய்ச்சிப் பட்டறை இன்னொருபுறம். பக்திப் பஜனைக் கூடம் வேறொருபுறம். வரலாற்றுக் கதைக்கூடம் பிறிதொருபுறம் என்று இப்படியாகப் பல்வேறு துறைகளையும் இந்தக் கட்டுரை உலகிலே காணலாம்.

அன்புடன், ஆர்வத்துடன், உள்ளே செல்லுவோம். விருப்பு வெறுப்பின்றி அணுகுவோம். அருமை பெருமைகளை நன்றாக அனுபவிப்போம். நம்மை எல்லாம் இட்டுச் செல்லும் சகோதரர் பாஸ்கரன் அவர்கள் நம்முடன் இருந்து தக்கபடி உதவுவார். இனியும் முன்வாயிலில் காத்துக் கொண்டிருப்பானேன், வாருங்கள், உள்ளே நுழைவோம். "வாழ்க பாஸ்கரன், வளர்க அவர் பணி" என்று வாழ்த்திக் கொண்டே.

கம்பன் அடிப்பொடி
சா. கணேசன்.



சிவன் பார்வதி
தாராமங்கலம்

# வேங்கடம் முதல் குமரிவரை

*நான்காம் பதிப்பின் முன்னுரை*

## ராஜேஸ்வரி நடராஜன்

'வேங்கடம் முதல் குமரி வரை' என்ற பொதுத்தலைப்பில் ஏற்கனவே வெளியாகியுள்ள நான்கு தொகுப்புக்களின் நான்காவது பதிப்பு இது. எங்கள் தந்தையார் திரு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றதும் மேற்கொண்ட திருப்பணி, தமிழ்நாட்டுக் கோயில்களைப் பற்றிக் கட்டுரை எழுதத் தொடங்கியதுதான். அந்தத் துறையில் அவர்களுக்கு இருந்த ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் உணர்ந்த 'கல்கி' ஆசிரியர் திரு. சதாசிவம் அவர்கள் தொண்டைமான் அவர்களை மேலும் ஊக்குவித்து அவர்கள் எழுதிய கட்டுரைகளையெல்லாம் தொடராகக் கல்கியில் வெளியிட்டு உற்சாகம் ஊட்டினார்கள்.

மகாகவி பாரதி பாடியது போன்று, "காவிரி தென் பெண்ணை பாலாறு தமிழ் கண்டதோர் வைகை பொருநை நதி" தீரங்களிலே, என்றோ நமது முந்தையோர்களால் எழுப்பப்பட்ட திருக்கோயில்களுக்கெல்லாம் தொண்டைமானவர்கள் காமிராவும் கையுமாகச் சென்று, அந்தக் கோயில்களின் வரலாற்றுப் பின்னணி. இலக்கியப் பெருமை, சிற்பச் செல்வங்கள் ஆகிய சிறப்புக்களை யெல்லாம் கண்டு, தெளிந்து, அவற்றை, படங்களுடன் கட்டுரைகள் வாயிலாகத் தமிழ் மக்கள் முன் வைக்கத் தலைப்பட்டார்கள். கல்கி இதழில் வாராவாரம் கட்டுரைகள் வெளிவரத் தொடங்கிய போது நல்ல வரவேற்பும் கிடைத்தது. மூர்த்தி, தலம், தீர்த்தம் இவற்றில் நம்பிக்கையும் நாட்டமும் உடையவர்கள் கட்டுரையைப் படித்த சூட்டோடு அந்தந்த ஊர்களுக்கு யாத்திரை கிளம்பியதும் உண்டு. பக்தர்கள், கலை அன்பர்கள் எல்லோருக்கும் இந்தத் தொகுப்பு வழிகாட்டியாகவும், கையேடாகவும் உதவியது என்றால் அது வெறும் புகழ்ச்சியில்லை.

வணக்கத்துக்குரிய காஞ்சி முனிவரவர்களும், தருமையாதீன குருமகா சந்நிதானம் அவர்களும் கூட, இந்தக் கட்டுரைகளைப் படித்து அனுபவித்ததோடு அமையாமல், தொண்டைமானவர்களைத் தங்கள் தங்கள் மடங்களுக்கே வரவழைத்துப் பாராட்டி, பட்டமும் நல்கி இந்தத் திருப்பணிக்குத் தங்கள் நல்லாசிகளை வழங்கியிருக்கிறார்கள். எத்தகைய பேறு அது. திரைப்படத் தொழில் அதிபர் திரு. ஏ.கே. வேலன் அவர்கள், முதல் பதிப்பு வெளிவந்ததும் அதனை அந்த ஆண்டின் சிறந்த புத்தகமாகக் கொண்டு ஆயிரம் ரூபாய் பரிசளித்து கோலாகலமாகப் பாராட்டு விழாவும் நடத்தியிருக்கிறார். கோவை நன்னெறிக் கழகத்தாரும் தங்கள் பங்குக்கு இந்தத் தொகுதிகளில் ஒன்றின் வெளியீட்டு விழாவைக் கோவையில் கொண்டாடிப் பெருமை சேர்த்திருக்கிறார்கள்.

வேங்கடம் முதல் குமரி வரை முதல் பதிப்பு 1960 ஆம் ஆண்டு, திருநெல்வேலி எஸ்.ஆர்.எஸ் புத்தக நிறுவனத்தாரால் வெளியிடப்பட்டது. மிகுந்த ஆர்வத்துடன் 3000 படிகள் வெளியிட்டார்கள். அவர்கள் ஆர்வம் வீண் போகவில்லை. இரண்டு மூன்று ஆண்டுகளுக்குள்ளாகவே அத்தனை படிகளும் விற்பனையாகி விட்டன. அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க 1964 ஆம் ஆண்டு இரண்டாம் பதிப்பைக் கொணர்ந்தார்கள். அவையும் நாளாவட்டத்தில் விற்பனையாகிவிட்டன. கைவசம் படிகள் இல்லாத காரணத்தால், டெல்லியிலிருந்தும், கல்கத்தாவிலிருந்தும், பூனாவிலிருந்தும், தமிழ்நாட்டு ஊர்களிலிருந்தும் அன்பர்கள் புத்தகம் கேட்டு எழுதிய போது அனுப்ப முடியாத நிலையில், மிகுந்த மனச்சங்கடத்துக்கு உள்ளாக வேண்டியிருந்தது. சூழ்நிலைகள் சரிவர அமையாததால் உடனடியாக மறுபதிப்பைக் கொண்டுவர இயலாது போய்விட்டது. அருமைத் தந்தையார் அவர்களின் மறைவுக்குப் பின், நீண்ட இடைவெளிக்குப் பின்னர் மூன்றாவது பதிப்பு வெளிவந்தது. இதனை வெளியிட சென்னை அபிராமி நிலையம் முன்வந்தது.

மூன்றாவது பதிப்பும் விற்பனை ஆகிவிட்டதால், அன்பர்கள் விரும்பிக் கேட்கும்போது தர முடியாத சூழ்நிலை. அப்போதுதான் மறுபதிப்புக்கான அவசியத்தை உணர்ந்தேன். நான்காம் பதிப்பை வெளியிட கலைஞன் பதிப்பகம் ஆர்வத்துடன் முன் வந்திருக்கிறது.

முதல் பதிப்பின் போதே, இந்த நான்கு தொகுப்புக்களுக்கும் என் தந்தையாரின் உற்ற நண்பர்களாக விளங்கிய நால்வர் அற்புதமான முகவுரைகளைத் தந்து உதவியிருக்கிறார்கள். உள்ளதை உள்ளபடி உணர்ந்து சொல்லும் சத்தியப் பிரமாணமாக அவை இந்தத்

தொகுப்பினை அரண் செய்கின்றன. இதைவிட அருமையாக வேறு யார் சொல்லக் கூடும்? ஆகவே, இந்தப் புதிய பதிப்பிற்கும் அந்தப் பழைய முகவுரைகளையே பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம். நால்வரின் அன்புக்கும் தலைதாழ்த்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

தொண்டைமானவர்கள் இந்தக் கட்டுரைகளை எழுத ஆரம்பித்த சமயம், முதலில் நூற்றெட்டு கோயில்களைத்தான் தேர்ந்தெடுத்து எழுதுவதாக இருந்தது. ஆனால் எழுதி முடித்தபோது 121 கோயில்கள் இடம்பெற்றன. தொகுப்பு வெளியிட்ட பின்னர் விடுபட்டுப்போன மற்ற கோயில்கள் பற்றிய கட்டுரைகளும் வெளியாயின. அவற்றை எல்லாம் தொகுத்து, இந்தத் தலைப்பின் கீழ் ஐந்தாம் பாகமாக வெளியிட வேண்டும் என்ற எண்ணத்தை அண்மையில் கலைஞன் பதிப்பகம் நிறைவேற்றித் தந்திருக்கிறது. வேங்கடம் முதல் குமரி வரை தொகுப்புக்குக் கிடைத்த வரவேற்பு தான், தொண்டைமானவர்கள் வேங்கடத்துக்கு அப்பாலும் சென்று அங்குள்ள திருக்கோயில்களின் மூர்த்தங்களையும், கலைச் செல்வங்களையும் கண்டு சொல்லப் பெரிதும் துணைபுரிந்திருக்கிறது. அந்தக் கட்டுரைகளும் அபிராமி நிலையத்தின் வெளியீடாக ‘வேங்கடத்துக்கு அப்பால்’ என்ற தலைப்பில் வெளிவந்திருக்கிறது. வேங்கடத்துக்கு அப்பால் என்ற நூலின் இரண்டாம் பதிப்பையும் கலைஞன் பதிப்பகமே வெளியிட ஆர்வம் காட்டுகிறது. தமிழ்நாட்டில் மட்டுமன்று, இந்தியத் திருநாடு முழுவதும் உள்ள தமிழ்ப் பெருமக்களும், ஏன் கடல் கடந்த நாடுகளில் உள்ள தமிழன்பர்களும் இந்த நூல்கள் வெளிவர வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறையும் ஆர்வமும் காட்டுகிறார்கள்.

தமிழ் இனத்தின் கலையுணர்வு, கலாச்சாரம், பண்பாடு இவற்றின் வளர்ப்புப் பண்ணையாகவே தமிழகத்துத் திருக்கோயில்கள் விளங்கி வந்திருக்கின்றன. என்றென்றும் அவை அங்கே பத்திரமாகப் பாதுகாக்கப்படும் என்ற நம்பிக்கையும் உண்டு. அந்த நம்பிக்கையுடன் இந்த நான்காவது பதிப்பினையும் வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்தின் முன் வைக்கிறோம். இந்த நான்காம் பதிப்பினை நல்ல முறையில் கொணர்ந்திருக்கும் கலைஞன் பதிப்பகத்தாருக்கு நன்றி சொல்லப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

பாஸ்கர நிலையம்<br>சாஸ்திரி நகர்,<br>சென்னை - 20.

ராஜேஸ்வரி நடராஜன்

# எங்கள் தாத்தா

டாக்டர் உமா நடராஜன்

திருநெல்வேலி என்றவுடன் எல்லோருக்கும் இருட்டுக் கடை அல்வாதான் ஞாபகத்துக்கு வரும். ஆனால், எனக்கோ எங்கள் தாத்தாவின் பூர்விகமான வீடுதான் நினைவுக்கு வரும். பழைய வீடுதான் என்றாலும் அந்த விரிந்த முற்றமும், பகலில் நல்ல சூரிய ஒளியும், இரவில் அண்ணாந்து பார்த்தால், இருண்ட வானில் கண்ணைச் சிமிட்டுகிற நட்சத்திரங்களும், வழுக்கும் கருங்கல் படிகளும், வர்ணம் பூசிய தூண்களுமாய் கொள்ளை அழகு அந்த வீடு. அந்த வீட்டின் கதாநாயகன் எங்கள் தாத்தாவோ அதை விட அழகு. கறுத்த நிறத்தவரைப் போய் அழகு என்று சொல்கிறேன் என்று பார்க்கிறீர்களா? இராமகாதையின் கதாநாயகன் இராமனை, கவிச்சக்கரவர்த்தியே, 'கருஞாயிறு' என்றுதானே பாராட்டுகிறார். அதைப்போல எங்கள் தாத்தாவின் கருமை நிறமே ஒரு அழகு. அந்த வீட்டுக்கு 'சித்ரகூடம்' என்று பெயர் இட்ட நேர்த்தி அதைவிட அழகு. வீட்டின் பெயருக்கேற்ப, வீடு முழுக்க, அதுவும் வீட்டின் மாடி முழுக்க, அழகிய ஓவியங்களும் அழகிய சிற்ப வடிவங்களுமாய், தாத்தாவின் கலாரசனை தனி அழகு. அந்தப் பெரிய ஈசிச்சேரில் தாத்தா சாய்ந்தவாறு உட்கார்ந்து புத்தகம் படிப்பதே ஒரு அழகுதான்.

தான் ஒரு இலக்கியவாதி என்றோ, ஒரு நல்ல கலாரசிகர் என்றோ, ஒரு ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ் அதிகாரி என்றோ, பந்தா எதுவுமில்லாத அவர்களுடைய எளிமை மிகமிக அழகு. வெகுண்ட சொற்களோ, சினந்த செயல்களோ அறியாத அவருடைய பொறுமை அதைவிட அழகு. இப்போது நினைத்தாலும் அவர்களுடைய கள்ளம் கபடமற்ற வெள்ளைச் சிரிப்புத்தான் கண்முன் வருகிறது. பேரன் பேத்தியரிடத்தில் அவர்கள் வைத்திருந்த பாசமும் பரிவும், எல்லாவற்றுக்கும் மேல், எங்களையெல்லாம் கழுதை என்று விளிக்கும் அந்தச் சொல் வெகு அழகு.

தாத்தாவின் உணவுப் பழக்கங்கள் கூட தாத்தாவின் செயல்களைப் போல மிக மென்மையானவை. தாத்தாவின் வாக்கிங் ஸ்டிக்கும், சரிகை அங்கவஸ்திரமும், தனி கம்பீரத்தையே தரும். எங்களுக்கெல்லாமோ அது ஒரு Status Symbol போன்றே தோன்றும். ஆனால் தாத்தாவுக்கோ, Status பற்றிய எண்ணமே இல்லாமல் எளிமையிலும் எளிமையாக இருப்பார்கள். ஆனால், அந்தச் சின்னஞ்சிறு வயதிலேயே, எனக்கு, ஒரு கலெக்டரின் பேத்தி என்ற கர்வம் கூட மிக உண்டு.

தாத்தா எங்களை விட்டுப் பிரிந்தபோது, எனக்கு இறப்பின் வலி வேதனை எதுவும் புரியாத வயது. ஆனால் இப்பொழுது புரிகிறது, எவ்வளவு அன்பான, அருமையான மனிதரை இழந்திருக்கிறோம் என்று. வீட்டில் இருக்கும்போது எங்களையெல்லாம் விதவிதமாய் போட்டோ எடுப்பார்கள். வெளியூர் போய் வந்தால், எங்களுக்கெல்லாம் தினுசு தினுசாய் துணிமணி வாங்கி வருவார்கள். அப்படிப்பட்ட பாசமான ஒரு நல்ல மனிதரைத் தாத்தாவாகப் பெற்றதற்கு நாங்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அவர் களுடைய நூலைப் படிக்கப் படிக்கத்தான், அவர்களுடைய அழகின் ரசனை புரியும். அந்த மகா ரசிகரின் சொல் செயல் எல்லாமே அழகுதான்.

தாத்தாவுக்கும் வாழ்வில் சோகங்கள் இல்லாமல் இல்லை. வளர்ந்த ஒரே மகனையும், கடைக்குட்டி செல்ல மகளையும் நோய் கொண்டு போன அவலங்கள் என்றும் அவர்களுடைய வார்த்தை யிலோ செயலிலோ வெளிப்பட்டதே இல்லை. அவர்கள் கலைஞானி மட்டுமல்ல. ஆன்மஞானியும் கூட. சொந்த சோகங்களை மனத்தின் ஆழத்தில் அழுத்தி, மனைவிக்கு அன்பான கணவராகத் தம் மக்களுக்கு அன்பான தந்தையாக, பேரப்பிள்ளைகளுக் கெல்லாம் பாசமான தாத்தாவாக இருந்ததோடு மட்டுமல்லாது, வெளி உலகுக்கு ஒரு பெரிய இலக்கிய மேதையாய், நல்ல கலா ரசிகராய், நேர்மை யும், திறமையும் நிறைந்த ஓர் அரசு அதிகாரியாய், பல்வேறு பரிமா ணங்களில் தொண்டைமான், ஓர் அழகான, அருமையான மனிதர்.

இப்போது சொல்லுங்கள், எங்கள் தாத்தாவின் உடலும் உள்ளமுமே அழகுதானே.

# கண்டறியாதன கண்டேன்

## *சரோஜினி சுப்பிரமணியம்*

ஆண்டவனைக் காண, அவன் அருளை காணும் பேறு பெற்றுவிட்டால் கண்டு அறியாதனவற்றையும் கண்டுவிடலாம் என்பது எங்கள் தந்தை தொ.மு. பாஸ்கரத் தொண்டைமானுடைய எண்ணம். அந்த எண்ணத்தை நிறைவேற்ற அவர்கள் கலை உலகில் ஆற்றிய பணிகள் நாடறியும்.

சமீபத்தில் எங்கள் தந்தையின் 100 வது பிறந்தநாளன்று அவர்கள் மாவட்ட கலெக்டராகப் பணிபுரிந்த வடஆற்காடு மாவட்டத்திற்கு அவர்களுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் அவர்கள் நினைவுடனும் அவர்கள் எழுதியிருந்த 'பாலாற்றின் மருங்கிலே' புத்தகத்தையும் எடுத்துக்கொண்டு வேலூர் மாவட்டத்தில் உள்ள கோயில்களைப் போய் பார்த்து வந்தோம். எங்கள் தந்தை மாவட்ட கலெக்டராகப் பணியாற்றிய போதும் அங்குள்ள கோயில்களுக்குப் போய் வணங்கி வந்திருக்கிறோம். திரும்பவும் எங்கள் மகன் திரு. ச. ராமசுந்தரம் ஐ.ஏ.எஸ் தாத்தா பார்த்த ஊரிலேயே மாவட்ட கலெக்டராகப் பணியாற்றிய போதும் அங்குள்ள கோயில்களுக்குப் போய்த் தரிசித்து வந்தோம். மூன்றாவது மறையாக எங்கள் தந்தையின் 101வது பிறந்தநாளன்று அவர்கள் எழுதியிருந்த 'வேங்கடம் முதல் குமரி வரை' புத்தகத்தை எடுத்துக் கொண்டு போய் கோயில்களைத் தரிசித்து வந்தோம்.

வட ஆற்காடு மாவட்டத்தில் திருவலம் என்ற ஊருக்கு முதலில போனோம். தந்தையின் புத்தகத்திலேயே போக வேண்டிய வழித்தடங்கள், பார்த்துத் தரிசிக்க வேண்டிய மூர்த்திகள் பற்றி எழுதியிருந்தார்கள். திருவலத்தில் உள்ள பிள்ளையாருக்கு வரசித்தி விநாயகர் என்ற பெயர், எங்கள் தந்தையின் புத்தகத்தைப் படித்துக் கொண்டே கோயிலை வலம் வந்தோம். அங்கு கோயில்

கொண்டிருக்கும் வல்ல நாதரையும் வல்லாம்பிகையையும் தரிசித்து வந்தோம். எங்கள் தந்தையின் கால்பட்ட இடம் என்று மனத்திற்குள் அஞ்சலி செலுத்திவிட்டு பொன்னை என்ற ஊரில் கட்டப்பட்டிக்கும் நவக்கிரக க்ஷேத்ரங்களையும் வணங்கினோம். வேலூர் கோட்டைக்குள் உள்ள ஜலகண்டேசுவரரையும் பாலாற்றின் கரையிலே பள்ளி கொண்டிருக்கும் பள்ளி கொண்ட பெருமாளையும் வணங்கினோம்.

பிரம்மாவின் வேண்டுகோளுக்கு இணங்கி அதை பூர்த்தி பண்ணவும் விரைந்து இப்பூமிக்கு இறங்கி வந்து பெருக்கெடுத்து வரும் ஆற்றுக்கு குறுக்கே சங்கு சக்ரதாரியாய் ஆதிசேஷனுக்குத் தெற்கே தலையையும் வடக்கே காலுமாகப் பள்ளி கொண்டு விடுகிறார். பாலாறு பெருகி வருவதை சரஸ்வதியை மேலே போகவிடாமல் தடுத்துவிடுகிறார். கல்வி அறிவால் ஏற்படும் அகங்காரத்திற்கு அணைபோட்டு அறிவை வளரச் செய்யும் பெருமாளாக இப்பள்ளி கொண்ட பெருமாள் உத்தர ரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கிறார்.

கண்ணால் காண்பதையும் அறிவால் அறிவதையும் விட இறை அருளாலே தேர்ந்து தெளியும் நிலை ஒன்று உண்டு. அந்நிலையில் தான் கண்டு அறியாதவற்றையும் கண்டு விடுகிறார்கள். கடவுளைக் காண்பது எளிதல்லதான். ஆனால் அவன் அருளாலே அவன் அருளே கண்ணாகக் காணும் பேறு பெற்றுவிட்டால் கண்டு அறியாதவற்றையும் கண்டுவிடலாம். கண்டறியாதன கண்டேன் என்று அற்புதமாகப் பாடிவிடலாம். அப்படிப் பாடியவர் அப்பர் பெருமான்.

அப்பர் பெருமான் கயிலாயத்தை நேரில் தரிசிக்க விரும்பினார். அப்பர் பெருமானாக திருநாவுக்கரசு சுவாமிகள், காளத்திநாதனை வழிபட்ட பிறகு, கயிலையைக் கண்டு தரிசிக்க வேண்டுமென்ற விருப்பத்தால் காலால் நடந்தே புறப்பட்டார். வயதான காரணத்தினால் சோர்வுற்றுக் கையைத் தரையில் ஊன்றி தவழ்ந்து உருண்டு மார்பாலேயே ஊர்ந்து சென்றார். எப்படியும் கயிலையைச் சென்று அடைய உறுதி பூண்டார். அப்பர் பெருமானின் உறுதியை அறிந்த இறைவன், ஒரு முனிவர் உருக்கொண்டு சுவாமிகளைத் தடுத்து நிறத்த முயன்றார். அவர் நின்ற இடத்திலேயே ஒரு திருக்குளத்தை தோற்றுவித்து அதில் மூழ்கி எழுந்திருக்கச் செய்தார். அப்படி மூழ்கியவர்தான் திருவையாற்றுக்கு வந்தார். அங்கே கயிலையைக் கண்டார். இப்படியே யாதும் சுவடு படாமல ஐயாறு அடைகின்றார் அப்பர் பெருமான். அங்கு காணப்படும் பொய்கை சூர்ய

புஷ்கரணியில் தீர்த்தத்தில் மூழ்கி, எழுந்து கயிலைக் காட்சியைக் கண்டு 'மாதர் பிறைக் கண்ணியான்' என்ற பதிகம் பாடினார். காணுகின்ற பொருள்களிலும், எல்லா உயிர்களிலும் சிவத்தையும் சக்தியையும் காண்கிறார்.

**காதல் மடப்பிடியோடும்**<br>**களிறு வருவன கண்டேன்**<br>**கண்டேன் அவர் திருப்பாதம்**<br>**கண்டறியாதன கண்டேன்**

**பேடை மயிலோடும் கூடி**<br>**பிணைந்து வருவன கண்டேன்**<br>**கண்டேன் அவர் திருப்பாதம்**<br>**கண்டறியாதன கண்டேன்**

**வரிக்குயில் பேடையோடு ஆடி**<br>**வைகி வருவன கண்டேன்**<br>**கண்டேன் அவர் திருப்பாதம்**<br>**கண்டறியாதன கண்டேன்**

பாலாற்றின் மருங்கிலும், பொன்னியின் மடியிலும், காவிரிக் கரையிலும் பொருநைத் துறையிலும் வேங்கடத்துக்கு அப்பாலும் நூற்றுக்கணக்கான கோயில்களைக் கண்டு தரிசித்து வணங்கி அங்கு கோயில் கொண்டிருக்கும் மூர்த்திகளின் அழகையும் சிற்ப நயங்களையும் தான் கண்டுமகிழ்ந்ததோடு அல்லாமல், ஆனந்தவிகடன், கல்கி தீபாவளிமலர்களில் கட்டுரை வெளியிட்டார்கள்.

கல்கி ஆசிரியரின் வேண்டுகோளுக்கு இணங்கி உத்தியோகத்தில் இருந்து ஓய்வு பெற்ற பிறகு கட்டுரையாக எழுதி வந்தார்கள். தமிழ் கூறும் நல்லுலக மக்கள் அதைப் படித்துப் பாராட்டினார்கள்.

எங்கள் தந்தையின் கோவில் சிற்பக்கலை ஆர்வம் அவர்கள் ரத்தத்திலேயே ஊறியது. திருநெல்வேலியில் பிறந்து இந்து கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்று, உத்தியோகம் மேற்கொண்டு அரசுப் பணியையும் கலைப் பணியையும் தன்னுடைய வாழ்நாளில் சிறந்த சேவையாக மேற்கொண்டார்.

எங்கள் தந்தை, தொ.மு.பாஸ்கரத் தொண்டமானின் குடும்ப அமைப்பும் இந்தப் பணிக்கு வழிகாட்டியாக அமைந்தது. எங்கள் தகப்பனாரின் தந்தை தொண்டமான் முத்தையா சிறந்த ஓவியக் கலைஞர். தமிழிலும், ஆங்கிலத்திலும் கவிதை பாடும் அளவுக்குப் புலமை பெற்றவர். தந்தையையும் அந்தப் பணியிலேயே ஈடுபடச் செய்ய விரும்பினார்கள். பல ஓவியப் பயிற்சியும் பெற்று School of Arts Principal ஆக்க நினைத்திருக்கிறார்கள்.

ஆனால் எங்கள் தந்தையின் பாட்டனார் வி.பி. சிதம்பரம் தொண்டைமான் தன் பேரனை அரசுப் பணியில் சேர்க்க விரும்பினார்கள். எங்கள் வீட்டிற்கு அருகிலிருந்த கலெக்டர் சாய்புவின் உதவியால் அரசு பணியில் ரெவினியூ இலாக்காவில் பணியாற்ற சேர்ந்தார்கள். படிப்படியாக உத்தியோக உயர்வு பெற்று எல்லா மாவட்டங்களிலும் பணியாற்றினார்கள்.

தான் பணியாற்றிய மாவட்டங்களிலுள்ள கோயில்களுக்குச் சென்று சிற்பக்கலையின் அழகை ஆராதித்து ஆனந்தவிகடன், கல்கி தீபவாளிமலர்களில் கட்டுரைகளாக எழுதி வந்தார்கள். முதல் முதல் கிருஷ்ணாபுரம் கோயிலில் உள்ள சிற்பக் கலை அற்புதத்தை ஆனந்தவிகடன் மலரில் எழுதி வெளிஉலகிற்கு தெரியச் செய்தார்கள்.

தஞ்சை மாவட்டத்தில் 5 வருடங்கள் மாவட்ட உதவிக் கலெக்டராகப் பணியாற்றிய பொழுது அங்குள்ள கோயில்களில் உள்ள சிற்பக் கலைகளின் பிரதாபத்தைப் பற்றிப் பத்திரிகைக்கு எழுதி வந்தார்கள்.

அவர்கள் செய்த பணி எல்லோரும் போற்றும்படியாக இருந்தது. அதிலும் அவர்கள் தஞ்சையில் கலைக்கூடம் அமைக்க மாவட்ட கலெக்டர் திரு. டி.கே. பழனியப்பன் ஐ.ஏ.எஸ். தலைமையில் அவர்கள் ஆற்றிய தொண்டு காலமெல்லாம் போற்றப்பட வேண்டியது. அவர்களுடைய பேரப்பிள்ளைகள் 7 பேர் தாத்தா பேர் சொல்ல வாழ்ந்து வருகிறார்கள். இரண்டு பேரப் பிள்ளைகள், தாத்தாவின் பெயரைத் தாங்கி நிற்கிறார்கள்.

அரசுப் பணியில் இருந்து ஓய்வு பெற்ற பிறகு எங்கள் திருநெல்வேலி வீட்டிலேயே தங்கினார்கள், பிள்ளையார்பட்டி கற்பக விநாயகரை தன்னுடைய முழுமுதற் கடவுளாக வழிபட்டார்கள்.

அவர்களின் உற்ற நண்பர் கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்கள் உதவியோடு பிள்ளையார்பட்டியில் 7 நாள் தங்கி மௌன விரதம் மேற்கொண்டார்கள். அங்கே இருந்த பொழுதுதான் தமிழ்நாட்டுக் கோயில்களைப் பற்றி ஆராய்ந்து எழுதி மலர் வெளியிட வகுத்தார்கள். ஆனந்தவிகடன், கல்கி தீபாவளி மலர்களில் எழுதியதுடன் முதன்முதலில் மங்கள நூலகம் சார்பில் பிள்ளையார்பட்டி பிள்ளையார், 'மதுரை மீனாட்சி' முதலிய நூல்களை எழுதி வெளியிட்டார்கள். அதன்பின் எங்கள் குடும்ப நண்பர் எஸ்.ஆர்.எஸ். மூலம் 'வேங்கடம் முதல் குமரி வரை' நூல்களை 4 பிரிவுகளாக வெளியிட வாய்ப்பு அளித்தார்கள். ஓய்வு பெற் பின் கல்கியில் படித்துத் தொடர்க் கட்டுரையாக எழுதி வந்தார்கள். தமிழ்நாட்டுக் கோயில்களைப் பற்றி கல்கியில் படித்த அன்பர்கள் அப்பாவுக்கு வாழ்த்து எழுதினார்கள்.

தன் உற்ற நண்பர் கோவை கிரிதாரி பிரசாத்துடனும் தொழிலதிபர் திரு. கே. ஆர். ராதா அவர்களுடனும் சேர்ந்து வேங்கடத்துக்கு அப்பாலும் சென்று அங்குள்ள கோயில்களைப் பற்றி எழுதினார்கள். காசி, ஹரித்துவார், ரிஷிகேஷ் வரை சென்று வந்தார்கள். பம்பாய், பூனா, டில்லி தமிழ்ச் சங்கங்களில் உரையாற்றினார்கள்.

அவர்களுக்கு இலக்கிய உலகில் வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார் அவர்களும், ரசிகமணி டி.கே.சி சிதம்பரநாத முதலியார் அவர்களும் முக்கிய நண்பர்களாக இருந்தார்கள்.

சா. கணேசன், மு. அருணாசலக் கவுண்டர், ஜஸ்டிஸ் மகாராஜன், மீ.ப. சோமு என்ற உற்ற நண்பர்கள். ஏ.சி. பால்நாடார், ஹிலால் பிராஸ் முதலாளி முதலியவர்கள் உடன் பிறவாச் சகோதரர்கள் ஆக விளங்கி வந்தார்கள். ஆனால் உடன்பிறந்த சகோதரன் தொ.மு.சி. ரகுநாதன், தனது தமையனிடம் கடைசி வரை சுமுகமாக இல்லை. அந்த மன வருத்தம் எங்கள் தந்தை மருத்துவமனையில் கோமாவில் இருக்கும் பொழுது வெளிப்பட்டது.

தஞ்சையில் அவர்கள் ஆற்றிய கலைப்பணிக்கு இன்று எந்த ஆதாரமும் இல்லை. தஞ்சையில், கலெக்டர் பழனியப்பன் தலைமையில் எங்கள் தந்தை ஆற்றிய பணிகளை நாடே அறியும். ஆனால் அந்தச் சிலைகள் பேசுமா?

2004 போன வருடம் ஜூலை மாதம் 15 ஆம் தேதி வெள்ளிக்கிழமை, The Hindu ல் வெளியான ஒரு கட்டுரை. Palatical Tourism potential yet to the tapped (By staff reporter) வெளியாகி இருக்கிறது. அதில் தஞ்சை அரண்மனை கலைச் செல்வங்களைப் பற்றி எழுதிவிட்டு, The Palace honour an art gallery which has the richest bronze, stone collection in the country. Started in 1951 by the District Collector Thiru. T. K. Palaniyappan I.A.S., the gallery has 241 bronze icons and 103 stone sculptures and coins. மாவட்ட கலெக்டராக இருந்த திரு. டி.கே. பழனியப்பன் அவர்களைத் தலைவராக கொண்டு ஆர்ட் கேலரி கலைக்கூடம் அமையப் படாதபாடுபட்டு சிற்பங்களுக்கு விளக்கம் எழுதி கலைக்கூடம் அமைய காரணகர்த்தாவாக இருந்தவர் எங்கள் தந்தை தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான். அவர்கள் ஆற்றிய பணிகளைப் பற்றி அந்தச் சிலைகளுக்கு வாய் இருந்தால் பேசும்.

ஆனால் தமிழ் கூறும் நல்லுலகமும், வரலாற்றுப் பெரியவர்களும் கலைக்கூடம் காணவரும் மக்களும் எங்கள் தந்தையின் தொண்டைப் பற்றி நன்கு அறிவார்கள். ஆனால் பேசாத கோயில் சிற்பங்களும் கலைக் கூட சிற்பங்களும் எங்கள் தந்தையின் உற்ற நண்பர்களும் அவர்களுடைய கலை ஆர்வத்தையும் சிற்பத்திறனைப் பற்றியும் அறிவார்கள்.

காலத்தால் அழியாத கோவில்களிலுள்ள சிற்பக் கலைகள் அவர் சொல்லால் அமைத்த காவியங்களாக வழி காட்டுகிறது என்றும், எங்கள் தந்தை எழுதிய வேங்கடம் முதல் குமரி வரை உள்ள 4 புத்தகங்களையும் வழிகாட்டியாக எடுத்துக்கொண்டு 45 ஆண்டுகளாக ஸ்தல யாத்திரை செய்தவர் திரு. ரா. ஜகத்ரட்சகன்.

நானும் என்னால் முடிந்த வரை கடந்து 33 ஆண்டுகளாக எங்கள் மங்கையர்க்கரசி மகளிர் மன்றத்தின் சார்பில் சகோதரிகளோடு பிள்ளையார்பட்டி முதல் முக்கிய தல யாத்திரை செய்து வருகிறோம். போகும் இடம் எல்லாம் எங்கள் தந்தை ஆற்றிய பணி நினைவுக்கு வரும்.

காலத்தால் அழியாத பல கோயில்கள் இன்னும் இருக்கின்றன. தமிழ்நாட்டிக்குப் பெருமை தேடி தரும் கோயில்களும் சிற்பக் கலைகளும் தமிழ்நாட்டுக்கு அழியாத செல்வங்களாகும். அவற்றைப் பார்க்கும் போதெல்லாம் எங்கள் தந்தையாருக்கு சிற்பக்கலை மீது

இருந்த ஆர்வமும் அதற்காக அவர்கள் ஆற்றிய தொண்டும் பார்க்கின்ற எல்லோர் நினைவுக்கும் வரும்.

எத்தனையோ துன்பங்கள் வந்தாலும் அவர்கள் செய்த பணி எல்லோரும் நினைவு கூர்ந்து போற்றும்படி இருக்கிறது. எங்கள் தந்தை, *1904* ஆம் ஆண்டு பிறந்தார்கள். இந்த ஆண்டு அவர்களது நூறாவது ஆண்டு. *2004* ஆம் ஆண்டு ஜுலை மாதம் எனது தமக்கை இராஜேஸ்வரி நடராஜன் வீட்டில் அன்பர்கள் கூடி வழிபாடு செய்தோம். சிறிது கால தாமதம் ஆனாலும், நூற்றாண்டு நிறைவு விழாவைச் சிறப்பாகச் செய்ய எண்ணியிருக்கிறோம். இறையருளால் எங்கள் எண்ணம் ஈடேறும் என்ற நம்பிக்கை இருக்கிறது.



ரதி
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# எங்கள் அண்ணாச்சி

*சாவித்திரி துரைராஜ்*

எனது மூத்த அண்ணன் அமரர் தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் அவர்களின் கடைசித் தங்கை நான். நாங்கள், இளையவர்கள் எல்லோரும், அவர்களை அண்ணாச்சி என்றுதான் அழைப்போம். அது திருநெல்வேலி பழக்கம். அவர்களது நூற்றாண்டு மலர் வெளிவருவதை எண்ணி மிகவும் மகிழ்கிறேன். எங்கள் தகப்பனார் எனக்கு ஆறு வயதாக இருக்கும்போதே காலமாகி விட்டார்கள். ஆகவே அண்ணாச்சிதான் எனக்குத் தந்தைக்குத் தந்தையாக இருந்து கல்வி, திருமணம் போன்றவற்றை நிறைவேற்றி, தந்தை இல்லா குறை தெரியாமல் என்னை வாழ வைத்தவர்கள்.

எனது புகுந்த வீட்டில் எனது துணைவரின் தம்பிகளின் மேற்படிப்பு வேலை போன்றவற்றிற்கு எனது பெரிய அண்ணாவின் பெயரைச் சொல்லியே காரியத்தைச் சாதித்துக் கொண்டோம். துணைவரின் தம்பிகள் கல்லூரிப் பேராசிரியராகவும், பல்கலைக் கழகத்திலும் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள். எனது துணைவரின் தம்பிக்குப் பெண் பார்க்க நானும் எனது துணைவரும் விக்கிரமசிங்கபுரம் பண்ணையார் திரு. விஸ்வநாதத் தேவர் வீட்டிற்குச் சென்றோம். அப்போது அங்கிருந்த யாதவக் கல்லூரி முதல்வர் திரு. சொக்கலிங்கம் அவர்கள், பெண்ணின் தகப்பனாரிடம் அறிமுகம் செய்யும்போது எனது துணைவரை தொ.மு.பாவின் தங்கையின் கணவர், இவரது தம்பிதான் மாப்பிள்ளை என்றார். உடனே எந்த மறுப்பும் இல்லாமல் சம்மதம் தெரிவித்து ஒரு மாதத்திற்குள் திருமணம் முடிந்துவிட்டது. அவளும் ஓர் கல்லூரி விரிவுரையாளராக பணியாற்றிக் கொண்டிருக்கிறார்.

எனது துணைவரின் மூத்த தம்பிக்குத் தொ.மு.பாவின் மூத்த தங்கையின் புதல்வியைத் திருமணம் செய்து கொண்டதும் அதே

தங்கையின் மகனுக்கு என் துணைவரின் தங்கையைத் திருமணம் செய்து கொடுத்துள்ளோம்.

எனது துணைவரின் தம்பிகள் அடிக்கடி என்னிடம், தங்கள் அண்ணாவின் பெயரை வைத்தே நாங்கள் முன்னேறிக் கொண்டோம் என்று கூறிப் பெருமைப்படுவார்கள்.

எனது துணைவரின் ஊர் பாரதி பிறந்த எட்டயபுரம். என் துணைவர் இலக்கியத்தில் ஆர்வமுடையவர். ஆகவே மூத்த மைத்துனரிடம் பல செய்திகளை அறிந்து கொண்டார்கள். மைத்துனரிடம் மதிப்பும் மரியாதையும் உடையவர். அவர்களிடம் பேசவே பயப்படுவார்கள். என் துணைவர் எட்டயபுரம் ராஜா உயர்நிலைப் பள்ளியில் தமிழ் ஆசிரியராக 18 ஆண்டுகள் பணியாற்றியவர்கள். எம்.ஏ. தமிழ் படித்திருந்தும் அந்தக் காலத்திலே கல்லூரி விரிவுரையாளர் பணி கிடைக்கவில்லை. பெரிய மைத்துனராகிய என் அண்ணாவிடம் சிபாரிசுக்கு சென்றபோது, அவர்கள் தூத்துக்குடி வ.உ.சி கல்லூரியில் டியூட்டர் பதவிதான் தருவார்கள் போல் உள்ளது என்றதும், என் துணைவர் செல்ல மறுத்துவிட்டார்கள். ஏனென்றால் உயர்நிலைப் பள்ளியில் வாங்கிக் கொண்டிருந்த சம்பளத்தை விட டியுட்டர் சம்பளம் மிகக் குறைவு. மேலும் எட்டயபுரத்திலிருந்து தூத்துக்குடிக்கு தினமும் சென்று வரமுடியாத காலம் அது.

சில காலம் கழித்து நான் அண்ணாவிடம் எனது துணைவருக்கு கல்லூரி விரிவுரையாளர் பணி வாங்கித் தரும்படி கேட்டபோது, உனது துணைவர் விட்டிற்கு பின்னாலேயே கல்லூரி கேட்கிறாரே அது முடியுமா? என்று கூறிவிட்டார்கள். என்றாலும், அண்ணாச்சி உடல்நலக் குறைவால் ஆஸ்பத்திரியில் இருக்கும்போது தனது மூத்த மகள் ராஜேஸ்வரியிடமும் அவளது துணைவர் திரு.வி.கே.சி. நடராஜனிடமும் சாவித்திரி மாப்பிள்ளைக்கு எந்தக் கல்லூரியிலாவது விரிவுரையாளர் பணி வாங்கிக் கொடுத்துவிடுங்கள் என்று கூறி உள்ளார்கள். அவர்களது முயற்சியால் என் துணைவர் உசிலம்பட்டித் தேவர் கல்லூரியில் விரிவுரையாளராக 18 ஆண்டுகள் பணியாற்றினார்கள். பின்னர் மதுரை செந்தமிழ் கல்லூரியில் 7 ஆண்டுகள் முதல்வராகப் பணியாற்றி, ஓய்வு பெற்று நெல்லையில் மகன் வீட்டிலும் பின்னர் சொந்த ஊரான எட்டயபுரத்திலும் 12 ஆண்டுகள் வாழ்ந்து தனது காலத்தை முடித்துக் கொண்டார்கள்.

நான் இடைநிலை ஆசிரியை பயிற்சி காந்தி கிராமத்தில் பயின்று அங்கேயே இரண்டு ஆண்டுகள் பணி ஆற்றிய பின் நெல்லையிலும் இரண்டு ஆண்டுகள் பணியாற்றினேன். திருமணத்திற்குப் பின் எனது துணைவர் பணியாற்றிய எட்டயபுரம் ராஜா உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றினேன். அப்போது விடுமுறையில் நான் நெல்லை செல்லும் போதெல்லாம், அண்ணாச்சி என்னை உற்சாகப்படுத்தி தமிழ் வித்துவான் படிப்பைப் படிக்கும்படி தூண்டினார்கள். அநேக புத்தகங்கள் கொடுத்து உதவினார்கள். நானும் தமிழ் வித்வான் தேர்வில் வெற்றி பெற்று, அப்பள்ளியிலேயே தமிழ் ஆசிரியராகப் பணியாற்றி அப்பள்ளி மேல்நிலைப் பள்ளியாக உயர்த்தப்பட்டபோது மேல்நிலைப் பள்ளி மாணவர்களுக்கும் தமிழ் ஆசிரியராகவும் இருந்து ஓய்வு பெற்றேன்.

எங்கள் அண்ணாச்சியின் புகழைப் பற்றி நான் அடிக்கடி கூறும்போது என் குழந்தைகள் அப்படியா என்பார்கள். அவர்களும் அண்ணாச்சியினால் முன்னேறியவர்கள்தான்.

எனது மூத்தமகள் பி.எட். நேர்முகத் தேர்வுக்காக காந்தி கிராமம் சென்ற போது, அங்கு உள்ளவர்களிடம் எனது மாணவி கல்லூரியில் முதல்வராக இருந்த திருமதி பங்கஜம், சாவித்திரி அக்காவின் மகள் என்று அறிமுகம் செய்யும்போது எந்த சாவித்திரி என்று பிறர் கேட்க, திரு. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமானின் தங்கை சாவித்திரி என்று கூறியதோடு நுழைவுத் தேர்வு வெற்றிகரமாக முடிந்துவிட்டது.

எனது மகன் எம்எஸ்சி எம்பில் படித்து ம.தி.தா. இந்து கல்லூரிக்கு நேர்முகத் தேர்வுக்குச் சென்றபோது அவனை அறிமுகப்படுத்தும்போது திரு. அம்மையப்பன் அவர்கள் தொமுபாவின் தங்கை நம் பள்ளியில் படித்த சாவித்திரியின் மகன் என்று கூறியதும் உடனே கல்லூரி விரிவுரையாளர் பதவி கிடைத்துவிட்டது.

எனது மகளும், மகனும் அண்ணாச்சி பெயரால் நுழைவுத்தேர்வு வெற்றிகரமாக முடிந்ததால் ஏ! அப்பா உங்கள் அண்ணாவிற்கு எவ்வளவு புகழ், எவ்வளவு புகழ், எவ்வளவு பெருமை என்று என்னிடமே அடிக்கடி கூறிக்கூறி மகிழ்ந்தார்கள்.

எனக்குத் திருமணம் ஆன புதிதில் எட்டையபுரத்தில் நான், தொ.மு.பாவின் தங்கை என்றால் யாரும் நம்பவில்லை. என்னிடமே தொமுபாவின் கூடப் பிறந்தவர்களா? அல்லது ஒன்றுவிட்ட சகோதரியா? என்று அநேகம்பேர் கேட்டார்கள். நான் அவர்களிடம்

என் அண்ணாச்சி என் பெற்றோருக்கு மூத்த மகன், நான் ஒன்பதாவது மகள் என்று கூறினேன்.

எனக்குத் தெரிந்தவர்கள் தொ.மு.பா எழுதிய வேங்கடம் முதல் குமரி வரை என்ற புத்தகங்களைப் படித்தவர்கள். உங்கள் அண்ணா எழுதிய புத்தகத்தைப் படிக்கும்போது அந்தந்தக் கோவில்களை நேரில் பார்த்த மாதிரியே இருக்கும். உடனே அந்தக் கோவில்களுக்குச் சென்று பார்த்து வர உள்ளம் துடிக்கும் என்று கூறுவார்கள். சென்று பார்த்து வந்தவர்கள் புத்தகம் மிக உதவியாக இருந்தது என்று பாராட்டுவார்கள். அதைக் கேட்டு நான் பெருமகிழ்ச்சி அடைவேன்.

நானும் என் குழந்தைகளும் காலையில் எழுந்ததும் அண்ணா படத்தின் முன் நின்று அவர்களை நினைத்துக் கொண்டே வேலையில் ஈடுபடுவோம். என்னுடைய பேரன், பேத்திகள், கலெக்டர் தாத்தா படம் தானே என்றும், எங்கள் காலத்திலும் அவர்கள் பெயரைச் சொல்லியே நாங்களும் முன்னேறுவோம் என்று கூறி படத்தை வணங்கிச் செல்வார்கள்.

ஒட்டு மொத்தமாகப் பார்த்தால், எங்கள் அண்ணாச்சி எங்கள் குடும்பத்தவர்களை வாழ வைத்த மகான் மட்டுமல்ல இன்னும் எங்கள் குடும்பத்தவர்களை வாழ வைக்கப்போகும் எங்கள் குலதெய்வம் என்று கூறிக் கொள்வதில் பெருமைப்படுகிறேன். இப்பிறவியில் அவர்கள் தங்கையாகப் பிறப்பு எடுத்தற்கு நான் போன பிறவியில் என்ன தவம் செய்தேனோ?



கலாரசிகர் தொண்டைமான்



திரு. பாஸ்கரத் தொண்டைமானின் தம்பி சிதம்பர ரகுநாதனும், மகன் கருணாகரனும்

# T. M. C. RAGUNATHAN

Tho. Mu. Chidambara Ragunathan, is a short story writer, novelist, poet, dramatist, biographer, literary critic, researcher, translator, journalist and editor, all rolled into one. Dr. Kailasapathy, a renowned Marxist scholar described him as a doyen in many respects in the realm of modern Tamil literature. Ragunathan is indeed a trailblazer of progressive literature in Tamil, the harbinger of the Progressive literature in Tamil, the harbinger of progressive writers Movement of Tamilnadu, the herald of Marxist literary criticism in Tamil and a pioneer of comparative literature in Tamilnadu.

Born at Tirunelveli on 20th October 1923, Ragunathan in his emergence as a writer owes much to his ancestral legacy and the literary environment prevailing in his hometown in his boyhood days. His great grandfather was a disciple of the saint-poet of 18th centruy Murugadass Swamigal, the author of **Pulavar Puranam**. His grandfather too was a poet who has written **Nellai Pallu**, the folk form of drama in poetry. His father an artist and photographer by profession has also produced some prose and poetical works. His only brother late T. M. Bhaskara Thondaiman, has written many books on south Indian sculpture and Tamil literature. His English professor and mentor in literary studies was A. Srinivasa Raghavan, a Sahitya Akademi award winner. Ragunathan had the opportunity of having a good library and of getting new books and journals at home itself. Thus Kamban and Shelley, Bharathi and Puthumaippithan became Ragunathan's favourite wirters. Ragunathans' first short story appeared in **Prasanda Vikatan** in 1941, while he was a teenager.

Ragunathan's brother, a revenue officer under British rule was his guard can after his father's demise. But Ragunathan developed contacts witht he banned Communist Party which was underground in those days. slowly he became a convinced leftist polititcaly, and was arrested and detained in prison during the students agitation of 1942. Though he was released after a few weeks his formal college education came to an end with that. In a way it was a blessing in disguise in prompting Ragunathan to become a writer by profession. He began to concentrate on writing stories, Poems and articles in journals. In 1944 he joined the **Dhinamani Publications** as a sub editior. He left that job in 1946 and joined **Mullai** a monthly in 1946. He worked in Chennai for nine years and then came to his hometown and edited and published a progressive monthly of his own, **Shanthi** for more than a year. After ramaining as a freelance writer for more than a decade, he joined the Soviet Information Branch, Chennai, where he worked as editor for more than tow decades and retired from professional journalism in 1988 at the age of sixty-five.

His first book **puyal** a novelette was published in 1945. His book of literary criticism **Ilakkiya Vimarsanam** (1948) was hailed as a pioneering work of its kind.

At the turn of the 50s Ragunathan, who had already established his identity as a notable leftist progressive writer, brought out **Panchum Pasiyum,** the first socialist realistic novel in Tamil. This novel deals with the lives of the handloom workers of Tamilnadu highlighting their plight in the first years of Indian independence. Deprived of a decent living and loss of work and forced to migrate in search of other jobs, the community faced hunger deaths and suicide. The novel tells about how the class consciousness of the weavers was awakened and how they stood united to decide their own fate. This novel is distinguished for its powerful style, vivid description of situations and for its ideological insight. Panchum Pasiyum has gained the privilege of being the first work of fiction from modern Tamil to be translated into an European language, Czech.

As a poet, Ragunathan neither belongs to the school of grammatical prosody nor of the new poetry. His trenchant poetry recitals

in poet's symposia were a sure bet to draw many listeners in the 50s and 60s. He has brought out four collections of poems.

Greatly influenced by Puthumaippithan's short stories, Ragunathan had been a close friend of that great writer in his last years of life. The biography of Puthumaippithan written and published in 1951 by Ragunathan is still acclaimed by critics and chroniclers as the best literary biography of a modern Tamil writer.

As the admirer and follower of Bharathis' ideals Ragunathan has so far brought out six research works on Bharathi, including the Sahitya Akademi award winning work **Bharathi kaalamum Karutthum**. Ragunathan's deep insight into the poet and his milieu and his balanced criticial analysis and pleasant style have made it a notable milestone in the history of modern Tamil literature. His work Bharathiyum Shelleyum is a pioneering work, unique by its depth and breadth in the realm of comparative studies in Tamil.

Ragunathan's monumental work **Ilangovadigal Yaar**, an inter disciplinary, Marxist socio-historical analysis of the first great Tamil epic **Chilappathikaaram**, is regarded as a thought - provoking study of that epic. exploring many myths woven around it.

As a translator Ragunathan has distinguished himself by translating Maxim Gorky's major novels including his Mother into Tamil and also translated into Tamil poetical form V. Mayakovsky's epic poem 'Lenin'. In recognition of these achievements Ragunathan was selected for the Soviet Land Nehru Award in 1965 and 1979.

Some of the short stories, poems and literary articles of Ragunathan have been translated into Malayalam, Bengali, Hindi, Czech, polish, German, Russian and English. Some of his books have been prescribed as text books in three universities in Tamil nadu and two outside Tamilnadu.

Three scholars have won doctoral degrees form madras University and Madurai Kamaraj University for research on Ragunatha's work.

Ragunathan has so far hel dmany responsible posts and positions including member of the Advisory Board for Tamil of Sahitya Akademi (1988-93), member of the senate, Manonmaniam Sundaranar University, Tirunelveli (1993-95) and memeber of jury for sahitya Akademi Award in Tamil, 1994.

T. G. sivasankaran described him as the admirable writer who has not bartered away his soul for the sake either of position, money or power. He now lives in his hometown Tirunelveli.



குறவன் ராஜகுமாரியைத் தூக்கிச் செல்லல்
கிருஷ்ணாபுரம் கோயில் சிற்பம்

# பாரதி ரகுநாதன்

விடுதலைப் போராட்ட வீரர், கவிஞர், சிறுகதை எழுத்தாளர், நாவலாசிரியர், மொழிபெயர்ப்பாளர், ஆய்வாளர், பத்திரிகைத் துணை ஆசிரியர், பத்திரிகை ஆசிரியர், அமைப்பாளர் எனப் பல துறைகளிலும் காலூன்றி நின்று, தமது படைப்புகளின் வழியாகத் தமிழன்னைக்கு மகுடம் சூட்டிய பெருமை தொமுசி ரகுநாதனுக்கு மட்டுமே உண்டு.

1941 இல் பிரசண்ட விகடன் என்ற பத்திரிகையில் தமது சிறுகதையின் வழியாக இலக்கிய உலகத்திற்கு அறிமுகமான தொமுசி, 199 இல் வெளிவந்த புதுமைப்பித்தன் கதைகள் - 'சில விமர்சனங்களும் விஷமத்தனங்களும்' என்ற நூலுடன் தமது 58. ஆண்டு கால எழுத்துப் பணியை ரகுநாதன் நிறுத்திக் கொண்டாலும் தமது இறுதி மூச்சுள்ள வரை பாரதி புகழ்பாட மறந்ததில்லை.

தொமுசியின் காவியப்பாவை கவிதைக்கும், பஞ்சும் பசியும் நாவல், இலக்கியத்துக்கும், பாரதி காலமும் கருத்தும் நூல் ஆய்வுக்கும், 'தாய்' நூல் மொழிபெயர்ப்புக் கலைக்கும் பரிசுகளும் விருதுகளும் பெற்றுப் பாராட்டப்பட்ட படைப்புகள்.

சிலப்பதிகாரத்தை எழுதிய இளங்கோ அடிகளை மன்னர் மகன் என்றும், சேரன் செங்குட்டுவனின் தம்பி என்றும், பன்னெடுங்காலமாகச் சொல்லிவந்த கதைகளையும், ஆய்வாளர்களின் கருத்துக்களையும் முற்றிலும் நிராகரித்து, இளங்கோவடிகள் வணிகக் குலத்தில் பிறந்தவர் என்று இளங்கோவடிகள் யார்? என்ற நூலில் மெய்ப்பித்தவர் தொ.மு.சி. ரகுநாதன். இந்த நூலுக்கு இதுவரை யாராலும் மாற்றுக் கருத்தை முன்வைக்க முடியவில்லை. ஈரோட்டில் அவருக்கு 2001 ஆம் ஆண்டுக்கான பாரதி விருது வழங்கப்பட்டது.

தொ.மு.சியின் ஈரோடு வருகை பற்றிய ஒரு நேர்முக வர்ணனை 2001 டிசம்பர் 10.

ஈரோடு ஸ்டாலின் குணசேகரனிடம் "எட்டயபுரம் சென்றுவிட்டு ஈரோடு போகலாமா?" என்கிறார் தொ.மு.சி. அதேபோல எட்டயபுரம் பாரதி மணிமண்டபத்தின் முன் கார் வந்து நிற்கிறது.

மணிமண்டபத்துக்குள் சென்ற ரகுநாதன் ஓரிடத்தில் நிற்கிறார். அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறார் ஸ்டாலின் குணசேகரன்...

"இந்த மணிமண்டபத் திறப்பு விழாவுக்கு முதல்நாள், கோவில்பட்டிக்கு ஒரு கூட்டத்திற்காக ஜீவா வந்திருந்தார். அவரை இங்கு அழைத்து வந்திருந்தோம். இந்த இடத்தில்தான் ஜீவா உட்கார்ந்திருந்தார். மேடையில் ராஜாஜி போன்ற அரசியல் தலைவர்களும், திரைப்படக் கலைஞர்களும், எம்.எஸ். சுப்புலட்சுமி போன்ற பாடகர்களும் அமர்ந்திருக்கிறார்கள். கூட்டம் தொடங்கியது. நாங்கள் மேடை ஏறும்படி ஜீவாவைத் தள்ளிச் சென்றோம். ஜீவா மேடை ஏறினார். கூடியிருந்த கூட்டம் ஜீவாவைக் கண்டதும் ஆனந்தப் பெருக்கால் கைதட்டி மகிழ்ந்தது. மேடை ஏறியதும் ஜீவா பேசத் தொடங்கிவிட்டார்.

'பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே' என்று பாரதி பாடினானே, போச்சா? 'ஏற்பாரைப் பணிகின்ற காலமும் போச்சே என்று பாரதி எழுதினானே, போச்சா? ஏய்ப்போருக்கு ஏவல் செய்யும் காலமும் போச்சே' என்று பாரதி பாடினானே, போச்சா என்று கூட்டத்தை நோக்கிக் கேட்டார்.

அரங்கமே கர ஒலியால் அதிர்ந்தது. தொடர்ந்து ஜீவா முழங்க முழங்கக் கூட்டம் உணர்ச்சிக் கொந்தளிப்பில் தத்தளித்தது" என்று சொல்லிவிட்டு, கடந்தகால நிகழ்வுகளை அசைபோடுகிறார் தொ.மு.சி.ரகுநாதன்.

அதன்பின் பாரதியார் இல்லத்திலும், ரகுநாதன் நூலகத்திலும் நுழைந்த ரகுநாதன் பாரதியின் மேன்மை பற்றியெல்லாம் சிலிர்ப்போடு சொல்கிறார். பொன்னீலனும், ஸ்டாலின் குணசேகரனும் மெய்மறந்து கேட்டுக் கொண்டிருந்தனர்.

அங்கிருந்து கார் புறப்படுகிறது. ஈரோட்டில் நுழைகிறது. 2001 டிசம்பர் 11. தொ.மு.சி. ரகுநாதனுக்கு பாரதி விருது வழங்கும் விழா.

மக்கள் சிந்தனைப் பேரவைத் தலைவர் ஸ்டாலின் குணசேகரன் தொ.மு.சி. ரகுநாதனின் சிறப்புகளை எல்லாம் எழுச்சியோடு சொல்லி முடிக்கிறார்.

சேலம் தமிழ்நாடன், பொன்னீலன், பிரபஞ்சன், எஸ்.கே. மயிலானந்தன், டாக்டர் ஜீவானந்தம் மற்றும் சிலர் தொ.மு.சி ரகுநாதனின் சிறப்பியல்புகளையும் இலக்கியப் படைப்பாற்றலையும் வியந்து பேசிய பின், தொ.மு.சி. ரகுநாதனின் முழக்கம் தொடங்குகிறது.

"இந்தப் பரிசு கிடைத்தமைக்காக நான் பாரதிக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். பாரதி பதினோறாவது வயதில் பாரதி என்ற பட்டம் பெற்றான். அதற்குப் பிறகு அவன் உயிரோடு இருந்த காலத்தில் எந்தப் பரிசும் எந்தப் பட்டமும் எந்த விருதும் அவனுக்குக் கொடுக்கப்படவில்லை. உ.வே.சாமிநாதய்யருக்கு மகாமகோபாத்யாய பட்டம் கொடுத்தபோது, அவரைப் பாராட்டி பாரதி பாடியிருக்கிறான். ஆனால் பாரதி செத்த பின்பும் பல ஆண்டுகள் உயிர் வாழ்ந்த உ.வே.சாமிநாதய்யர், தாம் சாகிறவரை பாரதியை ஒரு கவிஞனாகவே ஒத்துக் கொண்டதில்லை.

1936 இல் சென்னையில் காங்கிரஸ் பொன்விழா நடந்தது. இந்தக் கூட்டத்தை ராஜகோபாலாச்சாரி ஏற்பாடு செய்திருந்தார். உ.வே. சாமிநாதய்யர்தான் தலைமை. கூட்டத்தில், "பாரதி மகாகவியா? இல்லையா? என்ற சர்ச்சை நடந்து கொண்டிருக்கிறது. நாங்கள் எல்லாம் அவனை மகாகவியாக ஒத்துக் கொண்டுவிட்டோம். பாரதி மகாகவிதான் என்ற வாசகம் உ.வே.சாமிநாதய்யர் வாயிலிருந்து வர வேண்டும் என்பதற்காகத்தான் இந்தக் கூட்டத்திற்கு அவரை தலைமை ஏற்கச் செய்திருக்கிறோம்" என்றார் ராஜகோபாலாச்சாரி.

உ.வே.சாமிநாதய்யர் பேசுகின்ற போது, "தமிழ்ப் பண்டிதன் ஒருவனை கவிஞன் என்று சொல்லுகின்ற வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது" என்று மட்டுமே குறிப்பிட்டார். இதைத்தவிர, பாரதி மகாகவி என்றோ, தேசிய கவி என்றோ அவர் சொல்லவே இல்லை.

"தாகூர் மதுரைக்கு வந்தது பற்றி எழுத்தாளர் பிரபஞ்சன் குறிப்பிட்டதைக் கேட்டீர்கள். 1913 இல் தாகூருக்கு நோபல் பரிசு கிடைத்துவிட்டது. ஆறு வருஷம் கழித்து 1919 ஆம் வருஷம் மதுரை டவுன் ஹாலில் தாகூருக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது. பாரதி, எட்டயபுரம் ராஜாவிடம் வேலை பார்க்க மறுத்து உதறிவிட்டு, காசிக்குச் சென்று, அதன்பின் சேதுபதி ஸ்கூலில் தமிழாசிரியராகப் பணியாற்றிவிட்டு, பின்பு பத்திரிகை ஆசிரியராகவும் பணி செய்தான். வறுமைநிலை. 1919 ஆம் ஆண்டு அதே எட்டயபுரத்துக்குத் திரும்பிப்போய் அதே எட்டயபுரம் மன்னரிடம் தமது பிழைப்புக்கு

வழி இல்லாமல் பாட்டெழுதி மனு கொடுத்துக் கொண்டிருந்தான் பாரதி. 1919 இல் தாகூருக்கும் பாரதிக்கும் ஏற்பட்ட நிலைமைகளைப் பாருங்கள்.

இன்று நாம் பாராட்டுகிற பாரதியின் எழுத்துகள், கனவுகள் எல்லாம் 1919க்குள்ளேயே அவன் எழுதி முடித்து விட்டான். ஆனாலும் தாகூரைப் பாராட்டுவதற்குத் தயாராக இருந்த தமிழன், பாரதியை இனம் கண்டு கொள்வதற்குக் கூட, தெரிந்து கொள்வதற்குக் கூட அன்றைக்குத் தயாராக இல்லை.

பாரதி மறைந்து இத்தனை ஆண்டுகளுக்குப் பின், இதைப் பாரதி யுகம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். சென்ற நூற்றாண்டின் முதல் இருபதாண்டுகள்தான் பாரதி உயிரோடிருந்தான். புதிய நூற்றாண்டில் நாம் காலடி எடுத்து வைத்திருக்கிறோம். ஆனால், இந்த நூற்றாண்டிலும் பாரதியுகம் தொடர்கிறது. எனென்றால், பாரதி கண்ட கனவு இன்னும் நனவாகவில்லை."

"எட்டயபுரத்தில் பாரதி மணிமண்டபத் திறப்பு விழாவில் ஜீவா பேசினார் பொன்னீலன் சொன்னார். அந்த மேடையில் எம்.எஸ்.சுப்புலட்சுமி, பாரதியின் 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே' என்ற பாட்ட பாடினாங்க. ஜீவா பேசும்போது, "பாரதி என்ன பாடினான்" என்று கேட்டார். 'ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோமென்று ஆடுவோமே' இதுதான் அவன் பாடியது. அவன் ஆனந்த சுதந்திரம்னு சொன்னானே தவிர ஆகஸ்டு சுதந்திரம்னு பாடலை என்றார் ஜீவா.

ஆடுவோமே என்றால், "யாரு ஆடணும்? சுதந்திரம் வந்திருச்சின்னு பள்ளன் ஆடணும், பறையன் ஆடணும். மூச்சுமுட்ட கள்ளக் குடிச்சுட்டு எனக்கு சுதந்திரம் வந்திருச்சுன்னு அவன் ஆடணும். அப்படி ஆடினா... அதுதான் சுதந்திரம். எம்.எஸ்.சுப்பு லட்சுமி பாடுறதினால சுதந்திரம் வந்திடவில்லை" என்றார் ஜீவா.

1947 ஆகஸ்டு 15 இல் சுதந்திரம் வந்தது. 1947 அக்டோபரில் எட்டயபுரத்தில் அந்த விழா நடந்தது. அப்ப ராஜகோபாலாச்சாரி வங்காள கவர்னரா இருந்தார். அவரையெல்லாம் மேடையில் வைத்துக்கொண்டு இவ்வாறு ஜீவா பேசினார்.

'விடுதலை விடுதலை' என்ற இன்னொரு பாடல். 'விடுதலை விடுதலை விடுதலை' என்று மூன்று விடுதலை போட்டானே பாரதி. அந்த விடுதலை என்ன? அரசியல் விடுதலை, பொருளாதார விடுதலை, சமூக விடுதலை. மகாகவி பாரதி, திலகர் வழியில்

வந்தவன். திலகர், அரவிந்தர் போன்ற தலைவர்கள் எல்லாம் இந்த நாடு வெள்ளைக்காரர்களிடமிருந்து விடுபட வேண்டுமென்று சொன்னார்களே தவிர, இந்திய நாடு சுதந்திரம் அடைந்தால் அதில் எந்தவிதமான பொருளாதார அமைப்பு இருக்க வேண்டும். எந்தவிதச் சமூக அமைப்பு இருக்க வேண்டும் என்ற கனவு திலகருக்கும் கிடையாது, அரவிந்தருக்கும் கிடையாது.

**'திறமை கொண்ட தீமையற்ற**
**தொழில் புரிந்து யாவரும்'**

என்பது அந்தப் பாட்டின் ஒரு வரி.

திறமையிருந்தா, கள்ளநோட்டுக் கூட அடிக்கலாம், கள்ளச் சாராயம் காய்ச்சலாம். அதனாலதான் தீமையற்ற தொழில் புரிய வேண்டும் என்கிறான் பாரதி. அடுத்த வரியில் தேர்ந்த கல்வி என்றும், ஞானம் என்றும் பாரதி குறிப்பிடுகிறான். கல்வி வேறு, ஞானம் வேறு.

பாரதி முதலில் சமூக விடுதலையைச் சொல்கிறான், அதன்பின் பொருளாதார விடுதலை பற்றிப் பேசுகிறான். கடைசியில் பெண் விடுதலை பற்றிச் சொல்கிறான்.

**'ஆண்களோடு பெண்களும்**
**சரிநிகர் சமானமாக**
**வாழ்வம் இந்த நாட்டிலே'**

என்கிறான்.

'சரி' என்றாலும், 'நிகர்' என்றாலும் சமானம் என்றாலும் அர்த்தம் ஒன்றுதான். ஆனால் பாரதி அப்படி அழுத்திச் சொல்கிறான். அரசியல் விடுதலை, சமூக விடுதலை, பொருளாதார விடுதலை எல்லாம் சேர்ந்து வர வேண்டும் என்றே ஒரே பாடலில் மூன்று முறை விடுதலை என்றான்.

பாரதிக்குப் பின் அப்படிப்பட்ட பார்வை நமக்கு இருந்ததா? ஒரு விஷயத்தில் நான் பெருமைப்படுகிறேன். ஈரோடு, பெரியார் பிறந்த பூமி. சமூக நீதிக்காக, சாதி ஒழிப்புக்காக, பெண் விடுதலைக்காகப் போராடிய ஒரு தலைவர் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்த பூமி இது. இது ஒரு புண்ணிய பூமி.

பாரதியே சொல்கிறான். 'கோவில், குளங்கள், காசி, ராமேஸ்வரம் போன்ற சேத்திரங்களே, நாட்டுக்காக உழைத்த தேசபக்தர்களின் பிறந்த, வாழ்ந்த இடங்களும் என்று.

நான் எட்டயபுரம் சென்றால் இராமேஸ்வரம் சென்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது. அதே மாதிரி ஈரோட்டில் பெரியார் பிறந்ததினால் இதுவும் சேத்திரம், புண்ணிய ஸ்தலம்னு நினைக்கிறேன்.

1942 இல் பெரியார் சுயமரியாதை இயக்கத்தை ஆரம்பித்தார். 1925 இல் இந்திய கம்யூனிஸ்ட் இயக்கம் ஆரம்பிக்கப்படுகிறது. பொருளாதார விடுதலைக்காக ஒரு இயக்கம். அரசியல் விடுதலைக்காக காங்கிரஸ் இயக்கம் என்று பாரதிக்கு இருந்த ஒட்டுமொத்தப் பார்வை இல்லாமல், ஒவ்வொரு விடுதலைக்கும் ஒவ்வொரு இயக்கம் இங்கே இருக்கிறது. இந்த மூன்று இயக்கங்களுக்குள்ளும் ஒற்றுமை கிடையாது. பெரியார் காங்கிரஸை விமர்சித்தார். கம்யூனிஸ்டுகளும் காங்கிரஸை விமர்சித்தார்கள். கம்யூனிஸ்டுகளுக்கும், சுயமரியாதைக்காரர்களுக்கும் மோதல் வந்து, ஜீவா சுயமரியாதை இயக்கத்தை விட்டு வெளியேறி சமதர்ம இயக்கத்தைத் தொடங்கினார். இந்தச் சூழல் இன்றும் தொடர்கிறது. இதைத்தான் நான் இங்கு சொல்ல விரும்புகிறேன்.

பாரதிக்கு இருந்த ஒன்றுபட்ட, ஒருமித்த கண்ணோட்டத்தை இன்றைக்கும் நாம் உணரவில்லை. இன்று பெண்ணியம், தலித்தியம் என்றெல்லாம் பேசப்படுகிறது. தலித்துகளைப் பற்றித் தலித்துகள்தான் எழுத வேண்டும், மற்றவர்களால் தலித்துகளின் பிரச்சினைகளைப் புரிந்துகொள்ள முடியாது என்றெல்லாம் இன்று பேசப்படுகிறது. தலித்திய எழுத்தாளர்கள் பற்றியும் பெண்ணிய எழுத்தாளர்கள் பற்றியும் ஆங்கிலத்தில் இப்போது நூல்கள் வெளிவருகின்றன.

இவர்களைப் பற்றி பிரிட்டிஷ் நாட்டிலுள்ள பதிப்பாளருக்கு என்ன அக்கறை? அதுக்கு அவர்கள் முக்கியத்துவம் கொடுப்பது ஏன்? இந்தியாவில் நடக்க வேண்டிய விடுதலைப் போராட்டம் ஒன்றுபட்ட போராட்டமாக இல்லாமல் எவ்வளவுக்கெவ்வளவு சண்டைகள் நடக்கிறதோ, ஆயிரமாயிரம் துண்டுகள் ஏற்படுகிறதோ அந்த அளவுக்குப் பிரிட்டிஷ்காரனுக்கு லாபம். முதலாளித்துவ வர்க்கத்துக்கு லாபம். அதனால்தான் அவன் இதைத்தொடர்ந்து செய்கிறான் என்று ஒரு விமர்சனம் உண்டு. அது எனக்குச் சரின்னுதான் படுது.

அதனால் பாரதி பற்றி நினைக்கின்றபோதும், இதுபோன்ற பாரதி விழாக்களில் கலந்து கொள்கின்ற போதும் பாரதிக்கு இருந்த ஒன்றுபட்ட கண்ணோட்டம், இந்த நூற்றாண்டிலாவது நமக்கு வந்தாக

வேண்டும் என்று சொல்லி, இங்கே வந்திருக்கும் தேசத் தியாகிகளையும் மற்றவர்களையும் வணங்கிச் செல்கின்றேன்" என்ற தொ.மு.சி ரகுநாதன் தமது ஏற்புரையை முடிக்கிறார்.

கூட்டம், தொ.மு.சி. ரகுநாதனின் அறிவார்ந்த சிந்தனை முழக்கத்தில் சிக்கித் தவிக்கிறது. விழா முடிகிறது.

முப்பது நாட்களுக்குப் பிறகு *31.12.2001* அன்று எதிர்பாராத விதத்தில் தொ.மு.சி., பாளையங்கோட்டையில் தமது மரணத்தைத் தழுவுகிறார். தமிழகம் முழுவதுமிருந்து அறிஞர்களும், அரசியல் பிரமுகர்களும், ஆய்வாளர்களும், படைப்பாளிகளும் பாளையங்கோட்டையில்...

தொ.மு.சி.ரகுநாதனின் உயிரற்ற உடல் கிடத்தப்பட்டிருக்கிறது. அவர் தலைமாட்டில் ஈரோடு மக்கள் சிந்தனைப் பேரவை கொடுத்த மார்பளவுள்ள பாரதி சிலை கொண்ட சீல்டும், பாரதி கைவிரித்தபடி நிற்கும் நினைவுப் பரிசும் இடம் பெற்றிருக்கிறது. கைவிரித்தபடி நிற்கும் பாரதி, தமது தவப்புதல்வனை ஆரத் தழுவிக்கொள்ளக் காத்திருப்பதுபோல் அந்த நினைவுப் பரிசு காட்சியளிக்கிறது.

ஈரோட்டைச் சார்ந்த தங்கப் பெருமாள் பிள்ளை ஏற்பாடு செய்த கருங்கற்பாளைய வாசக சாலையின் ஐந்தாம் ஆண்டு விழாவில்தான் மகாகவி பாரதி மனிதனுக்கு மரணமில்லை என்ற தலைப்பில் இறுதியாகப் பேசினார்.

மாமனிதன் தொ.மு.சி. ரகுநாதனும் ஈரோட்டைச் சேர்ந்த ஸ்டாலின் குணசேகரன் ஏற்பாடு செய்த மக்கள் சிந்தனைப் பேரவையில் பேசியதுதான், அவருடைய இறுதி முழக்கமாக அமைந்துவிட்டது. அடுத்து ஒரு கூட்டத்தில் பரிசு வழங்கியிருக்கிறார். ஈரோட்டில் பேசியது போல பேருரை நிகழ்த்தவில்லை.

ஆம் பாரதி சொல்லியது போல தொ.மு.சி ரகுநாதனுக்கு மரணமே இல்லை.

தொ.மு.சி., ரகுநாதன், திருச்சிற்றம்பலக் கவிராயர், என்று மூன்று பெயர்களில் அவருடைய படைப்புகள் வெளிவந்திருக்கின்றன. அவரை பாரதி ரகுநாதன் என்று நான்காவது பெயரிலும் அழைக்கவே நமக்குத் தோன்றுகிறது.

ஆம் பாரதி புகழ் இருக்கும் வரை தொ.மு.சி ரகுநாதனின் பெயரும் இருக்கும்.

## எண்ணுங்கால்...

பிறவி ரகசியத்தையும் மனித வாழ்க்கையையும் பற்றிய தத்துவ விசாரம், சிந்தனையாளர்களையும் இலக்கிய கர்த்தாக்களையும் பன்னெடுங்காலமாக அலைக்கழித்து வருவதாகும். மதவாதத் தத்துவாசிரியர்கள் பலரும் பிறவிப் பெருங்கடல் நீந்தும் மனிதப் பிறவியின் ரகசியத்தை, தொட்ட இடத்திலேயே வந்து முடியும் சக்கர வட்டத் தத்துவமாக, மனித வாழ்க்கையை மாற்ற மாற்ற, வளர்ச்சியற்ற ஒன்றாகக் கண்டார்கள். வாழ்க்கை என்பது தொட்ட இடத்தில் வந்து முடியும் சக்கர வட்ட மல்ல என்பதைக் கருத்துலகில் மாத்திரம் நின்று கண்ட சிவவாக்கியர் போன்ற சில சித்தர்கள் இந்தச் சக்கர வட்டத் தத்துவத்தை விஞ்ஞானப்பூர்வமாகத் தேர்ந்து தெளிந்து அதன் அடிப்படையில் உலகாயத வாதம் வளர்ந்தோங்கியுள்ள காலம் இது. மதவாதிகளின் கருத்தில் தொடங்கி, சிவவாக்கியர் முதலான சித்தர் வழியிலும் சென்று, பரிணாம வாதத்தின் பாதை வழியாக இயக்கவியல் தத்துவத்தை எட்டிப் பிடித்து, பிறவி ரகசியமும், மனித வாழ்க்கையும் அதன் வளர்ச்சியும், தொட்ட இடத்திலேயே வந்து முடியும் சக்கர வட்டமல்ல, மாறாகத் தொட்ட இடத்துக்குத் திரும்பவும் வாராமலே சுழலேணிபோல மேன்மேலும் வளர்ந்தோங்கிச் செல்வதாகும் என்ற கருத்தினைப் பிரதிபலிக்கிறது இக்கவிதை.

என்னையே யானோக்கி எண்ணுகிறேன், எண்ணுங்கால் –
கன்னி மகளொருத்தி காதலினால் அன்னவளை
முன்னி அரவணைத்து முலைத்தடத்தில் முகம்புதைத்து,
கன்னிச் சிறையுடைத்துக் கருப்பாதைக் காரிருட்டில்
என்னையே நானிழந்து ஏதுமிலா தாகிவிட
எண்ணுகின்றேன் யானோக்கி எண்ணுகின்றேன். எண்ணுங்கால்—

| | | | |
|---|---|---|---|
| குய்யத்துக் | கும்மிருட்டில் | குறுமணலாய், | சிறதுளியாய் |
| பையக் | குடிபுகுந்து, | பருத்துத் | திருண்டுருண்டு |
| கையாகிக் | காலாகிக் | கண்மூக்குத் | தானாகி |
| வையத்தில் | ஒருநாளில் | வந்தே | விழுந்தேனை, |
| கையெடுத்து | மெய்யணைத்து, | கனகமுலை | அமுதூட்டி, |
| நெய்யளைந்த | சிறுசோற்றை | நிலாக்காட்டி | வாயூட்டி, |
| என்னை | வளர்த்தாளின் | இடைநீங்கி, | மடிநீங்கி, |
| தன்னை | மெலவறிந்து, | தாய்ப்பாலின் | சுவைமறந்து, |
| என்னையே | யானறியும் | இளைஞனென | மாறியபின் |
| என்னையே | யானோக்கி | எண்ணுகிறேன். | எண்ணுங்கால்— |

| | | | |
|---|---|---|---|
| வந்தவொரு | வழிமறந்து, | மாரோடு | சேர்த்தமுதம் |
| தந்தவள்தன் | சுனைமார்புத் | தலத்தை | மறந்துவிட்டு, |
| சிந்தை | தனியாகி, | சித்தமெலாம் | நானாகி, |
| விந்தை | யுலகினிலே | வேற்றூரான் | போலாகிப் |
| பந்தமுற்றுச் | சொந்தமுறப் | பற்றுக்கோல் | காணேனாய் |
| வெந்தே | மனங்குமையும் | வேளையிலே, | காதலெனும் |
| மந்திரத்தில் | கட்டுண்டு | மங்கை | யொருத்தியின்மேல் |
| சிந்தைகொண்டு | அன்னவளைச் | சேரத் | துடிக்கின்றேன். |
| பிறந்ததொரு | தடம்மறந்த | பின்னரிந்தப் | பின்னாளில், |
| கறந்ததொரு | சுனைமறந்து | காலம் | கடந்தபின்னர், |
| துறந்துவந்த | இடம்தேடி | உள்ளில் | துடிப்பேற, |
| மறந்துவிட்ட | ஊர்நாடி | மனத்தில் | மயக்கேறப் |
| பண்ணுகின்ற | மருமத்தைப் | பகுத்தறிந்து | ஒளிகாண |
| எண்ணுகின்றேன் | யானோக்கி | எண்ணுகின்றேன். | எண்ணுங்கால்— |

| | | | |
|---|---|---|---|
| தொட்டுத் | தொடங்கியதோர் | தோற்பையை | என்றைக்கோ |
| விட்டுப் | பிரிந்தேகி | வெகுதூரம் | வந்தபின்னர், |
| வட்டமொன்றில் | நான்வளைய | வந்தாலும், | தொடக்கத்தில் |
| எட்டியே | வைத்திட்ட | இடம்வந்தே | சேர்வதுபோல், |
| ஒட்டை | உதறிவிட்ட | ஊருக்கே | மீண்டோடும் |
| கட்டையென | என்மனமும் | கருவூரைத் | திருவூராய் |
| நண்ணுவதேன்? | இந்நாளில் | நாடுவதேன்? | என்றாங்கே |
| எண்ணுகின்றேன் | யானோக்கி | எண்ணுகின்றேன். | எண்ணுங்கால்— |

புவனத்து வாழ்வியலின் புதைபொருளின் தன்மையினைக்
கவனித்துச் சிறிதேநாம் கருத்தூன்றிப் பார்க்குங்கால்
கருவடைந்த ஊருக்கே மறுபடியும் வருவதுதான்
உருவடைந்த உயிர்வாழ்வின், உலகியலின் ரகசியமோ?
மறுபடியும் வந்தவொரு மார்க்கத்தை நாடுவதால்
உறுபயனும் ஏதுகொலோ? உலகியலில் வளர்ச்சியெனப்
பெறுவதெலாம் வாயுமிழும் பேச்சோடு சரிதானோ?
கிறுகிறுக்கும் ராட்டினம்தான் கீழ்மேலாய் வந்தாலும்,
கடலலைகள் படைதிரண்டு கரைநோக்கிப் பாய்ந்தாலும்
திடலேறித் தாவாமல் திரும்பவுமே கடலுக்குள்
தாழ்ந்திறங்கித் தன்னுள் தானாகும் சாட்சியம்போல்,
வாழ்விதுவும் வளர்ச்சியின்றி வட்டமிட்டுச் சுற்றிவரும்
செக்கடியின் தடம்தானோ? திரிகையெனக் கிறுகிறுக்கும்
சக்கரமோ? ஸ்தம்பிதத்தின் சாயைதரும் மாயையைத்தான்
மண்ணுலகின் மானிடத்தின் வாழ்வென்றே நம்மனத்தில்
எண்ணினமோ? என்றேநான் எண்ணுகின்றேன் எண்ணுங்கால்—

வித்தொன்று முளைகீறி விகசித்து வெளியேறி,
எத்திக்கும் கிளைவீசி இலையாகித் தழையாகி
மொட்டாகிப் பூவாகி முற்றிக் கனியாகி
விட்டாலும் அக்கனியும் விதையாக மாறுவதேன்?
முட்டைச் சிறைக்குள்ளே மோனத் தவம்புரிந்த
நிட்டை தனைக்கலைத்து நெட்டுயிர்த்து வெளியேறி
வந்தவொரு சிறுகுஞ்சும் வளர்ந்துபெரி தானபின்னர்
முந்தைப் பழம்வீடாய், முட்டைக் கருச்சிறையாய்
மீட்டுமுர மாறுமொரு வேட்கையினால் ஒருதுணையைக்
கூட்டிக் களிப்பதற்காய்க் கொக்கரித்துத் திரிகுவதேன்?
ஐயிரண்டு மாதங்கள் ஆகியபின் கருவூரின்
பையகன்று கீழிறங்கிப் பாருலகில் வந்தவொரு
பாலகனும் வயதேறிப் பாலுணர்ச்சி மிக்கோங்கும்
வாலிபனாய், மானிடனாய் மாறியபின், மீட்டுமொரு
குறுமணலாய், சினைக்கருவாய், குழந்தையென மாறுதற்காய்
மறுபடியும் பிறப்பிடத்தே மாலாகி வாடுவதேன்?
ஒன்றுமற் றொன்றாகி, உருமாறி வேறாகிச்
சென்றிடுமென் றெண்ணுவதும் சிரிப்புக் கிடமான

மயக்கின் மருள்தானோ? மாற்றமெனச் சொல்வதெலாம்
இயக்கமிலா இயக்கத்தின் ஏமாற்றுப் பொருள்தானோ?
இன்றேல் இவ் வாழ்க்கைக்கே ஏதுபொருள்? ஏதுபொருள்?
என்றேயென் னுள்ளத்தில் எண்ணுகின்றேன். எண்ணுங்கால் —

ஒன்றே அதுவாக உருமாறும் மாயையல்லால்
ஒன்றுமற் றொன்றாக ஒருபோதும் ஆவதில்லை
என்றே வழக்காடி எதிர்க்கட்சி பேசுவதால்
நன்றேதும் உண்டாமோ? நானிலத்தில் எந்நாளும்
உறைந்த தயிர் பாலாக ஒருபோதும் ஆனதுண்டோ?
கறந்திழிந்த பால்மீண்டும் கனமுலைக்கண் போனதுண்டோ?
கருகிவிட்ட கட்டைதனில் கனல்புகுந்து மீண்டுமதை
விறகாக்கித் தந்தருளும் விந்தை நிகழ்ந்ததுண்டோ?
குடம்பை தனித்தொழியக் குஞ்சாகப் பெற்றிடுமோர்
உடம்பும் குடம்பையினுள் உற்றொடுக்கக் கண்டதுண்டோ?
விதையில் முளைத்தெழுந்து விகசித்த மரம்மீண்டும்
புதையுண்ட விதையாகப் போனதுண்டோ? வழக்காற்றில்
இன்றைக்கு நேற்றாகும் என்பதலால், இறந்தொழிந்து
சென்றிட்ட நாள் இன்றாய்த் திரும்பிடுமோ? இவ்வாறாய்
ஒற்றுமற்றொன் றாகிடுமோர் உலகியலின் உண்மையினை
நன்றுணர்த்தும் சான்றுகளை நாமுணர மாட்டோமோ?
ஒன்றுமற்றொன் றாவதுவே உலகியலோ? வேறுண்டோ?
என்றும் நான் எனக்குள்ளே எண்ணுகின்றேன். எண்ணுங்கால்—

வித்தொன்று முளைத்தோங்கி விகசித்து விளைந்தக்கால்
கொத்தாகப் பலவித்தும் குலைதள்ளிக் காய்க்காதோ?
பெட்டைச் சிறுகோழி முட்டைவழிப் பிறந்தாலும்
பிட்டி வலியெடுக்கப் பெறுங்காலம் அக்கோழி
ஒற்றைக்கோர் முட்டையுடன் ஒய்தல் வழக்காமோ?
பெற்றமுட்டை அத்தனையும் குஞ்சாகப் பெயராதோ?
வித்தும் மலையாகும் வெடித்துவந்த குஞ்சுகளும்
பத்தாகும் நூறாகும் பதினா யிரமாகும்
ஒன்றே பலவாகும் உருவான பற்பலவும்
குன்றாகும் மலையாகும் இமயக் கொடுமுடிபோல்
நின்றோங்கும் எனுமிந்த நியதியுல கறியாதோ?

பற்பலவாய் ஒன்றாங்கே பல்கிப் பரந்துலகில்
உற்பவித்த பின்னதுவே ஒன்றாய் ஒடுங்கிடுமோ?
பலவாகிப் பலவாகிப் பரவுபரி ணாமத்தால்
நிலவுகின்ற உலகியலின் நியதியினை நாமறிந்தால்,
ஒன்றே பலவாகிப் பலவற்றில் உறைந்தொளிரும்
பொன்றாத பேரியக்கப் பொருளதனைப் புரிந்திட்டால்,
நான்ஒருவன் ஆனாலும் நாமறியாக் காலமுதல்
மாநிலத்தில் உற்பவித்த மானிடமாம் சாகரத்தில்
ஒருதுளியாம் என்றறியும் உணர்வுதனைப் பெற்றுவிட்டால்,
வருநாளில் இத்துளியே வழிவழியாய் வளர்ந்தோங்கிப்
பெருகும், பெருகியொரு பெருங்கடலாய் மாறுமென்று
கருதுகின்ற பக்குவத்தைக் கண்டறிந்து கொண்டுவிட்டால்,
என்னில் உலகதனை, உலகியலில் என்னிடத்தை
உன்னி உணர்ந்தறியும் உள்ளொளியை ஏற்றிவிட்டால்,
முன்னைப் பழமையிலும் முளைத்துவந்த வாரீசாய்,
பின்னைப் புதுமைக்கும் பீடிகையாய் நான்வாழ்ந்தால்,
என்றைக்கே வாழ்ந்தாலும் என்றென்றும் வாழேனோ?
என்றெண்ணிப் பார்க்கின்றேன். எண்ணுங்கால்... எண்ணுங்கால்...



# கடிதம்

சென்னை
31.7.45

அன்புள்ள பாப்பாவுக்கு,

துறைவன் மூலம் நீ அனுப்பிவைத்த பலகாரம் ரொம்ப நன்றாயிருந்தது. எல்லாமே எனக்குப் பிடித்தவை. கனி (நண்பர்) அதை ருசி கூடப் பார்க்காமல் உனக்கு என்னென்னமோ எழுதியிருப்பார். உண்மையில் ரொம்ப நன்றாயிருந்தது. நானும் நண்பர் அழகிரிசாமியும் தமிழன் பண்பாடு கெடாமல் தின்றோம். இரண்டு மூன்று நாட்களிலேயே காலி பண்ணிவிட்டோம்.

உன், கல்கி சிறுகதைப்போட்டி விஷயம் என்னவாயிற்று? துறைவன் மட்டும் ஒரு கதை அனுப்பியிருக்கிறார். நான் அனுப்பவில்லை. கலைமகள் ரூ. 1000 பரிசுப் போட்டியில் கலந்து கொள்ளலாம் என்றிருக்கிறேன். சிறுகதைகளை விட நாவல் எனக்குப் பிடித்திருக்கிறது.

கருணாகரன் எப்படியிருக்கிறான்? எல்லோருக்கும் என் வணக்கம். உன் பலகாரத்துக்கு நன்றி. நன்றி தெரிவிப்பதே மீண்டும் மீண்டும் உதவி பெறுவதற்குத்தான் என்பது உனக்குத்தான் தெரிந்திருக்குமே! உன் ரசமான பதிலை எதிர்பார்க்கிறேன். உன் கதைகளை அனுப்பு. நான் பார்த்து வெளியிடச் செய்கிறேன்.

அன்புடன்

குட்டியப்பா

# மகாத்மா

*யோனே நோகுச்சி பிரபல ஜப்பானியக் கவிஞர். இவர் தம் தாய்மொழியாகிய ஜப்பானிய மொழியில் மட்டுமில்லாமல், ஆங்கிலத்திலும் பாடல்கள் இயற்றியிருக்கிறார். 18 வயதில், அமெரிக்கா சென்று 13 ஆண்டுகள் அங்கு தங்கினார். இந்தியாவுக்கும், ஏன் சென்னைக்குமே கூட இவர் வந்து சென்றார். இந்தியாவைப் பற்றி ஜப்பானிய மொழியிலேயே ஒரு நூலும் எழுதியிருக்கிறார். இவருடைய கவிதை, பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. மகாத்மா காந்தியடிகளை நேரில் சந்தித்த இந்தக் கவிஞர், நமது தேசபிதாவுக்குச் சூட்டிய பாமாலையே இது.*

**காணவும் தெரிகிலாத**
**களிப்புறு விஜய ரூபம்**
**மாணுயர்ந்தோங்க, அன்பின்**
**வெற்றிசேர் மாட்சி ஓங்க**
**தானையும் சேனையுமின்றித்**
**தமியனாய்ப் பொருது நின்றான்**
**வானவர் போக பூமி**
**வாயிலை அருகி வென்றான்.**

**சிங்கவெங் குருளை யென்ன**
**அன்னவன் செருவில், கையில்**
**சங்கெடுத்தூதும் நாத**
**சாகரம் முன்னிப் பாய்ந்து**
**பொங்குறும் எதிரொலித்துப்**
**பொருதிடும் பொருத ஆங்கே**
**கங்குலின் நரக வாயில்**
**கதவங்கள் பொடிந்து வீழும்.**

பலமிலா யாக்கை, ரத்தப்
புசையிலா உடலம் எனினும்
உலைவுறா மலையின் நெஞ்சம்
உருக்கெனக் கொண்டோன் என்றும்
நிலைபெறும் உள்ள வன்மை
நெறியதால் உலகை யெல்லாம்
குலைவுறச் செய்யும் ஆற்றல்
கொண்டவன் காந்தி எம்மான்.

மண்ணதில் புதைந்து வீழ்ந்த
மன்பதை உரிமை தானும்
தண்ணருள் அழிந்த அன்பின்
தகைமையும் அடிமை வாழ்வின்
எண்ணருங் கொடுமை தன்னை
எதிர்த்திட புரட்சி கீதம்
விண்ணுற முழக்கும் வீரம்
விளைத்தவன் காந்தி எம்மான்.

சாத்திரம் காணா உண்மைத்
தன்மையைத் தேடி, துன்பத்
தோத்திரம் பாடி வையத்
துயர், பசி துடைத்து மக்கள்
நேத்திரம் குளிர்வதென்றே
நெறியெனத் தெளிந்தான், கர்ம
யாத்திரை சென்றான் காந்தி
ஈடென யாரைச் சொல்வாம்.



# பாரதி சமுதாயப் பாடல்

பாரத சமுதாயம் வாழ்கவே! என்று தொடங்கும் பாரதியின் பாடலே, அவன் எழுதிய கடைசிப் பாடல் என்ற ஒரு கருத்து நிலவி வருகிறது. இதனை வலியுறுத்துவதுபோல் பாரதியின் நெருங்கிய தோழரும். தொழிற்சங்கத் தந்தையுமாகத் திகழ்ந்த வி. சக்கரைச் செட்டியார் *1.3.1922* அன்று தாம் எழுதிய ஆங்கிலக் கட்டுரையொன்றில் பின்வருமாறு குறிப்பிடுகிறார். "பாரதியின் கடைசித் தோற்றம் கடற்கரையில் நடந்த ஓர் ஒத்துழையாமைக் கூட்டத்திலாகும். அவரைத் தமது பாடல்களிலொன்றைப் பாடும்படி ஜனங்கள் கேட்டபோது அவர் 'பாரத சமுதாயம்' என்ற பாடலைப் பாடினார். அப்பாடல் துணிவான கருத்தும், உயர்ந்த மன எழுச்சியும் பொருந்தியதாகும்."

இக்கூற்றின் மூலம் நாமும் பாரதியின் கடைசிப் பாடலாக இதனைக் கொள்வதில் தவறில்லை. இதுவே இறுதிப் பாடலாயின் வளர்ந்தோங்கிச் சிறந்த பாரதியின் அறிவின் முதிர்ச்சி நிலையில் அவதரித்த பாடல் இது என்றும் நாம் கொள்ளலாம். மேலும் இப்பாடலுக்கு ஒரு தனிச்சிறப்பும் உண்டு. இந்தப் பாடலில்தான் பாரதி முதன்முறையாகத் தமிழுக்கே புதியதான பொதுவுடைமை என்ற சொற்சேர்க்கையைப் பிரயோகித்துள்ளான். மேலும், இந்தப் பாடலில்தான் அவன் பாரத மக்களைப் பாரத சமுதாயமாகக் காண்கிறான். எனவே இந்தப் பாடல் நமது ஆழ்ந்த சிந்தனைக் குரியது. இதனை நாம் எவ்வாறு புரிந்துகொள்கிறோமோ, அதனைப் பொறுத்து இதன் சிறப்பையும் நாம் உணர்ந்துகொள்ள முடியும். இந்தக் கருத்தோடு நாம் பாடலில் புகுவோம். எடுத்த எடுப்பில் பாரதி பாரத சமுதாயத்தை வாழ்த்துகிறான். வாழ்கவே என்று தான் கொடுக்கும் குரலை எதிரொலிக்கும் கோஷமாக வாழ்க! வாழ்க என்ற வார்த்தைகளும் பிறக்கின்றன. இவற்றிலிருந்து,

**பாரத சமுதாயம் வாழ்கவே – வாழ்க வாழ்க**
**பாரத சமுதாயம் வாழ்கவே! ஜய ஜய**

என்ற ராஜ கம்பீரமான பல்லவி பிறந்து விடுகிறது.

ஆம், பாரத சமுதாயம் வாழவேண்டும். பாரத நாட்டிலுள்ள ஒரு சிலரல்ல. சமுதாயத்திலுள்ள அனைவரும் வாழவேண்டும். அவ்வாறு வாழ வழியென்ன? எப்படிப்பட்ட வாழ்க்கை முறையினால் பாரத சமுதாயம் ஜெய கோஷமிட்டு வாழ முடியும்? இந்தச் சிந்தனையிலிருந்து பாட்டின் அனுபல்லவி பிறக்கின்றது. ஆம். வாழ வழியுண்டு. எந்த வழி?

**முப்பது கோடி ஜனங்கள் சங்கம்**
**முழுமைக்கும் பொதுவுடைமை**
**ஒப்பில்லாத சமுதாயம்**
**உலகத்துக்கொரு புதுமை!**

பாரதி திட்டவட்டமாகக் கூறி விடுகிறான், பொதுவுடைமைதான் அதற்கான வழி என்று. இந்தப் பொதுவுடைமையையும் அவன் எப்படிக் காண்கிறான்? சமுதாயம் என்பது நெல்லிக்காய் மூட்டையைப் போல இல்லாமல் ஜனங்களின் சங்கமாக இருக்க வேண்டும். அத்தகைய கட்டுப்பாடும் ஒற்றுமையும் கொண்ட சமுதாயத்தின் முழுமைக்கும் பாரத நாட்டுச் செல்வங்கள் பொதுவுடைமையாக வேண்டும். பொதுவுடைமை என்பது ஒரு சில துறைகளில் மட்டுமல்ல. எல்லாத் துறைகளிலும் பொதுவுடைமை. அவ்வாறு எல்லாத் துறைகளிலும் தனியுடைமையின் பிடிப்பு தகர்ந்து பொதுவுடைமை உருவாகும் போது, அந்தச் சமுதாயம் ஒப்பில்லாத சமுதாயமாக மாறும், உலகத்துக்கொரு புதுமையாக, இதுவரை உலகம் காணாத புதுமையாகத் திகழும் என்பது பாரதியின் நம்பிக்கை.

ஆனால், இத்தகைய சமுதாயத்தை, புதுமையை உருவாக்கத் தடையாக இருக்கும் சக்திகள் என்ன? இதனை எண்ணும்போது, தனியுடைமையின் பேரால் இந்த உலகத்தில் மனிதனை மனிதன் சுரண்டி வாழும் முதலாளித்துவ வாழ்க்கை பாரதியின் கண்ணில் தோன்றுகிறது. இந்தச் சுரண்டல் மனிதனுக்கு மனிதனை எதிரியாக்குகிறது. மனிதனுக்கு மனிதனை அடிமையாக்குகிறது. மனிதனுக்கு மனிதனை துன்பத்துக்குள்ளாக்குகிறது. சுரண்டலினால் மனிதர்கள் துன்பப்படுகிறார்கள். வறுமைப்படுகிறார்கள். உணவுக்குக் கூட வழியின்றி நோகின்றார்கள். எனவே சமுதாயம் முழுவதும் வாழ வேண்டுமென்றால், பிறர் உழைப்பை, உணவை, உடையை,

உரிமையைத் திருடுகின்ற, சட்டப்பூர்வமாய்ச் சுரண்டுகின்ற இந்த வழக்கம் ஒழிய வேண்டும். இந்த எண்ணத்திலிருந்து பாரதியின் சரணங்கள் பிறக்கத் தொடங்குகின்றன. வாழ்கின்ற பாரத சமுதாயத்தில்,

**மனிதர் உணவை மனிதர் பறிக்கும்**
**வழக்கம் இனியுண்டோ?**
**மனிதர் நோக மனிதர் பார்க்கும்**
**வாழ்க்கை இனியுண்டோ? – புலனில்**
**வாழ்க்கை இனியுண்டோ? – நம்மிலந்த**
**வாழ்க்கை இனியுண்டோ?**

ஆம். மனிதனை மனிதன் சுரண்டுகின்ற வாழ்க்கை மனித வாழ்க்கையில்லை. அது புலனில்லாத, உணர்ச்சியில்லாத, அறிவில்லாத விலங்கு வாழ்க்கை. வாழ்கின்ற பாரத சமுதாயத்துக்கு அத்தகைய வாழ்க்கை உதவாது. எனவே அந்த வாழ்க்கை முறையை நாம் விட்டொழிக்க வேண்டும். "சரி, இந்த உலகத்தில் சிலர் வாழப் பலர் வாடுகிறார்கள் என்று சொன்னால் அதற்குக் காரணம் சுரண்டல் முறை மட்டும்தானா? உலகத்தில் எல்லோருக்கும் உணவு வழங்கக் கூடிய அளவுக்கு உலகில் உணவு உற்பத்தியுண்டோ? இயற்கை நமக்குப் போதுமான உணவை வழங்குவதில்லையே. எனவே வறுமை என்பதே இயற்கைத் தாய் விதித்த தவிர்க்க முடியாத தலைவிதிதான்" என்று சிலர் வாதம் பேசுவதும் பாரதியின் காதில் விழுகிறது. உடனே அவனுக்கு ஆத்திரம் பிறக்கிறது. பாரத பூமி அப்படியொன்றும் மலடு தட்டிப் போய்விடவில்லை என்று சுட்டிக்காட்ட முனைகிறான்.

**இனிய பொழில்கள் நெடிய வயல்கள்**
**எண்ணரும் பெருநாடு**
**கனியும் கிழங்கும் தானியங்களும்**
**கணக்கின்றித் தரும் நாடு – இது**
**கணக்கின்றி தரும் நாடு – நித்தநித்தம்**
**கணக்கின்றித் தரும் நாடு.**

எல்லோருக்கும் எல்லாம் என்றதும் எல்லோருக்கும் அரை வயிறு என்று அர்த்தமில்லை. அரை வயிறு உண்ண வேண்டிய அவசியமுமில்லை. ஏனெனில் பாரத நாடு வற்றாத செல்வ வளத்தைத் தரக் கூடியது. அதுவும் ஏதோ சீசனுக்குச் சீசன் தருகின்ற நாடு என்று எண்ணவேண்டாம். நித்த நித்தம் தருகின்ற நாடு. எனவே இந்த நாட்டில் பஞ்சமும் வறுமையும் என்றால், அத்ற்குக் காரணம் நம்மிடமுள்ள மனிதர் உணவை மனிதர் பறிக்கும், மனிதர் நோக மனிதர் பார்க்கும் புலனில் வழக்கம்தான். ஆதலால் இந்த

வழக்கத்தை அடியோடு தொலைத்துத் தலைமுழுக தாம் என்ன செய்ய வேண்டும்? இதற்குப் பாரதி பின்வருமாறு வழி சொல்கிறான்.

**இனியொரு விதிசெய்வோம் – அதை**
**எந்த நாளும் காப்போம்**
**தனியொருவனுக்கு குணவிலையெனில்**
**ஜகத்தினை அழித்திடுவோம்.**

இங்கேதான் நாம் பாரதியின் புரட்சியை, தமிழ் இலக்கிய உலகம் அதுவரையில் காணாத ஒரு புதுமையைக் காண்கிறோம். புதிய குரலைக் கேட்கிறோம். எப்படி? நாம் வாழ்வதற்குப் பாரதி புதிய விதி கூறுகிறான். இதுவரையில் எத்தனையோ சட்ட திட்டத்தை நாம் கண்டுவிட்டோம். அர்த்த சாஸ்திரம் முதலிய பல்வேறு சட்ட நூல்களிலிருந்து இந்தியன் பீனல் கோடு வரையிலும் கண்டுவிட்டோம். இவை எவையும் சமுதாயம் முழுமைக்கும் வாழ்வளிக்கவில்லை. வாழ்வை உத்தரவாதம் செய்யவில்லை. எனவே இனி நாம் ஒரேயொரு சட்டத்தை மட்டும் செய்துகொள்வோம். அது என்ன? இந்த உலகத்தில் எந்தவொரு தனி மனிதனும் மனிதனாகப் பிறந்த எவனும், உணவில்லை என்ற காரணத்தால் பட்டினி கிடக்கக்கூடாது. கிடந்தால் உலகத்தையே சுடுசாம்பலாக்குவோம் என்பதுதான் அந்தச் சட்டம். ஆனால் வாழ்க, வாழ்க என்ற வாழ்த்து வந்த பாடலில் இப்படி அபசுரம்போல் அழித்திடுவோம் என்று பாடலாமா? ஆனால் இந்த எதிர்மறைச் சொல்தான் பாரதியின் புரட்சிக்கு வேகம் கொடுக்கிறது. நாம் உலகை அழிக்க விரும்பவில்லை. காக்கவே விரும்புகிறோம். எனவே உலகம் அழியாமல் காக்கப்பட வேண்டுமென்றால் இப்படியொரு கண்டிப்பான சட்டத்தை நாம் உருவாக்கிக் கொள்வதோடு, அதற்குக் கண்ணாடிச் சட்டம் போட்டு, மாலையிட்டுக் கும்பிட்டுக் கொண்டிராமல், அதனை எந்த நாளும் காக்கவும் வேண்டும். அவ்வாறு காத்தால், அதாவது உலகத்தில் வறுமை எவ்விதத்திலும் தலைதூக்காது நாம் பார்த்துக் கொண்டால், உலகமும், பாரத சமுதாயமும் வாழத்தான் செய்யும், வாழாமற் போகாது.

ஆனால் இந்தத் தரித்திரம் பிடித்த நாட்டில் ஆன்மிகச் செல்வத்துக்கு மட்டும் குறைச்சலில்லை. மனிதர்கள் எல்லோரையும் மகேசுவரனின் அவதாரங்களாகக் கூறும் மலட்டு வேதங்களுக்கும், சாஸ்திரங்களுக்கும் குறைச்சலில்லை. மனிதனுக்கு வயிறு நிறைந்தால் மட்டும் போதாது. இதயமும் நிறையவேண்டும் என்று இந்த வேதங்கள் கூறுகின்றன. ஆம். உண்மைதான். ஆனால் இதயம் மட்டும் நிரம்பி, வயிறு நிரம்பாமல் இருக்கலாமா? “வயிற்றிலே ஈரத்

துணியைக் கட்டிக் கொண்டிருப்பவனிடம் எந்தச் சமயப் பிரச்சாரமும் எடுபடாது'' என்றான் விவேகானந்தன். அவன் வழியிலே வந்த பாரதி அதையும் எண்ணிப் பார்க்கிறான். உணவுப் பிரச்சினை தீர்ந்து விடுவதோடு பொதுவுடைமை வந்து விடுவதில்லை. மனித இதய வளர்ச்சியும் பெறவேண்டும். கலாச்சார மேம்பாடும் அடைய வேண்டும். இதய வளர்ச்சியைக் கருதிய நமது நாடு மனிதர்களை யெல்லாம் ஆண்டவனின் அவதாரங்களாகப் பார்த்தது. இதனை நினைவு கூர்கிறான் பாரதி.

**"எல்லா உயிர்களிலும் நானே இருக்கின்றேன்"**

என்றுரைத்தான் கண்ணபெருமான்.

இந்தக் கீதாசாரியனின் கூற்று உண்மையானால், இந்த உலகத்தில் பிறந்த எல்லோரும் கண்ணன் அவதாரங்கள்தான். ஆனால், அந்த அவதாரங்கள், அந்தக் கடவுளர்கள் பசியாலும் பிணியாலும் வாடலாமா? எனவே அவர்களைக் கடவுள் நிலைக்கு, அமர நிலைக்கு உயர்த்த வேண்டுமானால், முதலில் அவர்களை ஈனக் கவலை இருளிலிருந்து விடுபடச் செய்ய வேண்டும். அதற்குப் பொதுவுடைமை முதற்படி. எனவே அமரநிலை, தெய்வத்தன்மை பெறுவதற்கு, மிருகமாக வாழும் மனிதன் மனிதநிலைக்கு வருவதோடு மட்டுமல்லாமல், தேவநிலைக்கு உயர்வதற்கும் பொதுஉடைமை தேவை என்று காண்கிறான் பாரதி. இதிலிருந்து அடுத்த அடிகள் பிறக்கின்றன.

எல்லாரும் அமரநிலையை எய்தும் நன்முறையை

**இந்தியா உலகிற் களிக்கும் – ஆம்**
**இந்தியா உலகிற் களிக்கும் – ஆம், ஆம்**
**இந்தியா உலகிற் களிக்கும்.**

இவ்வாறு ஆம், ஆம், ஆம் என்று முக்காலும் கூறிப் பொதுவுடைமைத் தத்துவம் இந்திய நாட்டு மரபுக்கும் பண்பாட்டிற்கும் உகந்ததுதான் என்று உறுதி கூறுகிறான் பாரதி. இறுதியில் அவன் தனது பாட்டில் தான் வகுக்கின்ற இந்தப் புதிய பாரத சமுதாயம் எப்படிப்பட்டது என்பதை எல்லோரும் புரிந்துகொள்ளும் விதத்தில் பாடத் தொடங்குகிறான்.

தம்பி! உனக்கு இனம், குலம் என்று சொன்னால்தான் புரியுமா? ஜாதி, சமயம் என்றால்தான் புரியுமா?

ஐயா உங்களுக்கு எடைக்கல்லும் தராசும்தான் புரிகிற பாஷையா? விலையும் மதிப்பும்தான் விளங்கக்கூடிய மொழியா?

உங்களுக்கு அரசனில்லாத ஆட்சியைப் பற்றி கற்பனையே செய்ய முடியாதா? அப்படியென்றால் நான் வகுக்கின்ற புதிய சமுதாயத்தை, நீங்களும் புரிந்துகொள்ளுங்கள் என்று சொல்வது போல் பின்வருமாறு பாடுகிறான்.

**எல்லாரும் ஓர் குலம் எல்லாரும் ஓர் இனம்**
**எல்லாரும் இந்திய மக்கள்.**
**எல்லாரும் ஓர் நிறை எல்லாரும் ஓர் விலை**
**எல்லாரும் இந்நாட்டு மன்னர் – ஆம்**
**எல்லாரும் இந்நாட்டு மன்னர்!**

எல்லாரும் எல்லாரும் என்று அழுத்தியழுத்திப் பாடித் தனது பாடலை அருமையாக முடிக்கிறான். பாரதி கண்ட பாரத சமுதாயக் கனவு திட்டவட்டமான சிந்தனை வளர்ச்சியோடும், தெளிவோடும், தர்க்க ரீதியாக வளர்ச்சி பெற்றுச் சிகரம் போல் பொலிவு பெறுவதை இந்தப் பாட்டில் நாம் காண்கிறோம்.

அற்புதமான பாட்டு இது. இந்த விளக்கத்தோடு பாரதியின் இந்தப் பாடலை அணுகிப் படியுங்கள். நான் கூறாத, எனக்குப் புலப்படாத பல உண்மைகள் உங்களுக்குப் புலப்படலாம்.



தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் எழுதிய
**இந்தியக் கலைக் களஞ்சியம்** நூல் வெளியீட்டு விழாவில்
முதல் பிரதியை பெயரன் பாலபாஸ்கர் பெறுகிறார்

## கலைக் களஞ்சியக் குழு

திருமதி சாவித்திரி துரைராஜ்

திருமதி உமா நடராஜன்

திரு. ஜவஹர் கணேஷ்

திருமதி சாருபாலா தொண்டைமான்

திருமதி சித்ரா வெங்கடாசலம்

திரு. சண்முக பாஸ்கர்

திருமதி தேவகி ராமலிங்கம்

ஓவியக் கவிஞர் அமுதபாரதி

திருமதி சரோஜினி சுப்பிரமணியம்

திருமதி ராஜேஸ்வரி நடராஜன்

